# கல்கி
## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

உ

# ஸ்ரீ ராமபவன் ஹோட்டல்

## 46, தம்பு செட்டித் தெரு — சென்னை-1

சென்னை நகரில் மிகப் பரிசுத்தமாக நடத்தப்பட்டு
வரும் ஹோட்டல் எனத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது



29-9-57ல் பீபிள்ஸ் பார்க் ஸ்டேடியத்தில் கார்ப்ப
ரேஷன் நடத்திய விழாவில் ஸ்ரீ ஏ. ராமசாமி முதலியார்
மேற்படி ஹோட்டல் உரிமையாளர் ஸ்ரீ ஆர். எஸ்.
நாராயணசாமி அய்யருக்குக் கேடயத்தை வழங்குகிறார்

★

ஸ்ரீ ஆர். எஸ். நாராயணசாமி அய்யர், ஸ்ரீ ஆர். எஸ். கணபதி அய்யர்
இவர்களால் தயாரிக்கப்படும்

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் 777 பிராண்ட் உணவுப் பொருள்களாவன:**

ஊறுகாய்கள், அப்பளாம், வத்தல், வடாம், சாம்பார் மற்றும்
ரஸப் பௌடர், புருட் ஸ்குவாஷஸ், ஜாம்ஸ் முதலியன

**ரவா தோசை ரெடி மிக்சர்**

*இதைத் தண்ணீரில் கலந்ததும் தோசை செய்யலாம். உப்போ, காரமோ சட்டினியோ எதுவும் தேவையில்லை. விலை மிகவும் சகாயம். இவைகள்*

தி நேஷனல் ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷன் (பிரைவேட்) லிட்.
(இந்திய அரசாங்கத்தினரால் நடத்தப்படுவது)
மூலம் விநியோகிக்கப்படுகிறது

இந்திய அரசாங்க டைரக்டரேட் ஆப் மார்க்கெட்டிங் & இன்ஸ்பெக்ஷன் புது டில்லி குறிப்பிட்டுள்ள கனிவர்க்க தயாரிப்பு ஆர்டரில் நிர்ணயிக்கப் பட்டுள்ளபடியே எங்கள் தயாரிப்புகள் அனைத்தும் செய்யப்படுகின்றன

போன்: 3165 — தந்தி: 'COCHUTNI'



மலர் 17 | இதழ் 15

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

ஹேவிளம்பி | ஐப்பசி 25

# ஸ்டர்லிங் நிதியும் அவசரச் சட்டமும்

பாரத நாட்டின் நிதிமந்திரி டி. டி. கே. அமெரிக்காவிலிருந்து திரும்பியதிலிருந்து, அவர் சாதித்து வந்திருக்கும் மௌனத்தைப் பலர் பலவிதமாக அர்த்தம் செய்து கொண்டனர். தம்முடைய முயற்சியில் ஓரளவு வெற்றி பெற்றிருப்பதனால்தான் இப்படி மௌனம் சாதிக்கிறார் என்றனர் சிலர்.

'போன காரியம் ஒன்றும் பலிக்கவில்லை போலிருக்கிறது. அதனால்தான் மௌனமாக இருக்கிறார்' என்றனர் வேறு சிலர்.

இந்தச் சமயத்தில் நமது இந்திய ஜனாதிபதி ஒரு அவசரப் பிரகடனம் செய்திருக்கிறார். ரிஸர்வ் பாங்கு, தனது ஸ்டர்லிங் நிதியை 85 கோடி ரூபாய் வரைக்கும் குறைத்துக் கொள்ளலாம் என்று உத்தரவு பிறப்பித்திருக்கிறார்! இதிலிருந்து சமீபத்தில் அமெரிக்காவிடம் எத்தகைய நிதி உதவியையும் எதிர்பார்ப்பதற்கில்லை. எதிர்பார்க்காவிட்டாலும் ஓரளவு உதவி வந்தால் வியப்பாக இராது. அந்த விஷயம் அமெரிக்காவின் அரசியல் கொள்கையைப் பொறுத்தது. இந்தியாவைத் தன் தாட்சண்யத்துக்கு உட்படுத்தி வைக்க அமெரிக்க சர்க்கார் பிரியப்படாமல் போகாது.

*　　*　　*　　*

ஜனாதிபதியின் அவசரப் பிரகடனத்தின் பொருளை விளக்குவோம்.

நம் நாட்டில் காகித நோட்டுகள் புழங்குகின்றன அல்லவா? இந்த நோட்டுகள் ரிஸர்வ் பாங்கியின் மூலமாக வெளியிடப்படுகின்றன.

இவ்வளவு கோடி ரூபாய் நோட்டுகள் வெளியிட்டால் அதற்கு ஈடாக இத்தனை கோடி ரூபாய் பெறுமானமுள்ள தங்கக் கட்டிகள் பாங்கியில் முதலீடு செய்ய வேண்டும் என்றும், அந்நிய மூலதனமாக பிரிட்டிஷ் பாங்கியில் இவ்வளவு கோடி ரூபாய் நிதியிருக்க வேண்டும் என்றும் ஒரு கணக்கு இருக்கிறது.

நமது நாட்டில் செலாவணியிலுள்ள பணத்துக்குத் தகுந்தாற்போல் வெளிநாட்டு பாங்கியில் ஸ்டர்லிங் நிதியாக எவ்வளவு இருக்க வேண்டுமோ அதற்கு மேலாகவே இருந்து வந்தது!

சென்ற மகாயுத்தத்தின்போது இந்திய மக்கள் செய்த உதவி [பல ஆயிரம் கோடி ரூபாய் ஸ்டர்லிங் நிதி உருவத்தில் இருந்தது!

சென்ற பத்து ஆண்டுகளாகப் பலப்பல காரியங்களுக்காக அந்த மூலதனத்தைப் பெருமளவு செலவழித்துக்கொண்டே வந்து விட்டோம்.

மேனாட்டிலிருந்து பல சாமான்கள் யந்திரங்கள் இறக்குமதி செய்கிறோம். அவற்றுக்கு அன்னியச் செலாவணியிலேயே பணம் கொடுக்க வேண்டியிருப்பதால் 'கிடு கிடு' என்று ஸ்டர்லிங் நிதி 321 கோடி ரூபாய்க்குக் குறைந்து விட்டது!

நமது நாட்டிலுள்ள நோட்டுகளின் புழக்கத்துக்குத் தகுந்தபடி ஜாமீன் மூலதனம் குறைந்தபட்சம் 300 கோடி அல்லது 400 கோடி ரூபாயாகிலும் வெளிநாட்டு பாங்கியில் இருக்க வேண்டும். அதாவது இன்னும் இருபத்தொரு கோடி ரூபாய்தான் ஸ்டர்லிங் நிதியிலிருந்து நியாயமாக வாங்கலாம். அதற்குக் கீழ் குறைப்பது உசிதமல்ல என்பது பொருளாதார நிபுணர்களின் அபிப்பிராயம்.

# கட்சி குதிரை ஏறியது!




ருஷ்யப் பாதுகாப்பு மந்திரி ஜுகாவை பதவியிலிருந்து தள்ளிவிட்டு ருஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சி ருஷ்ய ராணுவப் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொண்டிருக்கிறது. —சேப்தி

இன்னும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் பலப் பல யந்திரங்களுக்குப் பல மேல்நாடுகளில் ஆர்டர்கள் செய்திருக்கிறோம். அவையெல்லாம் அடுத்த சில மாதங்களில் இறக்குமதியாகும் தறுவாயில் இருக்கின்றன.

இவற்றுக்கெல்லாம் தான் அன்னிய கடன் உதவி தேவைப்படுகிறது. இதை உத்தேசித்துத்தான் டி. டி. கே. யாத்திரை சென்றார். அந்த யாத்திரை உடனடியாகப் பலனளிக்காததால் ஜனாதிபதி அவசரச்சட்டம் பிறப்பிக்க வேண்டியதாகி விட்டது!

அதாவது, இப்போது நம்மிடமுள்ள 321 கோடி ரூபாய் ஸ்டர்லிங் நிதியிலிருந்து ரிஸர்வ் பாங்கு 236 கோடி ரூபாய் வரை இறக்குமதிகளுக்காக அன்னிய செலாவணியைச் செலவழிக்க அனுமதிக்கலாம் என்பதுதான் இந்தப் பிரகடனத்தின் பொருள்.

இரண்டாயிரம் ரூபாய் மதிப்புள்ள ஒரு வீடு இருந்தால் ஆயிரம் ரூபாய் ஒருவன் கடன் கொடுக்கிறான்! ஆக, ஆயிரம் ரூபாய்க்கு இரண்டாயிரம் ரூபாய் வீட்டை ஈடாகக் காட்ட வேண்டியிருக்கிறது.

செலாவணியிலிருக்கும் நோட்டுகளின் தொகை பொது ஜனங்களிடமிருந்து சர்க்கார் கடன் வாங்கியது போலத்தான்;

இன்று 1500 கோடி ரூபாய் நோட்டுகள் நாட்டில் புழக்கத்தில் இருக்கின்றன என்றால் இதற்குப் பழைய சட்டத்தின்படி நூற்றுப் பதினேழு முக்கால் கோடி ரூபாய் மதிப்புள்ள தங்கமும், ஸ்டர்லிங்நிதியில் 400 கோடி ரூபாயும் ஈடு காட்ட வேண்டியிருந்தது.

இப்பொழுது இந்த ஸ்டர்லிங் நிதி ஈட்டுத் தொகை எண்பத்தைந்து கோடி ரூபாய் காட்டினால் போதும் என்று ஜனாதிபதி சட்டம் செய்து விட்டார்.

இந்தப் புதுச் சட்டத்தினால் மேனாடுகளில் நமது கௌரவம் பாதிக்கப்படாது என்று நினைத்துத்தான் ஜனாதிபதி இந்த விசேஷ உத்தரவைப் பிறப்பித்திருக்கிறார்:

நம்முடைய நாட்டின் நாணயத்தைக் காப்பாற்ற வேண்டுமானால், மேனாட்டு ஏற்றுமதியை உயர்த்தி வர்த்தகத்தைப் பெருக்க வேண்டும்! அதே சமயத்தில் இறக்குமதிகளையும் குறைக்க வேண்டும்!

நமது தேசிலே, கைத்தறித் துணிகள், ஆலைத் துணிகள், முந்திரி, தோல் சாமான்கள் முதலிய பல பொருள்களுக்கு மேல் நாட்டில் நல்ல கிராக்கி இருக்கிறது! அதை நமது வர்த்தகப் பெருமக்கள் நல்லபடியாக உபயோகித்துக் கொள்ள வேண்டும்.

# தென்னாட்டின் ஒற்றுமைக் குரல்!




"ஆங்கிலமே அரசாங்க மொழியாக இருக்க வேண்டும்" என்று சாதி சமய அரசியல் வேறுபாடின்றித் தலைவர்களும் மக்களும் ஒரே குரலில் கேட்டுக் கொள்கின்றனர்.

---

இறக்குமதிகளைப் பற்றி நிதி மந்திரி டி. டி. கே. தொழில்-வர்த்தக மந்திரியாக இருந்தபோது அனுஷ்டித்த கொள்கையினாலேயே இன்று நமது அன்னிய மூலதனம் பெருமளவுக்குக் குறைந்திருப்பதாகப் பொருளாதார நிபுணர்கள் பலரும் கூறுகிறார்கள்.

இறக்குமதிப் பொருள்களில் பல அனாவசியமானவை. லிப்ஸ்டிக்குகள், வாசனைகள், பலவகைச் சோப்புகள், பல் தேய்க்கும் பசைகள் ஆகிய பலப்பல சாமான்கள்,-தவிர்க்கக்கூடிய சாமான்கள்,-இறக்குமதி செய்யப்படுகின்றன. இவற்றைத் தடுத்தாலே நமது ஸ்டர்லிங் நிதி ஏறும்.

தொழில் - வர்த்தக மந்திரியாகத் திரு மொரார்ஜி தேசாய் வந்த பிறகு சுமார் ஐந்நூறு பொருள்களுக்கு மேல் இறக்குமதிக்குத் தடையுத்தரவு விதித்தார்.

ஒரு சமயம் மொரார்ஜி "நமது நாட்டில் கோடிக்கணக்கான பேர்கள் அந்நிய மருந்துகள் இல்லாமல் வாழும்போது, ஒரு சிலர் மட்டும் அன்னிய மருந்துகள் வாங்கிச் சாப்பிடுவானேன்?" என்று கேட்டார்.

இதைத் தனியாகப் பார்க்கும்போது தொழில் மந்திரியின்மீது கோபம்தான் வரும்! மேனாட்டு மருந்தின்றி மனிதனைச் சாகச் சொல்லுகிறாரே என்று மக்கள் பலர் கோபப்பட்டனர். அவர் சொன்னதில் ஓரளவு உண்மையில்லாமலில்லை. அனாவசியம் என்று கருதக்கூடிய அன்னிய டானிக்குகள், மருந்துகள், பால் பவுடர்கள் மூலம் நமது ஸ்டர்லிங் கையிருப்பு குறைந்து வருகிறது.

விவசாயத்தை விருத்தி செய்து உணவு உற்பத்தியைப் பெருக்குவதில் மக்களுக்கு உற்சாகம் உண்டாகும் முறைகளைக் கையாள வேண்டும். இதுவே மிக முக்கியமான விஷயம்.

தற்போது ஏற்பட்டிருக்கும் உண்மை நிலை என்னவென்றால் விவசாயத்தில் ஈடுபடும் சக்தியுள்ளவர்களுக்கு உற்சாகமில்லை. உற்பத்தியில் அக்கறை எடுத்துக் கொள்ளக்கூடிய குடியானவர்களிடம் விவசாய விருத்திக்கு வேண்டிய மூலப் பொருள்கள் இல்லை. இந்த நிலைமையை உண்டாக்கிய தவறான சட்டங்களை உடனடியாகத் திருத்தவேண்டும்.

கடைசியாக, காந்தி மகான் காண்பித்த வழியை நம்பி ராணுவச் செலவையும் குறைத்துவிட வேண்டும். அதிகப்படி செலவு செய்து, பின்னால் பயனில்லாமற் போகும் ராணுவக் கருவிகளை இறக்குமதி செய்யாமல் சிக்கனம் செய்ய வேண்டும்.

இவைகள் தாம் நமது ஸ்டர்லிங் நிதியை உயர்த்திக் கொள்வதற்கு வழிகளாகும்.

# ஆங்கிலமே ஆட்சிமொழி யாகவேண்டும்

மத்திய சர்க்காரின் ஆட்சி மொழி ஆங்கிலமாகத்தான் இருக்க வேண்டும் என்பது தென்னாட்டு மக்களின் கருத்து. இதைப் பற்றிச் சந்தேகமில்லை. இது ஏதோ ஒரு கட்சியின் கிளர்ச்சி, பொதுமக்களின் கருத்தல்ல என்று வடநாட்டில் சிலர் எண்ணுகிறார்கள்.

சென்ற 1956-ம் வருஷம் ஜனவரி மாதம் 31-ந் தேதி சென்னை நுங்கம்பாக்கத்தில் திரு ஏ. சுப்பையா அவர்கள் வீட்டில் பல கட்சித் தலைவர்களும் பல பிரமுகர்களும் சேர்ந்து, அரசாங்க மொழி பற்றி நீண்ட சர்ச்சை புரிந்து ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தனர்.

இந்தச் சர்ச்சையில் ராஜாஜி அவர்கள், திராவிடக் கழகத் தலைவர் திரு ஈ. வே. ரா., நீதிக்கட்சித் தலைவர் பி. டி. ராஜன், அண்ணாமலை பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு முத்தையாச் செட்டியார், தி. மு. க. தலைவர் திரு அண்ணாத்துரை, தி. மு. க. செயலாளர் திரு நெடுஞ்செழியன், தமிழரசுக் கட்சித் தலைவர் திரு ம. பொ. சி., திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி அய்யர், திரு எஸ். ஆர். வெங்கடராமன், திரு கி. ஆ. பெ. விசுவநாதம், டாக்டர் மு. வரதராசன், டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை, டாக்டர் சீனிவாசன் எம். எல். ஸி. முதலிய பல அறிஞர்களும் கலந்து கொண்டு ஒருமுகமாக அறிக்கை வெளியிட்டனர்.

அப்பொழுதிலிருந்து தென்னாட்டில் ஹிந்தி ஆட்சிமொழியாவதற்குப் பலத்த எதிர்ப்பு உருவாகி வருகிறது.

சில நாட்களுக்கு முன் பங்களூரிலிருந்து, டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், ஸர் மிர்ஸா இஸ்மெயில், திரு கொண்டா ராவ் போன்ற பிரமுகர்களும் ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று ஓர் அறிக்கை வெளியிட்டனர்.

உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானி ஸர் ஸி. வி. ராமன் அவர்களும் ஆங்கிலமே ஆட்சிமொழியாக இருக்க வேண்டும் என்பதை மிகத் தெளிவாக மொழிக் கமிஷன் முன்பு வற்புறுத்திக் கூறியிருக்கிறார்.

பாரத சர்க்காரின் கவனத்தைத் தென்னாட்டில் உள்ள அரசியல் தலைவர்கள், பிரமுகர்கள் மட்டுமின்றிச் சமுதாயத்தில் பல துறைகளில் ஈடுபட்டிருப்பவர்களும் அரசாங்க ஆட்சி மொழி ஆங்கிலமாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்துகின்றனர்.

இந்தக் கொள்கையைச் சென்ற வாரம் வெளியான அறிக்கை வெகு அழுத்தமாக எடுத்துக்காட்டுகிறது.

சென்னையிலுள்ள ஆங்கிலப் பத்திராதிபர்கள், தமிழ்ப் பத்திராதிபர்கள் அனைவரும் வற்புறுத்துகின்றனர். 'ஹிந்து' பத்திராதிபர் திரு கே. சீனிவாசன், சுதேசமித்திரன் திரு ஸி. ஆர். சீனிவாசன், தினமணி ஆசிரியர் திரு ஏ. என். சிவராமன், தினத்தந்தி ஆசிரியர் திரு எஸ். பி. ஆதித்தன், ஆனந்த விகடன் அதிபர் திரு எஸ். எஸ். வாசன், கல்கி அதிபர் திரு சதாசிவம், சுயராஜ்யா ஆசிரியர் திரு காஸா சுப்பாராவ் ஆகியவர்கள் கையெழுத்திட்டிருக்கிறார்கள்.

தொழில் வர்த்தகப் பிரமுகர்களாக விளங்கும் திரு எஸ். அனந்தராம கிருஷ்ணன், திரு எச். ஸி. கொத்தாரி, திரு வி. எஸ். எல். நாதன் முதலியவர்கள் கையெழுத்திட்டிருக்கிறார்கள். கல்வித் துறையில் ஈடுபட்டுள்ள கல்லூரிப் பேராசிரியர்கள், பிரின்ஸ்பால்கள், மாஜி வைஸ் சான்ஸலர்கள் ஆகிய பலர் கையெழுத்திட்டிருக்கின்றனர். திருவாளர்கள் என். ஜி. மணவாள ராமானுஜம், எம். சுப்பராய அய்யர், ஆர். கிருஷ்ணமூர்த்தி, எம். கே. ஷண்முகம், கன்னட மொழிப் பேராசிரியரான திரு எம். எம். பட் ஆகியவர்களும் வற்புறுத்துகின்றனர்.

சென்னையில் நீண்ட காலமாகச் சங்கங்கள் அமைத்து, அச்சங்கங்கள் மூலம் பொதுமக்களுக்கு நல்ல பணிபுரிந்துவரும் பல சங்கங்களின் தலைவர்களும் இதில் சேர்ந்திருக்கின்றனர். ஒய். எம். ஐ. ஏ.யின் காரியதரிசி திரு எஸ். நாராயணசாமி, ஒய். எம். ஸி. ஏ.யின் காரியதரிசி திரு பி. ஜே. அனந்தராஜ், சர்வெண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டியின் காரியதரிசி திரு எஸ். ஆர். வெங்கடராமன், தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தின் செயலாளர் திரு கே. கோதண்டபாணிப் பிள்ளை, ஒய். டபிள்யூ. ஸி. ஏ.யின் தலைவி ஸ்ரீமதி எல். ஏ. பீதவடியான், யூனியன் லாங்குவேஜ் கன்வென்ஷனின் செயலாளர் திரு என். செல்லசாமி, தென்னிந்திய முஸ்லிம் சங்கத்தின் கௌரவக் காரியதரிசி எம். எஸ். ஏ. மஜீத் முதலியவர்கள் கையெழுத் திட்டிருக்கிறார்கள். வக்கீல்கள் சங்கங்களின் சார்பில் திரு வி. எல். எத்திராஜ் அவர்களும், திரு வி. ஸி. கோபாலரத்தினம் அவர்களும் கையெழுத்திட்டிருக்கின்றனர்

இவையெல்லாம் "ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்!" என்பது ஒரு கட்சியின் குரல் அல்ல, தென்னாட்டு மக்கள் அனைவருடைய ஏகோபித்த குரலாகும் என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

தென்னாட்டு மக்கள் அனைவரும் தங்கள் தங்கள் சங்கங்கள் மூலமாகவும், பொதுக் கூட்டங்கள் நடத்தியும் 'ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்' என்று தீர்மானங்கள் நிறைவேற்றிப் பாரதப் பிரதமருக்கு அனுப்ப வேண்டும்.

இன்று பல பிரச்னைகளை நடுநிலைமையில் நின்று பார்க்கும் திறமை பாரதப் பிரதமர் நேருவுக்குத்தான் இருக்கிறது.

ஆகவே, தென்னாட்டு மக்கள் நேருவின் ஆட்சி காலத்திலேயே தங்கள் உரிமையைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். ஹிந்தி ஆட்சி மொழியாவதைத் தடுத்து ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க முயல வேண்டும்.

விஷயம் முடிந்துபோன பிறகு வருத்தப்படுவதில் பயனில்லை. இந்திமொழியே ஆட்சி மொழியாகி விட்டபின் என்ன நிலைமை உண்டாகும் என்பதை முன்னாலேயே உணர்ந்து கொண்டு தீவிரமாக வேலை செய்ய வேண்டும். தென்புத்தி பின்புத்தி என்பதற்கு நாம் சிறிதும் இடம் தரலாகாது.

# அருள்வாக்கு

மனிதனாயிருந்தாலும், மிருகமாயிருந்தாலும், பறவையாக இருந்தாலும் உயிரினங்கள் யாவற்றின் மீதும் மனிதன் அன்பு செலுத்தப் பழக வேண்டும். அன்பில்லாத வாழ்க்கை வீண் வியர்த்தமே. எல்லோரிடத்தும் அன்பு செலுத்தும் தன்மை நம்மிடம் நிறைந்திருந்தால் துக்கத்துக்கே இடமில்லை. குழந்தைகளைப் பாருங்கள். அவர்களிடம் அன்பு பொங்கி வழிகிறது. ஆனால் வயது ஆக ஆக அவர்களுடைய அன்பு குறைய ஆரம்பிக்கிறது. அன்பு என்பது என்ன? ஒரு தாய் தன்னுடைய குழந்தையினிடம் காட்டும் அன்பை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். பெற்றோரிடம் பற்றில்லாத பிள்ளைகளை உலகத்தில் பார்க்க முடியும். ஆனால் தன் குழந்தையினிடம் பாசம் இல்லாத தாயைப் பார்க்கவே முடியாது. தாய் தன் குழந்தையினிடம் காட்டும் அன்பைப் போலவே, நம்முடைய சுகத்தைவிட மற்றவர்களுடைய சுகம்தான் அதிக முக்கியமானது என்று நினைக்கத் தயாராக இருக்க வேண்டும்.

இந்த அன்பில் வேதனையும் இல்லாமலில்லை. ஏனெனில் ஆரம்பம் என்றிருந்தால் அதற்கு முடிவும் இருக்க வேண்டுமென்பது பொது விதி. நாம் மிகுந்த அன்பு வைத்துள்ள ஒருவர் மரணமடைந்து விட்டால், ரொம்ப மனவேதனை அடைகிறோம்; இதற்காக நாம் அன்பை வளர்க்கக்கூடாது என்று சொல்ல முடியுமா? ஆனால் அழிவில்லாத அன்பு ஒன்றிருக்கிறது. அதைப் பழகிக் கொண்டால் வேதனைக்கே இடமில்லை. அதுதான் கடவுளிடம் அன்பு செலுத்துவது. அழிவில்லாத கடவுளிடம் செலுத்தும் அன்புக்கு அழிவேது? இகத்திலும், பரத்திலும் எல்லாமே அழிந்துபோவதாயிருக்கலாம். ஆனால், கடவுள் நித்தியமானவர். எல்லாம் அவனிடமிருந்துதான் தோன்றுகிறது. உயிர் வாழ்வதும் அவனால்தான்; அழிந்ததும் அவனிடமே போய்ச் சரணடைந்து விடுகிறது. எல்லாவற்றையுமே கடவுளாகப் பாவித்து அன்பு செலுத்தினால் அது கடவுளிடம் அன்பு செலுத்தியதாகவே ஆகும். எல்லாவற்றையும் கடவுளாகப் பாவிக்க வேண்டுமானால், எல்லாம் அவனுடைய தோற்றங்களே (ஈசுவர ஸ்வரூபம்) என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அவற்றினிடம் கடவுளின் சக்தி இருப்பதாக நினைக்க வேண்டும். அந்த சக்தி இல்லாமல் எதுவும் உயிர் வாழவோ, இயங்கவோ முடியாது. ஒரு அறை இருட்டாக இருக்கலாம். ஆனால், வீட்டுக் கூரையின்மீது சூரிய வெளிச்சம் விழும்போது அந்த அறையும் பிரகாசமாயிருக்கிறது. அது போலவே உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும், ஜீவராசிகளும் எங்கும் நிறைந்தவனும், எதிலும் இருப்பவனுமான கடவுளிடமிருந்தே தம் அறிவையும், ஆற்றலையும் பெறுகின்றன. நம்மைச் சுற்றியுள்ளவற்றைக் கடவுளாக மதித்து அன்பு செலுத்தினால் அவை மறைந்து போனால்கூடக் கடவுளிடம் செலுத்தும் அன்பு அப்படியே இருக்கும்.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்.

# வம்புச் சாவடி

## சமாதானம் ஆகாது!

திராவிடக் கழகத் தலைவர் திரு ஈ. வெ. ரா. திரு காமராஜை ஆதரிப்பதற்குக் காரணம் திரு அண்ணாத்துரைதான் என்றும், '''நம்மகிட்ட வளர்ந்த பையன், இவன் தலைவனாவதாவது, கட்சியமைத்துச் சட்ட சபைக்குப் போவதாவது? இவன் கட்சி ஆட்கள் அதிகம் ஜெயித்தால் என்ன ஆவது! இப்படியே போனால் என் தலைமைப் பதவி என்ன ஆவது?' என்று யோசித்து, 'இவர்களைத் தோற்கடிக்கக் காமராஜ்தான் சரியான ஆள்' என்று நினைத்து அவரை ஆதரிப்பதாகப் பேசி வருகிறார்.'' இவ்வாறு சி. சுப்பிரமணியம் சட்டசபையில் கூறினார்.

திரு சி. சுப்பிரமணியம் மக்களின் ஞாபக சக்தியில் நம்பிக்கையில்லாததனால் தான் இப்படிப் பேசியிருக்கிறார். தி. மு. கழகமோ, அண்ணாத்துரையோ, சட்டசபைப் பிரவேசத்தைப் பற்றிக் கனவில்கூட நினைக்காத போதிலிருந்தே திரு ஈ. வெ. ரா. திரு காமராஜை ஆதரித்து வந்தார். திரு காமராஜ் முதன்மந்திரியானதிலிருந்தே ஆதரித்து வருகிறார். ''பச்சைத் தமிழன்'' ஆட்சி நடைபெறுகிறது என்று பெருமிதம் அடைந்தார். குடியாத்தம் உபதேர்தலில், திரு காமராஜை ஆதரித்துப் பேசினார்.

ஆதரிப்பதற்கு உண்மைக் காரணம் ஒரு சாதியாரைப் பற்றிய வெறுப்பே. அதை மறைப்பதில் பயனில்லை. மேலிடத்தாரின் வற்புறுத்தலுக்காக ஈ. வெ. ராவின் பெயரில் நடவடிக்கை எடுத்தாலும் அதை முழு மனத்துடன் எவ்வளவுதூரம் அமுல் நடத்துவார்கள் என்பதைப் பார்க்க வேண்டும்.

## முறையல்ல

பட்டுக்கோட்டை அங்கத்தினர் திரு சீனிவாசய்யர், சர்க்கார் கட்சியை ஆதரித்துப் பேசியபோது, பல பயங்கரக் குற்றங்களைத் திரு முத்துராமலிங்கத் தேவர் மீது சுமத்திப் பேசினார். திரு தேவர், சிறையில் வைக்கப்பட்டு இக் குற்றங்களுக்குச் சமாதானம் எடுத்துச் சொல்ல முடியாத நிலையிலிருக்கும்போது, இம்மாதிரி பேசியது யோக்கியமல்ல.

இந்தக் குற்றங்களெல்லாம் 1939-ம் ஆண்டுக்குமுன்பு நிகழ்ந்தவையாகச் சொல்லப்படுகிறது. 1957-ல் நடைபெறவில்லை. இந்த இடைக்காலத்தில் தேவருடைய இந்தக் குற்றங்களை எந்தக் காங்கிரஸ்காரரும் பேசவில்லை.

இப்பொழுது திரு முத்துராமலிங்கத்தேவர், தேர்தல் விவகாரங்களில் நேர் எதிரியானவுடன் அவரை ஒழித்துக் கட்டுவதற்கு என்ன வழி என்று பார்த்திருக்கிறார்கள் என்றே தோன்றுகிறது.

மொத்தத்தில் சட்டசபையில் நிகழ்ந்த விவாதத்தினால் இது நிச்சயம் நீதிமன்ற விசாரணைக்கு விடவேண்டிய விஷயம்தான் என்பது பொதுமக்களின் மனத்தில் உறுதியாகி விட்டது.

சர்க்காரின் பேரில் அபவாதம். அதிலும் பெரிய அபவாதம், ஐந்து பேர்களை அக்கிரமமாகச் சுட்டுவிட்டார்கள் என்கிற அபவாதம் ஏற்பட்டபின், அதை நீக்கிக் கொள்ள நீதிமன்ற விசாரணையைத் தவிர வேறு வழியில்லை. மாஜி போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பெயரில் அபவாதம் சொன்னபொழுது அவரே விசாரணை செய்யும்படி கேட்டார். அவருக்கிருந்த தைரியத்தைச் சென்னை சர்க்கார் காட்டவில்லையே என்று மேல் சபையில் டாக்டர் சீனிவாசன் எடுத்துக் காட்டியது மிக உண்மையும் ரஸமும் கொண்ட விஷயம்.

## இரண்டாவது ருஷ்யச் சந்திரன்

போட்டிக்கு இடமே இல்லாமல் இரண்டாவது விசுவாமித்திரசந்திரனை ருஷ்யா வீசி விட்டது. முதல் சந்திரனைப் பார்த்து வியந்தார்கள். மிக பயந்தார்கள். இரண்டாவது சந்திரனைப் பார்த்து இந்தப் போட்டியில் பயனில்லை என்று தீர்மானித்தார்களானால் உலகம் க்ஷேமமடையலாம். அணுகுண்டுகள் சோதனைகளை நிறுத்திவிடும் தைரியம் யாருக்கு முதல் முதலில் உண்டு என்பதில் போட்டி போட்டால் மக்கள் நன்றி செலுத்துவார்கள்; பிராணிகளும் நன்றி செலுத்தும்.

# அம்மையே! அப்பா!

சிவமெ னும்பொருளும் ஆதி சக்தியொடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்
அவன்பி ரிந்திடின் இயங்குதற்கு அரிதாம் — சௌந்தர்ய லஹரி

உலகில் பொருளும் சக்தியும் இரண்டறக் கலந்த விஷயங்கள்!

ஓர் அணுவுக்குள்ளும் மாபெரும் சக்தி அடங்கியிருக்கிறது என்று விஞ்ஞானிகள் கண்டு இன்று சொல்லுகிறார்கள். ஆனால் நம் முன்னோர்களோ பொருள் இருக்கும் இடமெல்லாம் சக்தியும் இருக்கிறாள் என்று பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பே சொல்லியிருக்கிறார்கள்!

அப்படிப்பட்ட வியப்பிலிருந்துதான் பலப்பல பக்திப் பாடல்கள் தோன்றியிருக்கின்றன;

சிவனையும் பார்வதியையும் தந்தையும் தாயுமாக நினைந்துருகிப் பாடினார்கள்!

காமனை வென்ற காதலர்களாக நம் முன்னோர்கள் பாடினார்கள்!

அப்படி பக்தியூட்டிப் பரவசப்படுத்தும் ஐயனையும் அம்மையையும் ஓவியர் ரத்னம் இவ்வாற அட்டைச் சித்திரமாக வழங்குகிறார்.

# வள்ளுவர் வாசகம்

## 3

**த**ர்மம் ஒன்றே நமக்குத் துணையாக நிற்கும். மற்றதெல்லாம் ஏமாற்றத்தில் முடியும். எதெதையோ நம்பு கிறோமே அவை யெல்லாம் ஒன்று மில்லாமல் மறைந்து போகும். தர்மம் ஒன்றே அழியாமல் துணை நிற்பதை அந்தி காலத்தில் காண்போம்.

"இப்போது முடியவில்லை, பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று ஒத்திப் போட வேண்டாம். இன்றே இப்பொழுதே தர்ம மார்க்கத்தில் நடக்க முயல வேண்டும்" என்கிறார் திருவள்ளுவர்.

> அன்றுஅறிவாம் என்னாது
>     அறம்செய்க மற்றுஅது
> பொன்றுங்கால் பொன்றாத்
>     துணை.

*[பொன்றுதல்—அழிதல், சாதல். பொன்றுங் கால் : மரணகாலத்தில் ; பொன்றாத்துணை : அழியாத்துணை.]*

*    *    *

**த**ர்ம மார்க்கத்தில் நின்று அதனால் உண்டாகும் மகிழ்ச்சியே உண்மையான மகிழ்ச்சி. மற்ற வகையான மகிழ்ச்சி அவமானத்தில் முடியும். துன்பமே உண்டாகும்.

> அறத்தான் வருவதே
>     இன்பம்,மற் றெல்லாம்
> புறத்த. புகழும்
>     இல.

இன்பம் இரு வழியில் அடையலாம். அறம் செய்து அடையும் இன்பம் உண்மையானது. அதாவது துன்பத்தில் முடியாது. தர்மத்தைப் புறக்கணித்து அடையும் மகிழ்ச்சி துன்பமாக முடியும். முதலில் சுகமாகத் தோன்றும்; சீக்கிரமே வெட்கமும் துன்பமும் தரும்.

எந்த இன்பத்தைத் தேடினாலும் அறவழியில் அடைய முயற்சி செய்ய வேண்டும். இல்லையேல், வந்ததுபோல வந்து துன்பமாக முடியும். மக்கள் பழிப்பார்கள்.

**அ**றநெறியானது கடமை மட்டும் அல்ல ; விவேகமும் ஆகும். இதை இந்த இரண்டு பாட்டுக்களில் விளக்குகிறார். தர்மத்தைப் புறக்கணித்து அடையப் பார்க்கும் எந்த இன்பமும் அவிவேகமாகும். தர்மத்தைப் புறக்கணிப்பது மடமை. இந்தக் காரணத்தைக் கண்டாவது பாவத்தை ஒழித்து அறநெறியில் வாழ்க்கை நடத்த வேண்டும். "அறத்தால் வருவதே இன்பம், மற்ற எல்லாம் துன்பம்" என்று எச்சரிக்கை செய்கிறார் முனிவர்.



# இலங்கையும் விமானப் படையும்

திருகோணமலையில் உள்ள கடற்படைத் தளத்தைச் சில தினங்களுக்கு முன்னால் பிரிட்டிஷ் அரசாங்கம் இலங்கையிடம் கைமாற்றிக் கொடுத்து விட்டு வெளியேறியதைப் பின்பற்றி இவ்வாரம் நீர்க் கொழும்பின் அருகிலிருக்கும் கட்டுநாயகா விமானப் படைத் தளமும் இலங்கையின் கைக்கு வந்து விட்டது. இவ்விரண்டும் இலங்கையில் பிரிட்டனின் கோட்டைகளைப் போலிருந்தன. அவை பிரிட்டன் வசமிருக்கும் வரையில் இலங்கை பெற்ற சுதந்திரம் வெறும் கேலிக்கூத்து என்று பலரும் கண்டித்து வந்தார்கள். சோவியத் ரஷ்யா உள்பட பல அயல் நாடுகளும் இலங்கையை ஒரு சுதந்திர தேசமாகக் கருதத் தயாராயில்லை. இப்பொழுது இலங்கையில் அடிமைச் சின்னங்களைப் போலிருந்த இரண்டு படைத்தளங்களிலிருந்தும் அன்னிய ஆதிக்கம் மறைந்துவிட்டது. இலங்கை பெற்ற சுதந்திரமும் உண்மையான சுதந்திரமாகி விட்டது.

திருகோணமலையிலிருந்து பிரிட்டிஷ் கடற்படை அடியோடு வெளியேறியதைப் போல் கட்டுநாயகா விமானத் தளத்திலிருந்து பிரிட்டிஷ் விமானப்படை அடியோடு வெளியேறப் போவதில்லை யென்பது இங்கு குறிப்பிடத் தகுந்தது. கட்டுநாயகா தளத்தில் அதிகாரம் மட்டுமே இலங்கைக்குக் கைமாறியிருக்கிறது. இலங்கை அரசாங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க பிரிட்டிஷ் விமானப்படை அடுத்த ஐந்து வருட காலத்துக்கு இந்தத் தளத்தில் தொடர்ந்து இருந்து வரும். காரணம், இந்தத் தளத்தைப் பராமரிக்க வருடம் ஒரு கோடி ரூபாய் செலவாகிறதாம். இலங்கையின் தற்போதைய நிதி நிலைமையில் இவ்வளவு பெருஞ் செலவை இலங்கையினால் சமாளிக்க முடியாது. அதோடு, இலங்கையிடம் விமானப் படையும் கிடையாது. இதை முன்னிட்டு அடுத்த ஐந்து வருட காலத்துக்கு பிரிட்டிஷ் விமானப் படையைக் கட்டுநாயகா விமானத் தளத்தில் தொடர்ந்திருக்குமாறு இலங்கை கேட்டுக் கொண்டிருக்கிறது.

ஜனநாயகத் தொழிலாளர் காங்கிரஸின் கௌரவக் காரியதரிசியான ஸ்ரீ கே. ஜி. எஸ். நாயர் இவ்வாரம் எதியாந்தொட்டைப் பகுதியில் தொழிலாளர் கூட்டமொன்றில் பேசிய பொழுது இலங்கை இந்தியப் பிரதம மந்திரிகளின் சம்பாஷணையைப் பற்றிச் சில முக்கியமான விஷயங்களைக் குறிப்பிட்டார். இதற்கு முன் இரு தேசப் பிரதமர்களும் பல முறை சம்பாஷித்து ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஒரு ஒப்பந்தமாவது உருப்படவில்லை. காரணம் இந்தப் பேச்சுகளில் கலந்து கொள்ளப் பாதிக்கப்பட்ட மக்களின் பிரதிநிதிகளையும் அழைக்கத் தவறிவிட்டதுதான். அடுத்த டிஸம்பர் மாதத்தில் இலங்கை இந்தியப் பிரதம மந்திரிகள் சந்திக்கும் பொழுது அவர்களுடைய பேச்சுகளில் கலந்து கொள்ள இலங்கை இந்தியப் பிரதிநிதிகளையும் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகா அழைக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் முந்திய பிரதம மந்திரிகள் செய்த தவற்றை ஸ்ரீ பண்டாரநாயகாவும் செய்வாரானால் இலங்கை இந்திய சம்பாஷணைகள் பயனளிக்க மாட்டாது: இவ்வாறு ஸ்ரீ நாயர் தமது பிரசங்கத்தில் எடுத்துக் காட்டினார்.

நிற்க. இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் தலைவரான ஸ்ரீ எஸ். தொண்டமான் இலங்கை இந்தியர் பிரச்னையைப் பற்றி இரு தேசப் பிரதம மந்திரிகளும் சந்தித்துப் பேசுவார்களென்று நம்பவில்லை. இலங்கைப் பிரதம மந்திரி சமாளிக்க வேண்டிய நெருக்கடியான பிரச்னைகள் பல இருக்கின்றன என்றும் இந்த நிலைமையில் அவர் டில்லிக்குப் போய் நேருஜியைச் சந்திப்பது அசாத்தியமென்றும் ஸ்ரீ தொண்டமான் கருதுகிறார். —ரஜனி

## கல்விப் பணிக்கு உதவுங்கள்

தருமங்களிலெல்லாம் தலை சிறந்தது என்று போற்றப்படுவது கல்வித் தருமம். ஓர் ஏழைக்கு எழுத்தறிவித்தலே புண்ணியம் கோடி தரும் என்றார் கவியரசர் பாரதியார். ஒரு பள்ளிக்கூடம் நிறுவி, அதில் ஆயிரக்கணக்கான குழந்தைச் செல்வங்களுக்கு அறியாமை இருளை நீக்கி அறிவுச் செல்வம் வழங்கும் கைங்கரியத்துக்கு ஈடு இணை ஏது?

பம்பாய் தென்னிந்திய நல்வாழ்வுச் சங்கத்தினர் 1934-ம் வருஷம் நான்கு குழந்தைகளுடன் துவங்கிய பள்ளிக்கூடம், இன்று இரண்டாயிரத்தைந்நூறு மாணவர்களுக்குக் கல்விச் செல்வம் அளித்து வருகிறது. பள்ளியில் சேர்ந்துள்ள மாணவர்களுக்கு வேண்டிய இடவசதியில்லை; சுகாதார முறையிலுள்ள வகுப்பறைகளும் கிடையாது.

இந்தப் பெருங் குறையை நிவர்த்திப்பதற்காகத் தென்னிந்திய நல்வாழ்வுச் சங்கப் பள்ளி நிர்வாகத்தினர் புதிய கட்டடங்களை நிர்மாணிக்க முன்வந்திருக்கிறார்கள். இந்த அறத்தொண்டை அமுலாக்க, கட்டட நிதிக்காக நவம்பர் 15, 16, 17 தேதிகளில் விசேஷ கலை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள். சென்னை அடையாறு கலாக்ஷேத்திரத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி ருக்மிணி தேவியார் தமது குழுவினரோடு குற்றாலக் குறவஞ்சி, குமார சம்பவம், ராமாயணம் ஆகிய மூன்று நாட்டிய நாடகங்களை வழங்குகிறார். பம்பாய் தாதர் வின்சென்ட் ரோட்டிலுள்ள பார்ஸி ஜிம்கானா மைதானத்தில் அமைக்கப்பட்ட விசேஷப் பந்தலில் கலை நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

இந்தக் கலை நிகழ்ச்சிகளுக்குச் செல்வதன் மூலம் பம்பாய் அன்பர்கள் இருவிதப் பயன்களை அடைகிறார்கள். சென்னை அடையாறு கலாக்ஷேத்திரக் குழுவினரின் நாட்டிய விருந்தை அனுபவிப்பதோடு, கல்வித் தொண்டு புரியும் பேறும் பெறுகிறார்கள்.

# காய்ச்சல் தந்த கலக்கம்

மே மாதம் ஆறும் தேதி காலையில் சிங்கப்பூர்ச் செய்தித் தாள்களில் பரபரப்பான ஒரு செய்தி எட்டுப் பத்தித் தலைப்புக்களில், கொட்டை எழுத்துக்களில் வெளியாயிற்று. அதைக் கண்டு நகர மக்கள் அனைவரும் திகில் அடைந்தனர். அந்தச் செய்தி எங்களுக்கும் மிகுந்த கலக்கத்தைத் தந்தது.

" 'புளு' என்னும் காய்ச்சல் நகரத்தில் மிக வேகமாகப் பரவுகிறது!" என்பதுதான் அந்தச் செய்தி.

ஹாங்காங் துறைமுகத்திலிருந்து சிங்கப்பூர் வந்து சேர்ந்த ஒரு சரக்குக் கப்பல் மூலமாகவே அந்தக் காய்ச்சல் இறக்குமதி ஆயிற்று எனவும் செய்திகள் குறிப்பிட்டன. சிங்கப்பூர் சுங்க வரி இல்லாத துறைமுகம் என்பது அந்தக் காய்ச்சலுக்கு எப்படித்தான் தெரிந்ததோ? தங்கு தடையில்லாமல் நகரிலே புகுந்து விளையாடத் தொடங்கி விட்டது காய்ச்சல்!

'புளு' என்பதைச் சளிக் காய்ச்சல் என்ற பெயரால் தமிழ்ப் பத்திரிகைகள் அறிமுகப் படுத்தின. இந்த நோயின் காரணமாக ஆயிரக் கணக்கான மக்கள் படுத்த படுக்கையாகி விட்டனர்!

"இது பொல்லாத நோய்தான்; ஆனால் உயிர்களைக் கொல்லாத நோய்!" என்று டாக்டர்களின் ஆறுதல் அறிக்கைகள் நாள் தோறும் வெளியாகிக் கொண்டிருந்தன.

இது உயிரைக் கொல்லாத நோயாக இருக்கலாம்! ஆனால் உடல் வலிவைக் கொன்று விடுகிறதே என்றுதான் மக்கள் கலங்கினர்.

"பொல்லாச் சளிக்காய்ச்சல்
போலே உடல் வலிவைக்
கொல்லாமற் கொல்வ தெது?"

என்று புதுக்குறள் இயற்றும்படியாகவே இருந்தது சளிக் காய்ச்சலின் தன்மை.

உடம்பிலே ஊடுருவிச் சக்தியை யெல்லாம் பிடுங்கிக் கொண்டு சடலத்தை மட்டும் பலஹீனமாக விட்டுச் செல்வதே சளிக்காய்ச்சலின் களியாட்டம் என்பது தெரிய வந்தது. இந்தக் காய்ச்சல் காற்றின் மூலமாகப் பரவும் நோய். ஆதலால் இயன்ற மட்டும் வெளியே நடமாட்டம் இல்லாமல் வீட்டுக்குள்ளேயே அடங்கியிருப்பது நல்லது என்று யோசனை கூறப்பட்டது.

புதிய நகருக்கு வந்தும் விருப்பம் போல் வெளியே உலவ முடியாத நிலை ஏற்பட்டு விட்டதே என்ற கவலை எங்களை வாட்டியது.

நகரிலே காய்ச்சல் மும்முரமாகப் பரவிய சமயத்திலேதான் பேராசிரியர் 'கல்கி' அவர்களின் அமர இலக்கியமான "கள்வனின் காதலி" நாடகம் ஆரம்பமாயிற்று. காய்ச்சல் தீவிரமாகப் பரவி யிருப்பதால் சினிமா, நாடகம், நடனம் போன்ற பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதை மக்கள் தவிர்க்க வேண்டுமென்று அரசாங்க அறிக்கைகள் எச்சரிக்கை செய்தன. அப்படி யிருந்தும் ஏராளமான மக்கள் நாடக ஆர்வத்துடன் அரங்கிலே குழுமியிருந்த அருமையை எண்ணி வியந்தோம்.

'கள்வனின் காதலி' இரண்டாவது நாளில் கலைக் குழுவினரையும் அலைக்கழிக்க ஆரம்பித்தது சளிக்காய்ச்சல். காய்ச்சலுக்கு அறிகுறிகளான மூக்கல், முனகல், இருமல், செருமல் முதலிய ஒலிகள் மேடைக்கு உள்ளும் புறமும் கிளம்பிக் கொண்டிருந்தன. ஏற்கெனவே எதிரொலி நிரம்பிய மண்டபம் ஆதலால் எல்லா ஒலிகளும் இணைந்து அரங்கிலே எதிரொலித்து நாடக வசனங்களை அடக்கிக் கொண்டு ஆரவாரம் செய்தன.

நடிக நடிகையர் சிலர் காட்சிகளுக்கு வரும் போது எப்படியோ இருமலைச் சமாளித்துக் கொண்டும், காட்சி முடிந்து மேடைக்குள் சென்றவுடன் காய்ச்சலின் தொல்லையை அநுபவிப்பதுமாகத் திண்டாடவும் நேர்ந்தது.

ஹார்மோனிய இசைவாணர் திரு எம்.எஸ். செந்திவேல் சளிக் காய்ச்சலினால் கடுமையாகத் தாக்குண்டார்.

குழுவினரில் பலர் சளிக் காய்ச்சலுக்கு உள்ளான காரணத்தினால் மே மாதம் ஒன்பதாம் தேதி மூன்றாவது தடவையாக நடைபெறுவதாக இருந்த 'கள்வனின் காதலி' நாடகம் நிறுத்தி வைக்க வேண்டியதாயிற்று.

இரண்டு நாட்கள் கழித்து 'ஔவையார்' நாடகம் தொடங்கியது. கதாநாயகியான ஔவையாரே சளிக் காய்ச்சலுடன் பேசவும் பாட



வும் வேண்டிய நெருக்கடியும் ஏற்பட்டது. திரு செந்தில்வேலுக்குக் காய்ச்சல் கடுமையாகி விட்டமையால் ஹார்மோனியம் இல்லாமலே 'ஔவையார்' நாடகம் நடைபெற்றது. இது நாடக உலகிலேயே ஒரு புது அநுபவம் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஓரிருவரைத் தவிரக் குழுவினர் அனைவரும் காய்ச்சலினால் ஒரு சில நாட்களாவது அவதியுற வேண்டியதாகவே இருந்தது: ஆயினும் சளிக் காய்ச்சலைக் கண்டு எங்களில் யாரும் அஞ்சவில்லை. ஏனெனில் "அடையா நெடுங்கதவும் அஞ்சல் என்ற சொல்லும் உடைய" டாக்டர் ஈ. ஏ. சங்கர் அவர்கள் குடும்ப டாக்டர்போலவே எங்களோடு இணைந்துவிட்டார்.

டாக்டர் சங்கர் சிங்கப்பூரில் வாழும் தமிழர்களுக்கும், அந்த நகரைக் காணச் செல்லும் தமிழர்களுக்கும் சாதி சமய வேறுபாடின்றி உதவி செய்துவரும் இதயப் பண்பு படைத்த டாக்டர்.

டாக்டரின் புதல்வியான செல்வி உமா நடனக் கலையில் தேர்ச்சி பெற்றவர். எங்கள் கலைக்குழுவின் நடன ஆசிரியரான திரு டி. வி. சௌந்திரராஜன் செல்வி உமாவின் நடனத் திறமைக்குப் புது மெருகு கொடுப்பது போல், குறுகிய காலத்துக்குள் புதிய நடன அம்சங்கள் சிலவற்றைக் கற்பித்தார்.

இவ்வாறு நடனக் கலையில் புதுப் பயிற்சி பெற்ற குமாரி உமாவின் நடன நிகழ்ச்சிகள் மே மாதம் பத்தாம் தேதி விக்டோரியா நினைவு மண்டபத்தில் சிங்கப்பூர் சுகாதார அமைச்சர் திரு பிராகாவின் தலைமையில் நடைபெற்றன. எங்கள் குழுவின் நடன ஆசிரியர் சௌந்திரராஜனும், பின்னணி இசைக் குழுவினரும் உமாவின் நடனத்துக்குத் துணையாகப் பின்னணியில் இருந்து சிறப்பு அளித்தனர். இந்தியர்கள் மட்டுமின்றி ஏனைய இனத்தவரும் குமாரி உமாவின் தரம் உயர்ந்த நடன ஆற்றலைப் புகழ்ந்தனர்.

டாக்டர் சங்கர் அவர்களின் துணையால் சளிக் காய்ச்சலை வென்று சமாளித்து வரும் சமயத்தில் டாக்டரே சளிக் காய்ச்சலில் படுத்து விட்டார் என்று அறிந்து அதிர்ச்சியடைந்து விட்டோம்.

தாளடையில் 'புளூ' காய்ச்சல் மலேயா முழுவதும் பரவிக் கடந்து தமிழகத்திலும் நுழைந்து விட்டதாக அறிந்து துயர் எய்தினோம். சிங்கப்பூரிலிருந்து சென்ற கப்பல் ஒன்றின் மூலம் சளிக்காய்ச்சல் இந்தியாவுக்குள் புகுந்து பரவத் தொடங்கியது என்று கேள்வியுற்று வருந்தினோம்.

தமிழகத்திலிருந்து நண்பர்கள் சிலர் எங்களுக்கு எழுதிய கடிதங்களில், "நாங்கள் கலைச் சரக்கைக் கப்பலில் ஏற்றி அனுப்பினோமே! நீங்கள் எங்களுக்குக் காய்ச்சலைக் கப்பலிலே ஏற்றுமதி செய்தது முறைதானா?..." என்று வேடிக்கையும் விசனமும் கலந்த கேள்விகளை எழுப்பியிருந்தார்கள்.

இந்நிலையில் சிங்கப்பூரிலிருந்து இந்தியாவுக்குப் புறப்படும் பிரயாணிகள் கப்பலில் ஏறுவதற்கு முன்பாகவே சுகாதாரப் பரிசோதனை செய்யப்படுவார்கள் என்றும், பின்னர் கப்பல் போக்குவரத்திலேயே தாமதம் ஏற்படலாம் என்றும் பலப் பல செய்திகள் வந்து கொண்டேயிருந்தன. இந்தச் செய்திகளின் காரணமாகத் தாயகத்தில் உள்ள எங்கள் குடும்பங்களையும் நண்பர்களையும் பற்றிய நினைவு மிக அதிகமாக எழுந்தது.

"என் செய்வது? இப்பொழுதுதானே முதல் முகாமில் இருக்கிறோம். என்ன தடைகள் வந்தாலும் பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான்!" என்ற ஆறுதலை உள்ளத்தில் நாங்களாகவே வரவழைத்துக் கொண்டோம்.

## 12. சிங்கை மக்களும் திருக்கோயில்களும்

சிங்கப்பூரில் இப்போது ஏறத்தாழப் பன்னிரண்டு இலட்சம் மக்கள் வசிக்கிறார்கள். இவர்களில் எழுபத்தைந்து சதவிகிதம் சீனர்களும், பத்து சத விகிதத்துக்கும் சற்றுக் குறைவாக இந்தியர்களும் வாழ்கின்றனர்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்துப் பதினொன்றும் ஆண்டிலே சுமார் மூன்று லட்சம் மக்களைக் கொண்டிருந்த தீவு இப்போது அதாவது நாற்பத்தைந்து ஆண்டுகளில்-நாலு



மடங்கு மக்களைத் தாங்கி நிற்கிறது என்றால் இங்கு வாழ்வோரின் தொகை எவ்வளவு வேகமாக வளர்ந்து வருகிறது என்பது தெரிகிறதல்லவா? இன்னும் பதினைந்து ஆண்டுகளில், அதாவது 1972-ல் சிங்கைமாநகரில் மக்களின் எண்ணிக்கை இருபது இலட்சமாக உயர்வது திண்ணம் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

இன்னொரு உண்மையும் தெரிவிக்கப்பட்டது. அதாவது சிங்கையில் வாழும் மக்களிலே பாதிக்குமேல் இருபது வயதுக்கு உட்பட்டவர்களாம். ஏராளமான மனித இளங் குருத்துக்களை ஏந்தி நிற்கும் நகரத்திலே உற்சாகத்துக்குப் பஞ்சமா என்ன?

''பத்துக் குழந்தைகளைப் பெற்றெடுத்துக் கணவனைப் பதினோராவது குழந்தையாகப் போற்றுவாயாக!'' என்று பெண்களை வாழ்த்தும் மரபு நமது நாட்டிலே உண்டு. இந்த வாழ்த்து நமக்கு அவ்வளவாகப் பொருந்துவதில்லை. ''குடும்பக் கட்டுப்பாடு'' இயக்கம் வலுத்துவரும் இந்தக் காலத்தில் இத்தகைய வாழ்த்தை எவரும் விரும்பவும் மாட்டார்கள். ஆனால் சீன சமூகத்தினர் இந்த வாழ்த்தை அப்படியே ஏற்று வாழ்க்கையில் பின்பற்றி உள்ளனர் என்று சொல்லலாம். சிங்கப்பூர்-மலேயாவிலே வாழ்ந்துவரும் சீனக் குடும்பங்கள் ஒவ்வொன்றிலும் குறைந்தது பத்துக் குழந்தைகளாவது இருக்கும் என்று தெரிகிறது.

குழந்தைச் செல்வத்தைப் பேணித் தம் இனத்தை மலைநாட்டில் பெருக்கி வருகிறார்கள் சீனர்கள் என்று சொல்வது பொருந்தும்.

பல்வேறு இனத்தவரும் பல்வேறு சமயத்தினரும் இணைந்து வாழும் கதம்ப நகரம் சிங்கப்பூர். எனவே ஒவ்வொரு இனத்தின் நாகரிகச் சின்னங்களையும் சமயச் சின்னங்களையும் சிங்கையிலே காண முடிகிறது.

சீனர்களின் கோயில்கள் ஏராளமாக உள்ளன. டிலோக் அயர் வீதியில் உள்ள 'புண்ணிய ஆலயம்' எல்லாவற்றிலும் பழமையானது என்று கூறப்படுகிறது. இந்தக் கோயிலைப் பற்றி ஒரு கதை உண்டு:

பல ஆண்டுகளுக்கு முன் இந்தக் கோயில் விளங்கும் இடத்துக்கு அருகில் உள்ள கடலில் ஒரு பிணம் மிதந்து வந்ததை மீனவர்கள் கண்டார்களாம். மூடநம்பிக்கை மிகுந்த அந்தச் செம்படவர்கள் அந்தப் பிணத்தையே தெய்வமாகக் கருதி அதற்கு ஒரு கல்லறை கட்டி வணங்கினார்களாம். இந்த வழிபாடு தொடர்ந்து நடந்து வந்ததாம். பல ஆண்டுகளுக்குப் பின் அந்தக் கல்லறைக்குப் புறம்பாக, ஒரு சீனக்கோயில் எழுப்பப்பட்டது. கோயிலுக்குப் பின்புறம் ஒரு பெரிய மரத்தின் கீழ் பழைய கல்லறையை இன்றும் பார்க்கலாம். இந்தக் கோயிலைக் கட்டி 143 ஆண்டுகள் ஆகின்றன.

கிம் கிட் வீதியில் உள்ள "சியோங் லிம் சி'' என்னும் புத்தர் கோயில் சீனர்களின் கோயில்களிலேயே மிகப் பெரியதும் சிறந்ததும் ஆகும். கண்டு மகிழ வேண்டிய ஒன்று இங்குள்ள புத்த விக்கிரகங்கள். அவை மிக அழகாக உருவாக்கப்பட்டுள்ளன.

ரேஸ் கோர்ஸ் வீதியில் அமைந்துள்ள கோயிலில் 50 அடி உயரமுள்ள பிரும்மாண்டமான புத்தர் சிலையைக் காணலாம். புத்தரைச் சுற்றி அமைத்துள்ள 'ஆயிர விளக்கு' அலங்காரம் உள்ளத்தைக் கவர்கின்றது. புத்தரது ஆசனத்துக்குக் கீழ் ஒரு நிலவறை உள்ளது. சிலைக்குப் பின்புறமாக வாசல் அமைந்த அந்த அறைக்குள்ளே சீனர்கள் தாம் எடுத்துக் கொண்ட காரியம் காயா, பழமா என்று நிமித்திகம் பார்க்கும் காட்சிகளைக் காணலாம்.

பொதுமக்கள் எளிதாகச் சென்று காணத் தக்க முறையில் நகருக்கு மையமான இடத்தில் அமைந்துள்ள இந்தக் கோயிலின் முன் வாசலில் இரு மருங்கிலும் பயங்கரமான பாயும் புலிகளின் சிலைகள் மருட்சி தருகின்றன. இவற்றைக் கடந்து உள்ளே சென்றால் மருட்சியைப் போக்கும் புத்தரின் மலர் முகத்தைக் காணலாம்.

கருணைதேவியின் கோயில் என்ற பெயரில் சில சீன ஆலயங்கள் சிங்கப்பூரில் இருக்கின்றன. ஜூசியாட் பினெஸ் என்ற இடத்துக்கு அருகில் உள்ள கருணைதேவி கோயில் புகழ் பெற்றது. அங்குள்ள தேவியின் திருவுருவச்சிலை நிறைந்த ஆபரணங்களோடும், பெரிய கிரீடத்துடனும், பதினெட்டுக் கைகளுடனும் தங்கமயமாகக் காட்சி தருகிறது. ஒவ்வொரு கையிலும் வாள், மணி, மாயக் கண்ணாடி முதலிய அடையாளப் பொருள்கள் தரப்பட்டுள்ளன. கருணைதேவியைப் பற்றியும் கர்ண பரம்பரைக் கதை ஒன்று வழங்கி வருகிறது. கருணைதேவி ஓர் இளவரசி. அவளுடைய தந்தை சாவை எதிர்நோக்கும் நிலையில் கடும் நோய் வாய்ப்பட்டிருந்தார். தந்தைக்குப் போதிய ரத்தம் ஊட்டுவதற்காக இளவரசி தனது கரத்தையே வெட்டவும் துணிந்தாள். இந்தத் துணிகரச் செயலைச் செய்த இளவரசி கடவுளாகவே கருதப்பட்டு வணங்கும் நிலையை எய்தினள். இப்படிச் சொல்லப்படுகிறது, கருணைதேவியின் கதை. கதை எப்படியிருந்தாலும் நமது நாட்டில் உள்ள காளியின் சிலையைப் போல்தான் இருக்கிறது கருணைதேவியின் சிலை.

சிங்கப்பூரில் கிறிஸ்தவக் கோயில்களுக்கும், மசூதிகளுக்கும் குறைவில்லை. ஹில் தெருவில் உள்ள கிரகரி மாமுனிவர் கோயில் மிகப் பழமையான கிறிஸ்தவக்கோயில்களில் ஒன்று.

அரேபிய வீதிக்கு அருகாமையில் அமைந்துள்ள சுல்தான் மசூதி முஸ்லிம்களின் மிகப் பெரிய தொழுகை நிலையமாகத் திகழ்கிறது. 'ஹரி ராய பூசா' 'ஹரி ராய ஹாஜி' என்னும் முஸ்லிம் பெருநாட்களின்போது மலாய்க்காரர்கள், தமக்குரிய தேசிய உடையணிந்து குதூகலமாகக் காணப்படுவார்கள். இந்திய முஸ்லிம்கள் இந்த விழாக்களிலே கலந்து கொள்வார்கள்.

சிங்கைமாநகரின் சிறப்புக்குத் துணையாக விளங்கும் நம் திருக்கோயில்களைப் பற்றியும் குறிப்பிட வேண்டும். தெற்குப் பாலவீதியில் உள்ள மாரியம்மன் கோயில் மிகப் பழமையான திருக்கோயில். 1850-ஆம் ஆண்டில் கட்டப்பட்ட இந்தக் கோயிலின் அழகான சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய கோபுரம் நமது தென்னாட்டின் சிறப்பை எந்நாட்ட

வர்க்கும் எடுத்துக் காட்டுவதாக நிமிர்ந்து நிற்கிறது.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் 1860 ஆண்டில் கட்டப்பட்டுள்ள தண்டபாணி கோவில் ஆர்ச்சர்டு வீதிக்கு அருகாமையில் சீரும் சிறப்பும் உற்றுத் திகழ்கிறது.

திருவிழாக்களும், பொதுக் கூட்டங்களும் நடைபெறுவதற்கு ஏற்ற முறையில் இந்த இரண்டு கோவில்களிலும் அழகான மண்டபங்கள் உள்ளன. சமயச் சொற்பொழிவுகளும் இலக்கிய வகுப்புகளும் அவ்வப்போது இக்கோவில்களில் நிகழ்ந்து மக்களின் தமிழ்ப் பசியைத் தீர்த்து வைக்கின்றன. கோவில்களெல்லாம் கலைக் கூடங்களாக விளங்கவேண்டும் என்ற லட்சியப் பாதையில் இந்த இரு கோவில்களும் காணப்படுகின்றன என்று சொல்லலாம்.

சிங்கப்பூரில் மட்டுமல்ல; கடல் கடந்த தமிழர்களின் கல்விக்கும் கலைக்கும் துணை புரியும் நிலையில் மாரியம்மன் கோவிலும் தண்டபாணி கோவிலும் மலேயாவிலுள்ள ஒவ்வொரு நகரத்திலும் செல்வமும் செல்வாக்கும் பெற்று விளங்குகின்றன என்று அறிந்து பெருமை எய்துவோம்.

மகாத்மா காந்தியடிகளின் நினைவாக ஓர் அழகான மண்டபம் சிங்கப்பூரிலே அமைக்கப்பட்டுள்ளது. மாளிகைபோல் அமைந்த இந்த மண்டபத்தை, ''காந்தி கலைக் கோவில்'' என்று அழைப்பது பொருந்தும். மண்டபத்துக்குள் சர்க்காவை அணைத்துக் கொண்டிருக்கும் பாவனையில் உள்ள காந்தியண்ணலின் வெண்கலச் சிலையின், அழகைக் கண்டால் அடிகளின் ஆன்மா இந்த மண்டபத்தில்தான் கோவில் கொண்டுள்ளது என்று எண்ணத் தோன்றும்.

கச்சிதமான ஒரு சொற்பொழிவு மண்டபம் நினைவு மாளிகைக்குள் காட்சி தருகிறது. இசை, நடனம் போன்ற கலை நிகழ்ச்சிகளுக்கும் ஏற்ற முறையில் மண்டபம் அமைந்துள்ளது.

அருமையான நூல் நிலையம் ஒன்றும் காந்தி கலைக் கோவிலில் உள்ளது.

இந்த நினைவு மாளிகைக்கு இந்தியப் பிரதமர் திரு பண்டித நேரு அவர்கள் 1950 ஜூன் மாதம் பதினெட்டாம் நாள் கால்கோள் விழா நடத்தினர். தென்கிழக்கு ஆசியாவின் ஆங்கிலேய கமிஷனர் ஜெனரலாக விளங்கிய திரு மால்கம் மாக்டனால்டு, 1953-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் இருபத்தைந்தாம் நாள் நினைவு மண்டபத்தைத் திறந்து வைத்தார்.

நினைவு மாளிகையை உருவாக்க ஒரு லட்சத்து எழுபத்தேழாயிரம் வெள்ளிகள், அதாவது ஏறத்தாழ இரண்டு லட்சத்து எழுபத்தையாயிரம் ரூபாய் செலவாயிற்று. மேற்கொண்டு எண்பதாயிரம் வெள்ளிகள் செலவிட்டு மாளிகையை அபிவிருத்தி செய்யவும், காப்பாற்றவும் ஏற்பாடு செய்து வருகின்றனர். மண்டபத்தில் மிளிரும் அடிகளின் வெண்கலச் சிலையை அன்பளிப்பாகச் செய்து வழங்கியவர் திரு ஜீ. உத்தம்ராம் என்னும் இந்தியர்.

சிங்கையில் விளங்கும் இராமகிருஷ்ண மடம் இந்தியர்களுக்குப் பெருமை தரும் முறையில் பணியாற்றி வருகிறது. ஏழைச் சிறுவர்களுக்கு ஆதரவு கொடுத்து வரும் இந்த மடத்தின் பொது வழிபாட்டு மண்டபம் மிக அழகாக உருவாக்கப்பட்டுள்ளது. இந்த மண்டபம் அமைப்பதற்காக ஒரு லட்சம் வெள்ளிகளுக்கு மேல் நன்கொடை அளித்து உதவிய வள்ளல் திரு பி. கோவிந்தசாமிப் பிள்ளையவர்களின் தாராள உள்ளத்தைப் பாராட்ட வேண்டும்.

மனிதன் எளிதிலே கெட்டுப் போவதற்கு என்னென்ன மாய வலைகள் வேண்டுமோ அத்தனையும் நிறைந்த சிங்கப்பூரில் திரு பி. கோவிந்தசாமிப் பிள்ளை அவர்களைப் போன்ற செல்வர்கள் தமிழர் பண்பாட்டிலிருந்து சற்றும் பிசகாமல் அற வழியில் வாழ்க்கை நடத்தி வருவது மிகவும் போற்றுதற்குரியது. மிகச் சிறந்த செல்வச் சீமானாகிய இவர் தமது குடுமியையும், சந்தனப் பொட்டையும், காலர் இல்லாத சட்டையையும் விடாமல் மிக எளிய தோற்றத்தோடு விளங்குகிறார். செம்மையான வாழ்க்கை நடத்துவதோடு சிறந்த பணிகளுக்கு நிறைந்த பொருள் உதவியும் செய்து வரும் திரு பிள்ளையவர்களைத் தமிழருக்குப் பெருமை தரும் சான்றோர் என்று புகழ்வது மிகையாகாது. (தொடரும்)

# வட்ட மேஜை

## வள்ளுவர் வாசகம்

ராஜாஜி அவர்கள் கல்கியில் "வள்ளுவர் வாசகம்" என்ற தலைப்பில் குறட்பாக்களின் கருத்தைத் தேச மக்களுக்கு எடுத்துக் காட்டி வருகிறார். அவருடைய இந்த மலர் என்றும் வாடாமல் மேன்மேலும் வளர்ச்சி அடையக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

நீ.கோ. பாளையம்.
28—10—57 என். ஆர். பழனிச்சாமி

## வழிகாட்டும் இலக்கியம்

இந்தி பற்றி ராஜாஜியின் கருத்துக்களை 27-10-57 கல்கி பளிங்குபோல் படம் பிடித்துக் காட்டுகிறது. ஆங்கிலம் இந்தியாவில் நீடித்திருக்க வேண்டியதையும், அதற்கான காரணத்தையும் காட்டி விளக்கியுள்ளார் ராஜாஜி. அவர் கூறுவது போல் 'காமன் வெல்த்' சங்கிலியில் இல்லாத அவமானம் ஆங்கில மொழியில் என்ன இருக்கிறது?

இலக்கியம் மக்களின் மனத்திலுள்ள மாசுகளைப் போக்குவதாக, பண்படுத்துவதாக இருக்க வேண்டும். ஒரு நாட்டு மக்களை நல்ல நிலைக்கு வழிகாட்டிச் செல்வது நல்ல இலக்கியங்கள்தான். அதற்குச் செம்மையான இலக்கியப் பணியில் நமது மாபெரும் அறிஞர் ராஜாஜி அவர்கள் ஈடுபட்டிருப்பது மகத்தான பாக்கியமாகும். முன்பு அவர்கள் ஸ்ரீராமகிருஷ்ண உபநிஷதம், பஜகோவிந்தம், சக்கரவர்த்தித் திருமகன், ரகுபதி ராகவ, திரிஸ்துவத்துறவி வாரன்ஸ் போன்ற மாபெரும் கட்டுரைச் செல்வங்களை எழுதி ஈடற்ற பணி புரிந்தார். இப்பொழுது வான் புகழ் கொண்ட குறளைத் தமக்குரிய எளிய இனிய செந்தமிழ் நடையில் 'வள்ளுவர் வாசகம்' எனும் தலைப்பிலே எழுதத் துவங்கியுள்ளார். மிகவும் எளிதாக, யாவரும் புரிந்து அநுபவிக்கும்படி உள்ளது நடை. அவருக்குத் தமிழகம் பல்லாற்றானும் கடமைப் பட்டுள்ளது என்பதை யாராலும் மறக்கவோ, மறைக்கவோ முடியாது.

நாச்சியார்கோவில்
28—10—57 சுப. கோ. நாராயணசாமி

## தேசீய மொழி

இந்திய ஜனத்தொகையில் நாற்பத்து இரண்டு சத விகித மக்களால்தான் இந்தி பேசப்படுகிறது என மொழி பற்றித் தயாரிக்கப்பட்டிருக்கும் அறிக்கை கூறுகிறது. ஐம்பத்தெட்டு சதவிகித மக்கள் இந்தி அல்லாத வேறு மொழி பேசுகின்றனர். இந்தி பேசும் மக்களிடையே மட்டும் பதினொரு வகையான இந்தி பேசப்பட்டு வருகிறது.

இவ்வாறு ஒரு சிறுபான்மை மக்களால் மட்டும் பேசப்பட்டு வரும் பதினொரு பிரிவுகளைக் கொண்ட ஒரு உருப்படி இல்லாத மொழிதான் தேசிய மொழியாக இருக்க வேண்டும் என்று கூறுபவர்களுக்குப் பாடம் கற்பித்து, இந்தி புகுத்தப் படுவதைத் தடுக்க வேண்டுமானால் தமிழகத்திலுள்ள எல்லாக் கட்சியினரும் ஒன்றுபட்டு இந்தி எதிர்ப்புப் போராட்டத்தைத் தீவிரமாக நடத்தினாலன்றி இந்தி புகுத்தப்படுவதைத் தடுக்க முடியாது. இந்த மறுக்க முடியாத உண்மையை எல்லாக் கட்சியினரும் உணர வேண்டும்.

நாச்சியார்பட்டி
28—10—57 எஸ். பலராமன்

## கவனக் குறைவு

சென்ற இரண்டு வாரங்களுக்குள் இருவர் பெரம்பூர் அருகில் ரயிலில் சிக்கிப் பரிதாபமாக இறந்தார்கள். இருவரும் இளம் மாணவர்கள், தெரியாமல் விபத்தில் சிக்கி இறக்கவில்லை இவர்கள். ரயிலில் பிரயாணம் செய்ய வேண்டியபோது சரியான முறைகளை அநுசரிக்காததால் இருவரும் இறந்தார்கள். பொதுவாக மாணவர் சமூகத்திடையே உள்ள ஒரு குறைபாட்டை இங்கே தெரிவிக்க விரும்புகிறேன். ரயில்களில் பிரயாணம் செய்யும் இவர்கள் வேண்டுமென்றே, வண்டியை ஓட விட்டுப் பிறகு அதில் தொத்திக் கொள்வது வழக்கம். சிலர் வழியை அடைத்துக்கொண்டு நின்று, ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ஒய்யாரமாக ஏறி இறங்குவார்கள். வண்டி புறப்பட்டவுடன் அதனுடன் கொஞ்ச தூரம் போட்டியாக ஓடிப் பிறகு ஏறிக் கொள்வார்கள். உள்ளே இடம் இருந்தால் கூட, வேண்டுமென்றே கதவுப் பக்கங்களில் நின்றுகொண்டு பாடுவதும் படிப்பதும் உண்டு. இதெல்லாம் விபத்தை எதிர்கொண்டு அழைக்க உதவுகின்றன. தெரிந்தே செய்யும் இத்தகைய தவறுகளை இனியாவது திருத்திக் கொள்ளட்டும். அல்லது, அங்கமிழந்து வாழ்நாள் முழுவதும் பிறருக்குச் சுமையாக வாழ வேண்டிய பரிதாப நிலையைச் சற்றுக் கற்பனையில் எண்ணிப் பார்த்தால் போதும்.

சென்னை
28—10—57 எஸ். வெங்கடேசன்

## செங்கனியான்

சீதை அவர்கள் கடைசியாக எழுதிய 'மயில்விழிமான்' என்ற அற்புதச் சிறு கதையை நான் மறக்க முடியாதுதான். இப்போது அது போன்று எழுதக் கூடிய 'நபர்' உண்டு என்ற எண்ணம் ஏற்பட்ட பிறகு என் உள்ளம் விவரிக்க முடியாத குதூகலத்தில் இன்ப எல்லையில் இருக்கிறது.

கதைக்கு 'பிளாட்' கிடைக்காமல் தவிக்கும் இந்தக் காலத்தில் நூதனமாக ஒரு விஷயத்தை எடுத்துக் கொண்டு சம்பவங்களைக் கற்பனை மிகுதல் பின்னி அழகாகக் கொடுக்கும் திறன் இருக்கிறதே-அதை இலக்கிய உள்ளம் படைத்தவர்கள் பாராட்டாமலிருக்க முடியாது. எழுத்துலகில் 'செங்கனியான்' என்னும் சிறு கதை ஒரு பெரிய திருப்பத்தை ஏற்படுத்தி விட்டது. கதைக்கு எடுத்துக் கொண்ட விஷயம், கதை அமைப்பு, அதன் கட்டுக் கோப்பு, செவ்வாய் கிரக வர்ணனை, கோவில் கல்வி என்ற உயர்தரமான பாத்திர சிருஷ்டி, கடைசியாக 'கிளைமாக்ஸ்' ('ஐயோ ரத்தம்!')

'நான் தமிழன்' என்ற எண்ணம்தான்! என்ற கடைசி வரி - எல்லாம் பிரமாதம்.

வேலூர்
1—11—'57

வி. பி. சுப்பிரமணியம்

## கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி

புதிய கல்பாத்தி தபால் கிளை நிலையம் ஆறு மாதத்துக்கு முன்னால் திறக்கப் பட்டது. அதுவும் பல பேர்கள் வேண்டுகோள் விடுத்து மனு சமர்ப்பித்ததின் பேரில் தான் திறக்கப் பட்டது. ஆனால் இன்னான் வரை அங்கு போதிய அளவு தபால் தலைகளோ, அல்லது கார்டு, கவர்களோ கிடைப்பதாயில்லை. வாரத்துக்கு இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குத்தான் அங்கு தபால் தலைகளோ, கார்டு கவர்களோ கிடைப்பதாயுள்ளன. மற்ற நாட்களில் தபால் கிளை நிலையம் திறந்திருக்கின்றதே தவிர, தபால் தலைகளும் அதைப் பொறுத்துள்ள மற்ற எதுவும் கிடைப்பதாயில்லை. தபால் நிலையம் மக்களின் சௌகரியத்துக்காகவும், சேவைக்காகவும் திறக்கப் படுகிறது. "கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி - கடன் வாங்கியும் பட்டினி" என்பது போல் கல்பாத்தியில் தபால் நிலையம் இருந்தும் கார்டோ, கவரோ இல்லை.

கல்பாத்தி
28-10-57

பி. எம். ராமச்சந்திரன்

## உள்ளத்தை அள்ளும் அலை

"பாவை விளக்கு" படித்து வருபவர்களில் நானும் ஒருவன்; கல்கி கைக்கு வந்ததும் மேல் பக்கங்களின் பாதையை விலக்கிக் கொண்டு "பாவை விளக்கு" பக்கத்தில் போய்த்தான் கைகள் நிற்கின்றன. கண்களும் பார்க்கின்றன. ஏன் என்றால், விளக்கு இருக்கும் இடத்தில் தானே ஒளி இருக்கும். ஒளி இருக்கும் இடத்தில் உணர்ச்சி. உணர்ச்சி இருக்கும் இடத்தில் உள்ளம். உள்ளத்தை அள்ளும் பாவை விளக்கின் அலையை அணைத்து மகிழாமல் இருக்க முடியவில்லை.

மைசூர்
1-11-57

ஏ. கோவிந்தராஜ்

## பஸ் பிரயாணிகள் படும் அவதி

திருப்பத்தூர் மோட்டார் நிலையத்திலிருந்து பிரயாணம் செய்பவர்களுக்கு வெயில் நேரங்களில், மழை நேரங்களில் தங்கப்போதிய வசதியில்லை. இந்தக் குறை பல ஆண்டுகளாக நீடித்தபடியே இருக்கிறது. வெய்யில் காலங்களிலும் சரி, மழை காலங்களிலும் சரி, டிக்கெட் வாங்கிக் கொண்டுதான் வண்டியில் உட்கார வேண்டும். இந்த நிலையில் மோட்டார் வண்டிகளைத் திறந்தபகுதியில் நிற்கவைத்துக் கொண்டு டிக்கெட் கொடுப்பவர் வண்டியில் உட்கார்ந்தபடி டிக்கெட் கொடுக்கிறார்.

வேகாத வெயிலில் நின்று வேகும் கொடுமையை அனுபவிக்கும் தாய்மார்கள், குழந்தைகள், பெரியோர்கள் மீது கருணை காட்டி, திருப்பத்தூர் மோட்டார் நிலையத்தில் மோட்டார் நிற்கக் கட்டிவைத்துள்ள அறைகளில் ஒன்றை எடுத்து டிக்கெட் கொடுக்க அறை உண்டாக்கி பிரயாணிகளுக்குள்ள தொல்லையைப் போக்கக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

அதே நேரத்தில் திருப்பத்தூரிலிருந்து சோலையார்பேட்டை வரும் மக்களுக்கு வேண்

டிய அளவுக்கு டிக்கெட் கொடுப்பதில்லை என்பதை உணர்ந்து, கடந்த சில மாதங்களுக்கு முன் மேலும் பல புதிய வண்டிகளை ஓடச் செய்தனர் அதிகாரிகள். மேற் கண்ட வண்டிகள் தற்போது நிற்கவைக்கப்பட்டுள்ளன. காரணம் யாதோ? அதை மீண்டும் ஓடச் செய்யக் கேட்டுக் கொள்ளுகிறோம். மேற் கண்ட முறையில் ஓட்ட முடியாது என மோட்டார் உரிமையாளர் மறுத்தால், ஒவ்வொரு வண்டியிலும் குறைந்தது கட்டாயமாகச் சோலையார்பேட்டைக்குப் பதினைந்து டிக்கெட்டாவது கொடுக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும் என்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கேட்டுக் கொள்கிறோம்.

ஜோலார்ப்பேட்டை
29—10—57

கே. என். கேசவன்
(காரியதரிசி, திருப்பத்தூர்
தாலுகா விவசாயிகள் சங்கம்)

## தமிழ் அன்பு

ஆறு மாதங்களுக்கு முன்னே நான் சென்னையிலிருந்து ஜெர்மனிக்குத் திரும்பினேன். சென்னையில் நான் இரண்டு ஆண்டுகள் தான் வாழ்ந்திருந்தேன். அப்போது நான் வடமொழியையும் இந்தியையும் தமிழ்மொழியையும் படித்தேன். ஆனால் இந்த மூன்று மொழிகளிலும் நான் தமிழ் மொழியையே மிகவும் விரும்பினேன். சென்னையில் நான் நல்ல தமிழரைச் சந்தித்தேன். அவர்களோடு தமிழ்க் கதைகளையும் பாட்டுகளையும் படித்தேன். நானும் ஒரு சின்னப் பாட்டைப் பண்ணினேன். என்றால் சென்னையையும் தமிழ் நாட்டையும் மறக்க முடியாது.

தமிழ்த்தாயே! தமிழ்த்தாயே!
உன் இனத்தில் நான் பிறந்தவனில்லை.

ஆனால் உன் சக்தியால்
என்னை ஆகர்சிக்கின்றாய்.

தாயே, உனக்கும் எனக்கும்
பேதத்தை நான் காணவில்லேன்

காரணம் நீ எனக்கு
நாக்கையும் கையையும் அருளினாய்

ஜர்மனி வாழும் தமிழ்ச் சிறுவன் நான்
தமிழின்பம் எனக்கும் அருள்வாய்.

தமிழ்த்தாயே! உன் இன்னிசை மொழி
என்றும் என் உள்ளத்தைப்
பேருள்ளம் ஆக்கட்டும்

27—10—57
மார்பர்க்; ஜர்மனி

ஹைறன்ஸ் இதெல்பக்

[" யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவது எங்கும் காணோம். இது உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை " என்று கூறினார் மகாகவி பாரதியார். அவருடைய வாக்கு எவ்வளவு உண்மையானது என்பதை நிரூபிப்பது போல் இருக்கிறது ஜர்மன் மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட இந்த ஜர்மானியரின் கடிதம். இவர் தம் கடிதத்தின் விலாசத்தைக் கூடக் 'கல்கி, சென்னை, தமிழ் நாடு' என்று தமிழிலேயே குறிப்பிட்டிருக்கிறார். இந்த ஜர்மானியரின் தமிழ் உணர்ச்சியைப் பாராட்டி மிகுந்த மகிழ்ச்சியுடன் இந்தக் கடிதத்தை வெளியிட்டிருக்கிறோம். — ஆசிரியர்.]

## அரசியல் சதுரங்கம்

சாதியை ஒழிக்கவேண்டும் என்று காங்கிரஸ் கட்சியும் சொல்லுகிறது; திராவிடக் கட்சியும் சொல்லுகிறது; திராவிட முன்னேற்ற கட்சியும் சொல்லுகிறது. ஆனால் ஒவ்வொரு கட்சியும் அதனதன் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ளத்தான் சாதிஒழிப்பு வேண்டும் என்று சொல்லுகின்றன.

நமது சர்க்கார், தாங்கள்தான் ஹரிஜனங்களின் ரக்ஷகர் போலவும், மற்றவர்கள் அதை உணராமலிருப்பது போலவும் பேசுகிறார்கள். ஹரிஜனங்களையும் மற்ற மக்களையும் வேறுபடுத்தி, ஹரிஜனங்களுக்கு மற்ற சமுதாயத்தினர் பேரில் வெறுப்பு உணர்ச்சி ஏற்படும் வகையிலும் தாங்கள் நல்லபிள்ளைகள் போலவும், மற்றவர்கள் பொல்லாதவர்கள் போலும் தோன்றும்படியாகவும் ஓர் சூழ்நிலையை ஏற்படுத்தி யிருக்கிறார்கள்.

இது சாதி ஒழிப்பை விரும்புபவர்கள் செய்யும் காரியமில்லை. இந்த நாட்டில் சாதி ஒழிந்து சமாதானம் நிலவ வேண்டுமானால் இப்பொழுது உள்ள சட்டம், சரிவர அமுலாக்கப் படுகிறதா என்பதை முதலில் கவனிக்க வேண்டும். ஒழுங்கு முறைகள் கண்டிப்பாக அமுல் நடத்தப்பட வேண்டும். அவைகள் சரிவர நடைபெறாத நாடு என்றைக்கும் முன்னேற முடியாது.

மணலூர்
29—10—57

எஸ். காந்திமதிநாதன்



# இந்தியத் தாய்

சூலத்தியும் அரிவாளும் தழுவி நிற்கும் சோவியத் சின்னம் என்றதுமே சட்டென்று புரட்சியும், கிளர்ச்சியும் மனத்தில் தோன்று வதுதான் சகஜம். அதே போல, அந்தச் சின்னத்தைத் தன் ஸ்தாபனத்தின் முத்திரையாகக் கொண்ட படத் தயாரிப்பாளர்—டைரக்டர் மெஹ்பூப்பின் படங்கள் என்றும் அதிலே புதுமையான கருத்தை எதிர்பார்ப்பது ரசிகர்களின் வழக்கம். மெஹ்பூப் அவர்களை ஏமாற்றுவதும் இடையாது.

'ஒரு பானை சோற்றுக்கு ஒரு பருக்கை போதும்' என்பது போல, பதிவிரதைகள் பலர் தோன்றும் பாரதநாட்டிலே, பரம்பரை பரம்பரையாக நம் கலாசாரத்தையும் பண்பாட்டையும் காத்து வரும் பல்லாயிரக்கணக்கான இந்தியத் தாய்மார்களின் ஒரு பிரதிபலிப்புதான் மெஹ்பூப்பின் இயற்கை வர்ணப் படமான 'மதர் இந்தியா'.

எத்தகைய கொடிய சோதனைகள் ஏற்பட்டாலும் மனம் தளரவில்லை. மரணம் மிரட்டியபோதும் அதர்மத்துக்கு மண்டியிடவில்லை. தான் பெற்ற செல்வங்களை வளர்க்க இரவு பகல் பாராது சலிக்காமல் உழைத்தாள். மானமே உயிரினும் பெரிதென மதித்தாள். புயல், வெள்ளம் போன்ற இயற்கைக் கொடுமைகளையும், கல்நெஞ்சு படைத்த சௌகார், மக்கள் அறியாமையைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு வாழ்ந்த ஜமீன்தார் போன்ற கொடியவர்களையும் தன்னந் தனியே எதிர்த்து நின்று போராடினாள். இப்படிப்பட்ட ஒரு பெண்ணின் சோகக் கதைதான் இந்தியத் தாய். ''எங்கள் பாரத தேசம் ஒன்றில்தான் இப்படிப்பட்ட தாய்க் குலத்தைக் காண முடியும்'' என்று ஒவ்வொரு இந்தியனும் மார் தட்டிக் கொள்ளலாம். அதுதான் டைரக்டர் மெஹ்பூப் இந்தப் படத்தைத் தயாரித்ததன் முக்கியமான லட்சியமாகவும் இருத்தல் வேண்டும்.

கதையின் போக்கைக் கவனிக்கும்போது, மெஹ்பூப் தமது லட்சியத்திலேயே கவனமாக இருந்ததில் கதை விஷயத்தில் அவ்வளவு சிரத்தை காட்டவில்லையோ என்று நினைக்கவே இடம் ஏற்படுகிறது. பாதையோடு போய்க் கொண்டிருந்த ரயில் வண்டி தடம் புரண்டது போல் முடிந்து விட்டது, படக் கதையின் பின்பகுதி. பின் பகுதி பூராவும் பிர்ஜு கதாபாத்திரம் கொண்டு போகப் பட்டிருக்கும் முறை — கொள்ளைக் கூட்டம் சம்பந்தப்பட்ட ஒரு கதை போல மாறி விடுகிறது. கிராமத்திலே வெட்டப் பட்ட ஒரு கால்வாயைத் திறந்து வைக்க அழைக்கும் அளவுக்கு அவளுக்கு (ராதா) மக்களிடம் செல்வாக்கு எப்படி ஏற்பட்டது என்பது விளங்காத விஷயமாக இருக்கிறது.

கதையிலே உள்ள இந்தச் சில்லறைக் குறைகள் மெஹ்பூப்பின் சிறந்த டைரக்ஷனிலே மறைந்தே போகின்றன. "இந்தக் காட்சி எதற்கு? அவசியமில்லையே" என்று குறை சொல்ல முடியாதபடி ஒவ்வொரு காட்சியும் இடம் பெற்றிருக்கிறது. ஆரம்பத்தில் கிழவி ராதாவின் கழுத்திலே உள்ள ரோஜா மாலையைக் காட்டி அதிலிருந்து மணப் பெண் ராதாவின் கதையைத் தொடங்குவது சிறந்த கற்பனை. 'மணமாகிக் கணவன் வீடு புகும் மணப் பெண், வீட்டுக்குள் முதன் முதலாக வலது காலை எடுத்து வைக்க வேண்டும்' என்ற சின்ன விஷயத்தைக்கூடக் கவனமாகக் கையாண்டிருப்பது பாராட்டுக்குரியது. ஜ்வாலை விட்டு எரியும் தீயினிடையே தாயும் மகனும் ஒருவரையொருவர் கூவி அழைத்துச் சந்திக்கும் கட்டத்தையும், வெள்ளக் காட்சியையும் மயிர்க்கூச்செரியும் முறையில் படமாக்கியிருக்கிறார். தன் கணவன் கைகளில் பாறை விழுந்ததும் ராதா அலறுவதும், ராதா கணவனைத் தேடும் கட்டமும் மறக்க முடியாதவை. ஆரம்பம் முதல் இறுதி வரை சோகமே ஆட்சி புரியும் இப்படத்தில் அந்த அலுப்புத் தெரியாமலிருக்க இடையிடையே தகுந்த இடங்களில் காதல் காட்சிகளைச் சேர்த்திருப்பது டைரக்டரின் திறமையை நன்கு வெளிப்படுத்துகிறது.

நர்கீஸ் தாயாக நடிக்கிறாள் என்று சொல்வதைவிட லட்சியத் தாயாகவே மாறிவிட்டாள் என்று குறிப்பிடுவதே பொருந்தும். மணப் பெண்ணாக, குழந்தையின் தாயாக, சுட்டிப் பயல்களின் அன்னையாக, தானே ஏர் பிடித்து உழும் (மாடாக உழைக்கும்) விவசாயப் பெண்ணாக, இளங் காளைகளின் தாயாக, கிழவியாக—இப்படியாகப் படிப்படியாக ஒவ்வொரு நிலையிலும் அவர் தோற்றம் மாறுவதுடன், ஒவ்வொரு கட்டத்திலும் உணர்ச்சி வசமாகி நம்மைக் கண்ணீர் விட வைக்கிறார். சுருங்கச் சொல்வதானால் அவர் ஏற்று நடித்த பாத்திரத்தை வேறு எவராலும் அவ்வளவு சிறப்பாக நடித்திருக்க முடியுமா என்பது சந்தேகம்தான்.

பொடியன் பிர்ஜூவாக வரும் அந்த வாண்டுப் பையனின் பெற்றோர் மீது படம் பார்ப்பவர்களுக்குப் பொறாமை ஏற்பட்டாலும் ஆச்சரியம் இல்லை. 'வெடுக்கு வெடுக்கு' என்று என்ன பேச்சு. பார்வையிலேதான் எத்தகைய குறும்பு. நடிப்பிலே துடிப்புடன் ஜீவன் துள்ளுகிறது. காளை பிர்ஜூவாக வரும் சுனில் தத் மட்டும் என்ன? ஊருக்கு வால் பிள்ளையான அவன் தாய்க்கு முன் பசுவாக நடிக்கும் திறமையே திறமை. முக்கிய கதாபாத்திரங்களின் நடிப்பை மட்டுமே குறிப்பிடுவதுடன் நிறுத்திக் கொள்ள இருக்கிறது. காரணம், 'நன்றாக நடிக்கவில்லை' என்று குற்றம் சாட்ட யாருமே இடம் வைக்கவில்லை என்பதுதான்.

நௌஷத் சங்கீதத்தின் தரத்தை, கப கற்பனையை இப்படத்திலும் கேட்க முடிகிறது. சம்பவங்களின் முக்கியத்துவத்துக்கு ஏற்றபடி பின்னணியில் இசையை அவர் அமைத்திருப்பது, குறிப்பிட்ட அந்தச் சம்பவங்களை மேலும் விறுவிறுப்பாக்கிக் காட்டுகிறது. எல்லாப் பாட்டுகளுமே இனிமையாக இருக்கின்றன. "மத்துவால ஜியா", "நகரி நகரி", "நாமே பகவானு" ஆகியவை குறிப்பிடத் தக்கவை.

பத்தினித் தெய்வம், கற்புக்கரசி என்றெல்லாம் புகழப்படும் பலரின் கதையைப் புராணங்கள் வாயிலாக நாம் படித்துத்தான் அறிவோம். அத்தகையவர்களின் பெருமைக்குக் கிஞ்சித்தும் குறையாத புகழுடன் கூடியவள்தான் இருபதாம் நூற்றாண்டின் இந்த இந்தியத் தாய் என்பதைப் பார்த்து அறிந்து கொள்ளலாம். —ஜாம்பவான்






போட்டிப் பந்தயங்களைப் பாரத நாட்டை விட்டே விரட்டி விட்டனர் நம் சுதந்திர சர்க்கார். ஆனால், நம் படாதிபதிகள் அதை விட்டுவிடத் தயாராயில்லை. பலவிதமான போட்டிப் பந்தயங்கள் கொண்ட கதைகளை அவர்கள் தேடிப் பிடித்துப் படமாக்குவதில் போட்டி போட்டு வருகின்றனர். ஆரவல்லியையும் சௌபாக்கியவதியையும் இதற்கு உதாரணங்களாகக் குறிப்பிடலாம்.

'ஆணுக்குப் பெண் தாழ்ந்தவள் அல்ல' என்ற அகந்தை கொண்டவள் ஆரவல்லி. அவள் வைத்த போட்டியிலே தோற்ற, பீமன் உட்பட, பல மன்னாதி மன்னர்களை அவள் அடிமை கொண்டு அரசு புரிந்து வருகிறாள். பஞ்ச பாண்டவர்களின் சகோதரி சங்கவதியின் மகன் அல்லிமுத்து, ஆரவல்லி வைத்த போட்டியில் வெற்றி பெற்று, அவள் கொட்டத்தை அடக்கி, ஆரவல்லியின் மகள் அலங்காரவல்லியின் காதலையும் பெறுகிறான். கதை முடிந்து விடவில்லை. இத்துடன் முடிந்து விட்டால், படம் 15,852 அடிகள் நீளம் வளர வேண்டாமா?

தோற்றுப் போன ஆரவல்லி சூழ்ச்சி செய்கிறாள். கார்க்கோடக விஷத்தைத் தன் மகள் அலங்காரத்தின் மூலம் அல்லிமுத்துவுக்குக் கொடுத்து விடுகிறாள். அபிமன்யு கார்க்கோடகன் பாம்பையே கொண்டு வந்து அல்லிமுத்துவை உயிர்ப்பிக்கிறான். இங்கும் கதை முடிந்து விடவில்லை. தர்மரின் தர்பாரிலே அல்லிமுத்துவுக்கு விஷமிட்ட வழக்கு விசாரணை நடக்கிறது. அலங்காரவல்லியே குற்றவாளியென்று முடிவு செய்து அவளுக்கு மரண தண்டனை விதிக்கப்படுகிறது. தண்டனை நிறைவேற்றப் படவிருக்கும் சமயம் தாய்ப் பாசத்தால் உந்தப்பட்ட ஆரவல்லி உண்மை அனைத்தையும் கக்கி விடுகிறாள். கதை முடிந்தே விட்டது!

விறுவிறுப்பான பல சம்பவங்களைக் கொண்ட புராணக் கதை, திரையிலே சின்னாபின்னமாக்கப் பட்டிருக்கிறது. ஆரவல்லி, சங்கவதி இவ்விருவரின் கணவன் யார் என்பது மகாபாரதக் கதை முழுதும் தெரிந்தவர்களுக்குத் தெரியலாம். பெரும்பாலான மற்றவர்களை மனத்தில் கொண்டு சம்பாஷணை மூலமோ, சிறு சம்பவம் மூலமோ அதைத் தெளிவுபடுத்தியிருக்க வேண்டும்:

''வளை அணிந்த கை வாள் ஏந்தும்; சமையல் செய்யும் கை சாம்ராஜ்யத்தை ஆளும்; பானை பிடித்த கை யானையைப் பிடித்து அடக்க முடியும்'' என்ற ஆரவல்லியின் வீரப் பேச்சு; நகுலனைப் பார்த்துத் தர்மர் ''குதிரை என்று நினைத்தாயா கழுதையும் பார்த்து அடக்க'' என்று கூறுவது. இப்படியாக அங்கொன்றும் இங்கொன்றுமாக எண்ணி நாலைந்து இடங்களில் மட்டும் வசனம் நன்றாக இருக்கிறது. மற்றப்படி சர்வ சாதாரணம். ''செத்த பிரேதம்,'' ''கணவன் கல்லறைக்கு முன் முட்டி முட்டிச் சாவேன்,'' என்றெல்லாம் எழுதும் வசனகர்த்தாவைப் பற்றி அதிகம் எழுத வேண்டியதில்லை.

''பழக்கமில்லாத கழுதை கிட்டே'' ''சின்னக்குட்டி நாத்தனா'' என்ற இரு பாட்டுகளும் கேட்கத் தமாஷாக உள்ளன. அவைகளில் என்ன கருத்து இருக்கிறது என்று மட்டும் கேட்டு விடக் கூடாது!

கம்பீரமான தோற்றம், கவர்ச்சிகரமான முகம், உணர்ச்சிமிக்க நடிப்பு இந்த யோக்கியதாம்சங்களில் ஒன்றுகூட இல்லை, கதாநாயகன் அல்லிமுத்துவாக நடிக்கும் எஸ். ஜி. ஈசுவரனிடம். அபிமன்யு, பீமன் போன்ற கதாபாத்திரங்களை இந்தப் படத்தில் பார்க்கும் போது, புராணகாலத்திய அந்த மாபெரும் வீரர்கள் குறித்து நாம் கொண்டிருக்கும் மதிப்பு மரியாதை அனைத்துக்குமே ஆபத்து வந்துவிடுமோ என்ற ஐயமே ஏற்படுகிறது.

வீராங்கனையாகக் காட்சி அளிக்க வேண்டிய ஆரவல்லியின் பாத்திரம் ஜி. வரலக்ஷ்மிக்குக் கொஞ்சம்கூடப் பொருத்தமாக இல்லை. கல்லூரிகளிலே பேராசிரியர்கள் போதிப்பது போல இருக்கிறது. உணர்ச்சியின்றி அவர் பேசும் தோரணை. தங்கை சூரவல்லி பாத்திரம் ஏற்றிருக்கும் எஸ். மோகனாவும், தர்மராக கே. நடராஜனும்தான் நன்றாக நடித்திருக்கின்றனர். குறும்புக்காரப் பெண்ணாக நடிப்பதில் தன்னிகரற்று விளங்கும் மைனாவதிக்கு இப்படம் ஒரு மாபெரும் தோல்வி.

காகா ராதாகிருஷ்ணன், ஏ. கருணாநிதி, முத்துலக்ஷ்மி ஆகியோர் சம்பந்தப்பட்ட ஹாஸ்யக் காட்சிகள் அனைத்துமே ஒரே கேலிக்கூத்தாக முடிந்துள்ளன.

நம்மில் பலர், சிறு பிராயத்தில் கிருஷ்ண ஜயந்தி அன்றும், சிவராத்திரி புண்ணியதினத்திலும் வீட்டின் கூடத்திலே ஒரு ஜமக்காளத்தையோ, அல்லது போர்வையையோ திரையாகக் கட்டிவிட்டு நாடகம் நடித்து ரசித்திருக்கிறோமே, நினைவிருக்கிறதா? மொத்தத்தில் அந்தப் பால்ய சம்பவத்தை நினைவூட்டுவதாக இருக்கிறது ஆரவல்லி. —ஜாம்பவான்

ஈடில்லா
எழிலுக்கு
ரெமி அழகு சாதனங்கள்



# தம்பதிகளுக்கு ஓர் ஆலோசனை

1. குடும்பக் கட்டுப்பாடு புத்தகம் ஒன்றைத் தயவுசெய்து வாங்கிப் படியுங்கள். புத்தகத்தின் விலை 25 காசுகள் தான். (தபால் செலவு தனி.)

2. புத்தகம் மூன்று பாகங்கள் அடங்கியது. முதல் பாகத்தில் சென்னை அரசாங்கத்தினால் நியமிக்கப்பட்டுள்ள குடும்பக் கட்டுப்பாடு போர்டின் ஆலோசனைகள் தரப்படுகின்றன. குடும்பக் கட்டுப்பாடு பற்றிய இயற்கை வழிகள், கருவி வழிகள், ரண சிகிச்சை வழிகள் இவற்றை இரண்டாம் பாகம் எடுத்துரைக்கிறது. குடும்பக் கட்டுப்பாடு போர்டின் ஆலோசனைகளைப் பின்பற்றி நடப்பதன் மூலம் உங்கள் குடும்பத்துக்கும் நாட்டுக்கும் நீங்கள் செய்ய வேண்டிய கடமைகளை மூன்றும் பாகம் தெளிவு படுத்துகிறது. ஆங்கிலத்திலும் தமிழிலும் புத்தகங்கள் கிடைக்கும்.

## புத்தகத்தை எப்படிப் பெறுவது?

1. அரசாங்க அச்சகசூப்பிரண்டு, மவுண்ட் ரோடு, சென்னை - 2 என்ற முகவரியிலும் மற்றும் அரசாங்க வெளியீடு ஏஜண்டுகளிடமும் கிடைக்கும். (அல்லது)

2. மதராஸ் - 18, வைத்தியத் துறை டைரக்டர் அலுவலகத்திலுள்ள சென்னை மாநிலக் குடும்பக் கட்டுப்பாடு அதிகாரிக்குக் கடிதம் எழுதி ஆங்கிலமோ தமிழோ ஒரு பிரதி கேட்கலாம். உங்களது முழு முகவரியுடன் 36 காசை மணியார்டர் செய்ய வேண்டும். சாதாரண புக் போஸ்டில் ஒரு புத்தகம் உங்களுக்கு அனுப்பப்படும். 86 காசுகள் மணியார்டர் அனுப்பினால் புத்தகம் ரிஜிஸ்தர் புக்போஸ்டில் அனுப்பி வைக்கப்படும்.

சென்னை மாநில
குடும்பக் கட்டுப்பாடு அதிகாரி

# பாவை விளக்கு

அத்தியாயம் 25

## தங்கச் சங்கிலி



நெருப்புக்குள்ளே அகப்பட்ட சிலர் நின்ற இடத்திலேயே நின்று துடித்துவிட்டு, தப்புவதற்கு வகை தெரியாமல், அதற்குள்ளாகவே வலுவிழந்து அடங்கி ஒடுங்கி விடுகிறார்கள். இன்னும் சிலர் விழுந்தடித்துக் கொண்டு பற்றிய நெருப்போடு வெளியில் ஓடுகிறார்கள். தணிகாசலமும் இப்படித்தான். தேவகியின் வீட்டுக்குள் நுழைவதற்கு முன்னால், கண்ணபுரத்துத் தெருக்களில் அலைந்தான். வாழ்க்கையின் ஏமாற்றத்தைச் சிறிய சிறிய விஷயங்களில் அநுபவித்து அவனுக்கு வாழ்க்கையின் மீதே சீற்றம் பிறந்து விட்டது.

கண்டிராக்டர் கண்ணுச்சாமி அவனை ஏமாற்றி விட்டார். அவனுக்கு அறிமுகமான நாள்தொட்டுக் கடன் கொடுப்பதாக ஆசை வார்த்தை காட்டியவர் கடைசி நிமிஷத்தில் கை விட்டு விட்டார். அவரை நம்பி அவன் கௌரிக்கு வாக்களித்து வந்திருக்கிறான். அவளுடைய நம்பிக்கையை வளரச் செய்து கனிய வைத்திருக்கிறான். இடையில் என்றோ ஒருநாள் தலைகாட்டி, பல நாள் பழகி, பிறகு இடீரென்று மறைந்து போன செங்கமலத்தைப்போல் இல்லை, கௌரி. அவனுக்காகவே பிறந்து வளர்ந்தவள். 'நான் இடையில் அவளை மறந்ததற்காக ஏற்பட்ட தண்டனையா இது?' என்று புழுங்கினான் தணிகாசலம்.

காத்திருந்த கௌரியை வேற்று மனிதன் கொண்டு போகப் போகிறான்!

தெருவில் வரும்போதே, மற்றொரு யோசனையும் தணிகாசலத்தை அலைக்கழித்தது. கண்டிராக்டர் லஞ்சமாய்க் கொடுத்த நூறு ரூபாய் நோட்டைக் கை நீட்டி வாங்கிக் கொண்டிருந்தால், மேலும் ஆயிரத்தைக் கட்டாயம் கொடுத்திருப்பார். 'பிழைக்கத் தெரியாத பிள்ளை' என்று பெயரெடுத்திருக்க வேண்டியதில்லை. தான் அந்த ரகசியத் தகவலைக் கண்ணுச் சாமிக்குக் கொடுக்காவிட்

அகிலன்

டாலும் வேறு யாராவது கொடுத்து லாபமடையத்தான் போகிறார்கள். ஏன், லஞ்சம் வாங்கினால் என்ன? கௌரியை முன்னிட்டாவது நாணயக் குறைவாக நடந்துகொண்டால் என்ன?

தெருச் சாக்கடையில் காறித் துப்பினான் தணிகாசலம்; தன்னுடைய அந்த எண்ணத்தின் மேல் துப்பிக் கொள்வதாக அவனுக்கு நினைவு. பணம் உள்ளவர்கள் பணத்தைக் கொடுத்துச் சட்டத்தையும், நியாயத்தையும், நேர்மையையும் விலைக்கு வாங்கும் நிலை பெருகி விட்டால், சோற்றுக்கே வழியில்லாதவர்கள் கதி என்ன ஆவது? நூற்றுக்குத் தொண்ணூறு பேர் தாழ்ந்து, பத்துப் பேர்தான் வாழ முடியுமென்றால் அந்த வாழ்க்கையே அழிந்து போகட்டுமே!

கௌரி தணிகாசலத்தின் மனத்தில் கனவாக, கற்பனையாக, கிட்டாத பொருளாக மாறிக் கொண்டு வந்த அந்த நேரத்தில்தான் அவன் தேவகியின் வீட்டுப் படியேறினான்.

பைத்தியக்காரனைப் போல் ரேழிப் பக்கம் வந்து நின்று எட்டிப் பார்த்த தணிகாசலத்தைக் கண்டு, தேவகி தன் தாயாரின் அறையிலிருந்து ஓடிவந்தாள். அவனுடைய கலைந்த தலையும், காய்ந்த உதடுகளும், வெறித்த பார்வையும் அவளுக்கு என்னவோ போல் தோன்றின.

"எங்கே உன்னை இவ்வளவு நாளாய்க் காணோம்? இந்த ஊரில்தான் இருக்கிறாயா?" என்று வரவேற்றாள்.

தணிகாசலம் அவளுக்குப் பதிலளிக்காமல், அவளுடைய தாயாரிடம் சென்று உடல் நலனை விசாரித்தான். பிறகு வீட்டுக்குள் சுற்றிப் பார்த்தான். சிவகாமி அண்ணி, குழந்தை, சுப்பையா — யாரையுமே காணவில்லை. 'அவர்கள் எங்கே?' என்று கேட்பது போல் நெற்றியைச் சுருக்கினான்.

"அண்ணாவை இரண்டு மாதங்களுக்கு அடுத்த ஊருக்கு மாற்றியிருக்கிறார்கள். குடும்பத்தோடு போயிருக்கிறார். அங்கே அம்மாளுக்கு வைத்திய வசதி கிடையாது. அதனால் நாங்கள் இங்கே இருக்கிறோம். ஆயிற்று; இன்னும் ஒரு மாதத்தில் அவர்களும் திரும்பி விடுவார்கள்."

சுவர் ஓரமாக ஓலைத் தடுக்கை எடுத்துப் போட்டாள் தேவகி. தணிகாசலம் இயந்திரம் போல் உட்கார்ந்தான். பிறகு தலையைத் தூக்கி மேலே மூகட்டு வளையைப் பார்த்தான்.

"உன் உடம்புக்கு என்ன? ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்?" என்று கவலையுடன் கேட்டாள் தேவகி.

"உடம்புக்கு ஒன்றுமில்லை; நன்றாய்த் தான் இருக்கிறேன்" என்று சிரித்தான்.





அவன் சிரிப்பு வறட்டுச் சிரிப்பு என்பதை அவள் கண்டு கொண்டாள். "ஏன், என்னிடம் சொல்லக் கூடாதா? காய்ச்சலில் அடிபட்டவனைப் போல் நிற்கிறாய். காரணத்தைக் கேட்டால் மழுப்புகிறாயே?"

"ஒன்றுமில்லை."

"சரி, எதற்காக வந்தாய்? சொல்."

"சும்மா வந்தேன்; உங்களைப் பார்த்து வெகு நாட்களாகின்றன. வீட்டில் பால் இருந்தால் காப்பி போட்டுக் கொடுங்கள். குடித்து விட்டுப் போகிறேன். வேறு ஒரு காரணமும் இல்லை."

தேவகி அடுக்களைக்குச் சென்றாள். பாலைச் சுட வைத்து அவள் காப்பி கொண்டுவரும்வரையில் அவனுக்கு அங்கே சும்மா உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. சுப்பையாவின் அலுவல் அறைக் கதவைத் திறந்து கொண்டு போய் அங்கு கிடந்த சாய்வு நாற்காலியில் விழுந்தான். சட்டைப் பையில் தன் தாயாருக்கு எழுதி வைத்திருந்த கடிதத்தைத் திரும்பவும் படிக்க வேண்டும் போல் தோன்றியது. எழுந்து வந்து கதவைச் சாத்திவிட்டு அதைப் படிக்கத் தொடங்கினான்.

கடிதத்தின் கடைசி வரிகள் அவனுக்குக் கண்ணீரை வரவழைத்தன.

"சிறுபிள்ளைத்தனமாக நான் உங்களிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கி அனுப்புவதாக ஒப்புக் கொண்டேன். நம்பிய மனிதர் என்னை நட்டாற்றில் விட்டு விட்டார். சித்தப்பாவிடம் இப்போது பணம் கேட்க வழியில்லை. அவரிடமும் வசதிகிடையாது. முன்பே அவர் எனக்குப் பணத்துடன் வரக் கூடிய ஓரிரண்டு சம்பந்தங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். இப்போது கேட்டால், பணத்துடன் வரும் பெண்ணைப் பார்க்கலாம் என்பார். ஆகவே அவரிடம் கேட்கவில்லை. ஆயிரம் காசுக்குக்கூட என்னை இங்கு யாரும் மதிக்கவில்லை. நீங்களும், மங்களத்துப் பாட்டியும், லட்சுமியும் மிகவும் வருத்தப்படுவீர்கள். கௌரியிடம் நேரில் நான் வாக்களித்து வந்தேன். அவள் தன்னை ஏமாற்றிவிட்டதாக நினைத்துக் கொள்வாள். நான் மனதறிந்து யாரையும் ஏமாற்றவில்லை. காசில்லாதவர்களுக்கு உற்றம், சுற்றம், உரிமை எதுவுமே கிடையாது. நான் அவளுக்கு ஆசைப்பட்டது தவறு; அவளுக்கு வாக்களித்தது தவறு; நீங்கள் எல்லோரும் சேர்ந்து என்னை மன்னிக்க வேண்டும்."

தணிகாசலம் தான் கடிதம் படித்த வேகத்தில் தேவகியையும் காப்பியையும் மறந்து விட்டான். படித்தவுடன் ரேழிக்குத் திரும்பிப் போக நினைத்தவன் திரும்பவில்லை. அவனுக்குப் பின்னால் அவனுக்குத் தெரியாமல் வந்து நின்ற தேவகி அதே கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தாள்.

கடிதத்தைத் தேவகி பற்றி இழுத்துப் பிடுங்கிக் கொண்டாள். "காப்பியைக் குடி, இதோ வந்து விடுகிறேன்" என்று தம்ளரைக் கொடுத்து விட்டு உள்ளே போனாள். தணிகாசலம் அவளிடமிருந்து அதைப் பெறச் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின.

சூடான காப்பி புதிய தெம்பைக் கொடுத்தது. சில வினாடிகள் அவளுக்காக எதிர்பார்த்து விட்டு, தணிகாசலம்

உள் கூடத்துக்குச் சென்றான். தேவகியின் அறையில் சத்தம் கேட்டது. கதவோரமாக நின்று எட்டிப் பார்த்தான். இரண்டு மூன்று பெட்டிகளைத் திறப்பதும் மூடுவதுமாக இருந்தாள் தேவகி. உண்டியல்கள் குலுங்கின. வெள்ளி நாணயங்கள் தரையில் உருண்டன. சேர்த்து வைத்துக் கொண்டு எண்ணிப் பார்த்தாள். முகம் ஏமாற்றம் காட்டியது. திரும்பவும் பெட்டியைத் திறந்து இரண்டு வடம் தங்கச் சங்கிலியை வெளியே எடுத்தாள்.

தணிகாசலம் சுப்பையாவின் அலுவல் அறைக்குத் திரும்பி விட்டான். அவனுக்கு இந்த ஏற்பாடுகள் எதுவுமே பிடிக்கவில்லை. சுப்பையா வீட்டில் இல்லாத சமயத்தில் அவள் இப்படிச் செய்வது அவனுக்கு என்னவோபோல் தோன்றியது. 'லஞ்சப் பணமும் இந்தப் பணமும் ஒன்றுதான்' என்று அவன் முணுமுணுத்தான்.



சிறிய வெள்ளித் தாம்பாளம் ஒன்றில் நோட்டாகவும் நாணயமாகவும் பணத்தை வைத்து அவன் முன்னால் மேசையில் கொண்டு வந்து வைத்தாள். பணத்துடன் தங்கச் சங்கிலியும் இருந்தது. தணிகாசலம் அதைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை.

"எங்கே என்னுடைய கடிதம் ?" என்று கேட்டான்.

"அதைக் கிழித்துப் போட்டு விட்டேன்" என்றாள்.

"விளையாடாதீர்கள், அக்கா !" என்று கத்தினான்.

"நானா? உன்னோடு விளையாடுகிறேன்? நீ நெருப்பாயிற்றே!" என்று சிரித்தாள்.

"கடிதத்தைக் கொடுங்கள். எனக்கு உங்களுடைய அன்புமாத்திரம் போதும். இதெல்லாம் வேண்டாம். உங்களைப் பார்த்து என் கவலையைக் கொஞ்சம் மறப்பதற்காக வந்தேன். புதுக் கவலை ஏற்படுத்தாதீர்கள். அண்ணா இல்லாத போது நீங்கள் பணம் கொடுப்பதும் தவறு; நான் வாங்கிக் கொள்வதும் தவறு. நான் உங்களைப் பணம் கேட்பதற்காக வரவில்லை."

"இது என்னுடைய சொந்தப் பணம். அண்ணாவுக்குத் தெரியாமல் நான் இதைக் கொடுக்கவில்லை. நாளைக்கே கடிதம் எழுதிப் போட்டு விடுவேன். நீ தொடர்ந்து மேல்படிப்புக்குப் போவதாக இருந்தால் அப்போது கொடுக்க வேண்டுமென்று நானும் அண்ணாவும் பேசிக் கொண்டோம். அது நடக்கவில்லை. அறுநூறு ரூபாய் ரொக்கம் இருக்கிறது. பாக்கி நானூறு இந்தச் சங்கிலியைப் பாங்கியில் வைத்து வாங்கிக் கொள். அடுத்த அறுவடையில் நெல் விற்று வந்தவுடன் நான் நகையைத் திருப்பிக் கொள்ளுகிறேன்."

தணிகாசலம் தேவகியின் நெற்றியை உற்றுப் பார்த்தான். மனித உருவத்தில், அதற்குள்ளே கட்டுப்படாத மகாசக்தி ஒன்று சிறைப்பட்டு நிற்பது போல் தோன்றியது. அவன் அவளைக் கண்டும் அவள் கொடுத்த பணத்தைக் கண்டும் அஞ்சி நடுங்கினான்.

"வேண்டாம், அக்கா! என்கஷ்டம் என்னோடு இருக்கட்டும். நீங்கள் இவ்வளவு அன்பு காட்டுவதற்கு நான் தகுதி உடையவன் இல்லை. என்னை உங்களுக்குத் தெரியாது. நான் நன்றியைக்கூட மறந்து விடுவேன். வேண்டாம்."

இடத்தை விட்டு எழுந்தவனை அதட்டி உட்கார வைத்தாள் தேவகி. அவன் கலங்கினானே தவிர, பிடிவாதத்தை விடவில்லை. தேவகி அவனை வாயில் வந்தபடி திட்டினாள்.

"நான் உனக்காக இதைக் கொடுக்கவில்லை. நீ பெண் மனம் தெரியாத முரடன். யாரிடம் இந்த வீம்பு செய்கிறாய் என்று நினைத்துப் பார். நீ வாக்குக் கொடுத்தாயே, அந்தப் பெண்ணைப் பற்றி அக்கறையிருந்தால், இப்படி வருகிற பணத்தை உதறித் தள்ளுவாயா? மனிதனுக்கு ஒரு நாக்கா, இரண்டு நாக்கா? அவள் என்ன நினைப்பாள்? உன்னைப் போல் ஆண்களை நம்பிப் பெண்களைப் படைத்த கடவுள் ஈவு இரக்கமில்லாதவர்" என்றாள் கோபமாக.

தணிகாசலத்துக்கு அதற்கு மேல் சொல்வதற்கு ஒன்றுமில்லை. அவளுடைய கால்களில் விழுந்து ஆசீர்வாதம் பெற்றுக் கொள்ள வேண்டும் போலிருந்தது, அவனுக்கு. கௌரியை நேரில்கூடப் பார்த்தறியாத ஒரு பெண் அவனுடைய

மனநிலையை அவன் எதிரில் கொண்டு வந்து நிறுத்திவைத்து விட்டான்.

மறுநாள் காலையில் தேவகியும் தணிகாசலமும் தங்கச் சங்கிலியை எடுத்துக் கொண்டு கடைத் தெருவில் உள்ள பாங்கிக்குச் சென்றார்கள். நெடுநேரம் அங்கு காத்திருந்து அவர்கள் கேட்ட கேள்விகளுக்குப்பதில் சொல்லிப்போடச் சொன்ன இடத்தில் கையெழுத்துப் போட்டு நானூறு ரூபாய் கடன் வாங்கினாள் தேவகி. "இதற்கு முன்னால் நான் இப்படி வெளியில் வந்ததும் இல்லை! பணம் வாங்கியதும் இல்லை" என்றாள் தேவகி. அவளுக்கு இந்த அனுபவம் வெட்கமாகவும் வேடிக்கையாகவும் இருந்தது.

வீட்டுக்கு வந்ததும் ஆயிரமாக அவனிடம் சேர்த்துக் கொடுத்தாள். பணத்தைப் பெற்றுக் கொண்ட தணிகாசலம் தயாராகத் தன்னுடைய சட்டைப் பையில் வைத்திருந்த கடன் பத்திரத்தை எடுத்து நீட்டினான். கண்ணுச்சாமியிடம் வேலை செய்த காலத்தில் இப்படிப் பல பத்திரங்கள் எழுதி அவனுக்குப்பழக்கம்.

தேவகி திடுக்கிட்டாள். "உனக்கே இப்படிச் செய்வது நன்றாயிருக்கிறதா? என்னை அவமானப்படுத்துகிறாயா?" என்றாள். பத்திரத்தை அவள் வாங்கிக் கொள்ளவில்லை.

"இதை வாங்கி அண்ணாவுக்கு அனுப்புவதென்றால் பணத்தை எடுத்துக் கொள்வேன்; இல்லாவிட்டால் வேண்டாம்" என்றான் தணிகாசலம். "வட்டி குறைத்துத்தான் போட்டுக் கொண்டிருக்கிறேன்."

தேவகியால் அவனை வழிக்குக்கொண்டு வர முடியவில்லை. பத்திரத்தை வாங்கிக் கொண்டு, "நீயும் கௌரியும் சீக்கிரம் இங்கே வந்து என் கையால் ஒரு வேளை சாப்பிடுங்கள். அதுதான் நீ எனக்குக் கொடுக்கும் முதல் வட்டி" என்றாள்.

தணிகாசலத்துக்கு இதைக் கேட்டுப் புல்லரித்தது.

தன்னுடைய அறைக்கு வந்து அவள் கொடுத்த பணத்தையே வெகு நேரம் வேடிக்கை பார்த்தான் தணிகாசலம். நாணயத்திலும் சரி, காகித நோட்டிலும் சரி, வெள்ளைக்கார மன்னரின் தலை தெரியவில்லை. ஒவ்வொன்றிலும் தேவகியின் திரு உருவம் தெரிந்தது. 'கண்ணுச்சாமியும் நாகநாதனும் வாழக்கூடிய உலகத்தில் தேவகியைப் போன்ற பெண்களும் வாழ்கிறார்கள்; உலகம் விசித்திரமான காட்சிச்சாலைதான்!' என்று நினைத்தான் தணிகாசலம்.

## அத்தியாயம் 26
## கல்யாணப் பரிசு

தங்களுடைய இன்ப-துன்பங்களையும் குடும்பத்தார், உற்றார்-உறவினர் நலன்களையும் கருத்தில் கொண்டு வாழ்பவர்களே இங்கு மிகுதி. அக்கம்-பக்கம், ஊர்-உலகம் என்னும் விவகாரங்களில் நம்முடையவர்கள் கூடுமானவரையில் பட்டுக் கொள்வதில்லை. சமுதாய உணர்ச்சி மரத்துப் போன ஒரு சமூகம் உலகத்தில் வாழுமானால் அது தமிழ்ச் சமூகமே.

தணிகாசலம், பதினைந்து வருடங்களுக்கு முன்பு, இரண்டாவது உலகப் போர் நடந்து கொண்டிருந்த சமயத்தில் மேற்கண்ட முடிவுக்குத்தான் வந்தான். வெளி உலகத்தைப் பற்றி அவனால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. சண்டையின் பெயரைச் சொல்லி இந்த நாட்டை ஆண்டு கொண்டிருந்த ஆங்கிலேயர்கள் நாட்டின் கடைசிச் சொட்டு ரத்தம் வரை உறிஞ்சி விட்டார்கள். அவர்களுடைய பட்டாளத்துக்காகவே ரயில் ஓடியது; பொதுமக்களுக்கு ரயிலில் இடமில்லை. அவர்களுடைய பட்டாளத்துக்காகவே நெல்லும் கோதுமையும் விளைந்தன; பொதுமக்கள் பட்டினி கிடந்து செத்தார்கள். அவர்களுக்காகவே பருத்தி காக்கித் துணியாய்க் காய்த்தது! பொதுமக்களுக்குக் கட்டிக் கொள்ளத் துணி கிடைக்கவில்லை.

கள்ளமார்க்கெட் திருட்டு வியாபாரப் பெருச்சாளிகளும், லஞ்ச ஊழல் வஞ்சகர்களும், தடியடிக் கைவரிசை காட்டிய அதிகார உலகமும் அப்போது தான்தோன்றித்தனமாக நாட்டை ஆட்சி செய்தன. அன்றைக்கு இந்த நாட்டில் செத்துப்போன மனிதாபிமானம் இன்றுவரை மீளவில்லை என்று கூடச் சொல்லலாம். உலகப் போர் மனிதர்களை மட்டும் கொல்வதில்லை; மனிதத்தன்மையையே யல்லவா கொன்று விடுகிறது!

தணிகாசலமும் அவனுடைய விடுதியில் தங்கியிருந்த சில இளைஞர்களும் நாட்டைப் பற்றிக் கூட்டுச் சிந்தனை செய்தார்கள். கண்ணபுரம் சமஸ்தானத்துக்கு வெளியே திரண்டிருந்த விடுதலைச் சக்திகள் அவர்களுக்கு வழிகாட்டின. "அன்னிய ஆட்சிக்கு எதிராகப்

பிரிட்டிஷ் இந்தியாவில் புரட்சி நடக்குமானால் அதில் நாமும் சேரவேண்டும்'' என்று பேசிக்கொண்டார்கள் அவர்கள். அந்த இளைஞர்களில் பலர் கல்லூரி மாணவர்கள்.

தணிகாசலத்துக்குச் சொந்தக் கவலை ஒருபுறம்; நாட்டுக் கவலை மறுபுறம். வயது வந்த பெரிய மனிதர்களிடம் அவனுக்கு நம்பிக்கை குறைந்துகொண்டு வந்தது. தன்னல உணர்ச்சி குறைந்த இளைஞர்களால்தான் உலகெங்கும் புத்துயிர் பெற்றிருக்கிறது. வீதியில் உள்ள இளைஞர்களை விட்டுவிட அவனுக்கு மனமில்லை. மாலை நேரங்களில் அவர்களை அழைத்து வைத்துப்பேசி நாட்டில் நடக்கும் அக்கிரமங்களைச் சுட்டிக்காட்டினான்.

அகம், புறம் இரண்டு பகுதிகளிலும் சூழ்நிலையால் பாதிக்கப்படும் தன்மை வாய்ந்தவன் தணிகாசலம்! புதுப்பட்டியிலிருந்தபோது செங்கமலம் அவனை ஆட்சி செய்தாள். பொன்வயலுக்குச் சென்றவுடன் அவனைக் கௌரி பிடித்துக் கொண்டாள். கண்ணபுரத்தில் தனியாக இருந்தபோது அவன் தன்னுடைய லட்சியத்தையே-மனிதர்களின் துன்பத்தைத் துடைக்க வேண்டும் என்ற ஆசையையே - காதலித்தான். துன்பப்படுகிறவர்களைக் கண்டவுடன் அவன் மனம் இரங்கியது; துன்பம் கொடுப்பவர்களைக் கண்டவுடன் அது குமுறியது.

கல்யாண ஏற்பாடுகள் பொன்வயலில் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. தணிகாசலம் அனுப்பிய ஆயிரம் ரூபாய் அங்கு கிடைப்பதற்கு முன்பே, மங்களத்துப் பாட்டி வீட்டை ஒத்திக்கு வைத்து மற்றொரு ஆயிரம் வாங்கி விட்டாள். இந்தப் பணத்தைக் கண்ணால் கண்ட பிறகு, வீரம்மாள் பாட்டி கண நேரம் தன் மகள் வீட்டில் தங்கவில்லை. பெரியதொரு ரணகளமே நடத்திவிட்டு, கௌரியைக் கரித்துக்கொட்டி விட்டு, காளியம்மவிடம் நீண்டதொரு சொற்பொழிவு நிகழ்த்தி விட்டு, தன் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டாள். தன் ஆயுள் உள்ளவரையில் மகள் வீட்டுக்குத் திரும்புவதில்லை என்று சபதம் செய்து கொண்டு போனாள். அப்படி அவள் தன்னுடைய சபதத்தைக் காப்பாற்றி இருந்தால் எவ்வளவோ கலவரங்களெல்லாம் நடைபெறாமல் தடைபட்டிருக்கும்.



கல்யாண அழைப்பு, 'மலர்க்கொத்து' பத்திரிகை, அதன் ஆசிரியர் எழுதிய கார்டு மூன்றும் ஒரே நாள் தபாலில் தணிகாசலத்துக்கு வந்து சேர்ந்தன. அலுவலகத்திலிருந்து அவன் திரும்புவதற்கு முன்பே அவனுக்கு வந்த கார்டையும், அவன் பத்திரிகையில் எழுதிய கதையையும் படித்து விட்டார்கள் மாணவர்கள். திருமண அழைப்புக் கட்டு பெரிதாக இருந்ததால், வந்தவுடன் அதைப் பிரித்து அனைவருக்கும் பெயர் எழுதி வழங்கினான் தணிகாசலம்.

கதையை மனதாரப் பாராட்டினார்கள் சிலர்; வேறு சிலர் அன்றைக்கே அவனுக்குக் கல்யாணத்தையும் முடித்து விடுவார்கள் போல் தோன்றியது! மாணவ உலகத்தின் உற்சாகத்துக்குக் கங்கு கரை ஏது?

மறுநாள் தேவகியின் வீட்டுக்குச் சென்று அழைப்பைக் கொடுத்தான். பன்னிரண்டு மைல் தூரத்தில்தான் சுப்பையா மாற்றலாகி யிருந்தார். அங்கும் சென்று நேரில் கொடுத்து விட்டுப் புதுப்பட்டிக்கு வந்தான். சித்தப்பாவுக்கு எப்போதுமே பொன்வயல் சம்பந்தத்தில் திருப்தி கிடையாது. தங்களுடைய அந்தஸ்துக்குத் தக்க இடமில்லை என்பது அவர் எண்ணம். என்றாலும் ஏற்பாடுகள் முடிந்துவிட்ட பிறகு தணிகாசலத்தை மனதார ஆசீர்வதித்தார். கண்டிராக்டர் கண்ணுச்சாமிக்கும் அழைப்புக் கொடுக்கச் சொன்னார்.

கண்ணுச்சாமி அழைப்பைக் கண்டு திகைத்துப் போனார். ''பணத்துக்கு எங்கே ஏற்பாடு செய்தாய்?'' என்று வியப்புடன் கேட்டார்.

''எதிர்பார்த்த காரியங்கள் நடப்பதில்லை; எதிர்பாராத காரியங்களெல்லாம் நடைபெறுகின்றன!''

கண்ணுச்சாமியின் முகம் சுண்டியது.

கண்ணபுரத்துக்குத் திரும்பி வந்து தமக்கு வேலை தேடித் தந்த மகாலிங்கத்தின் பங்களாவுக்குச் சென்றான். பங்களா பூட்டிக் கிடந்தது. ஒரு வருடம் ஓய்வு பெற்று அவர் குடும்பத்துடன் சென்னைக்குச் சென்று விட்டாராம். அவருடைய சென்னை முகவரி தெரியவில்லை. தலைமைக் குமாஸ்தா ரங்கராஜனுக்கும் மற்ற ஆபீஸ் நண்பர்களுக்கும் அழைப்புக் கொடுத்தான். ''பெண்டாட்டி வந்து விட்டால் இனிப் பின்னை

யாண்டான் சரிப்பட்டு விடுவான்!'' என்றார் ஒரு அநுபவஸ்தர். ''பிள்ளையும் பிறந்து விட்டால் நம் கட்சியில் சேர்ந்து விடுவான்!'' என்றார் மற்றொருவர். அந்த இருபது ரூபாய் நிகழ்ச்சியை அங்கு யாருமே மறக்கவில்லை.

தலைமை அதிகாரி நாகநாதனிடம் அழைப்பை நீட்டி ஒரு வாரம் விடுமுறை வேண்டுமென்று கேட்டான். நாகநாதன் அழைப்பை உரக்கப் படித்து விட்டு அவனை ஏறிட்டுப் பார்த்தார்.

''ஒரு வாரம் போதுமா? ஏன், பத்துப் பன்னிரண்டு நாட்கள் எடுத்துக் கொள்ளேன்!''

அவர் விளையாட்டாகப் பேசுகிறாரா, அல்லது வினையாகப் பேசுகிறாரா என்று அவனுக்கு விளங்கவில்லை. மேலும் கீழும் விழித்தான்.

''விருந்தெல்லாம் சாப்பிட்டுவிட்டு மெதுவாய்த் திரும்பி வாயேன்! உன் வேலையை ரங்கராஜன் பார்த்துக் கொள்வார்; பத்து நாளைக்கு எழுதிக் கொடுத்து விட்டுப் போ!''

தணிகாசலம் பத்து நாளைக்கு எழுதிக் கொடுத்தான். முதல் முறையாக அவர் தன்னிடம் அன்போடு நடந்து கொண்டதில் அவனுக்கு அளவற்ற ஆச்சரியம்.

புதுப்பட்டியிலிருந்து சித்தப்பா குடும்பத்தாரும் மற்றும் சில உறவினர்களும், விடுதி மாணவ நண்பர்களும் திருமணத்துக்கு வந்திருந்தார்கள். வாழ்த்துச் செய்திகள் வந்தன. 'மலர்க் கொத்'தின் ஆசிரியர், வாழ்க்கையில் அவன் பெறும் புதிய-இனிய அநுபவங்கள் அவன் கதைகளில் பிரதிபலிக்க வேண்டுமென்று வாழ்த்தி எழுதியிருந்தார்.

இரண்டு திருமணங்களும் ஒரே நாளில் நடந்தன. தங்கை லட்சுமி ராமசாமி என்ற இளைஞரைக் கைப்பிடித்தாள். இரும்பு இயந்திரசாலை ஒன்றில் வேலை பார்த்த தொழிலாளி அந்த இளைஞர். தணிகாசலம் கௌரியின் கையைப் பிடித்தான்.

பதினெட்டு முழப் பட்டுப் புடவையைச் சுற்றிக் கொண்டு, நாணிக் கோணிக் கொண்டு, குனிந்த தலை நிமிராமல் அவள் அருகில் உட்கார்ந்திருந்தது அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. கல்யாணச் சந்தடியில் ஆண்கள் அதிகாரம் செய்தார்கள். பெண்கள் குறுக்கும் நெடுக்கும் நடந்து தங்களது முக்கியத்துவத்தைக் காட்டிக் கொண்டார்கள்; குழந்தைகள் கும்மாளம் அடித்தார்கள். கல்யாண வீடுகளில் வழக்கம் போல் நடைபெறுகிற சண்டை சச்சரவுகளும், ஊட்டிக் கலகங்களும் குறைவின்றி நடந்தன. நாகசுர இசை, சந்தனம், பன்னீர், மலர்க் குவியல், ஊதுவத்தி மணம், அத்தனையும் சேர்ந்து கூட்டத்தினரின் குறைபாடுகளை இட்டு நிரப்பப் போட்டியிட்டன.



சந்தடியோடு சந்தடியாக ஓரிரு முறை தணிகாசலம் கௌரியை மெல்லத் திரும்பிப் பார்த்தான். அவள் தன் கழுத்துச் சுளுக்கும் அளவுக்குக்குனிந்து கொண்டிருந்தாள். புருவத்துக்கு மேலே அன்றொரு நாள் படிக்கட்டில்விழுந்த தழும்பு மாத்திரம் அவனுக்குத் தெரிந்தது. கெட்டி மேளம் கொட்டி, மஞ்சள் கயிற்றை அவன் அவள் கழுத்தில் முடியும்போது, தன் தந்தையாரை நினைத்துக் கொண்டான். தனக்குத் தக்க சமயத்தில் உதவி செய்த தேவகியை நினைத்துக் கொண்டான். அவனுடைய கண்களின் ஓரத்தில் நீர் கசிந்தது.

பெண்களின் கேலிப் பேச்சு, இளம் நண்பர்களின் பரிகாசம், பெரியவர்களின் உத்தரவுகள் இவற்றுடன் நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. தணிகாசலம் தன்னை அவள் ஒரு முறையாவது திரும்பிப் பார்க்க மாட்டாளா என்று ஏங்கினான். ஏக்கம் கோபமாக மாறியது. மாலை நிகழ்ச்சி ஒன்றின்போது யாருக்கும் தெரியாமல் கௌரியின் கரத்தில் அழுத்தமாகக் கிள்ளினான். அப்போதும் அவள் அவனைத் திரும்பிப் பார்க்கவில்லை. ''அழுத்தக்காரி! மண்டு! பச்சைக் குழந்தை!'' என்று தனக்குள் திட்டிக் கொண்டான். என்றாலும் கடைசல் பிடித்தாற் போல் குத்து விளக்கை ஒத்த வெண்கல நிறத்தில் அவள் தன்னுடன் ஒன்றி உட்கார்ந்திருந்த காட்சி அவனுக்குள் தென்றலாக வீசியது.

கல்யாணச் செலவு ஒன்றைத் தவிரத் தணிகாசலத்துக்கு மற்ற யாவும் பிடித்

இருந்தன. இந்த ஒரு நாள் கூத்துக்கு இவ்வளவு பணமா? இருப்பவர்கள் செலவு செய்தால் பாதகமில்லை; இல்லாதவர்களும் இந்த வீண் சம்பிரதாயத்தை விடமாட்டேன் என்கிறார்களே! பிறகு உழைத்துக் கடன் கட்டப் போகிறவர்கள் யார்?—கௌரி என்ற மலர்ச் செண்டு கடன் சுமையோடு தனக்குக் கிடைத்திருக்கிறது என்பதை அவன் எண்ணிப் பார்த்துக் கொண்டான். கடன் தொகையை விட அதிகப் பெருமானம் உள்ளவள் அவள் என்பதில் அவனுக்கு ஓர் ஆறுதல்.

ஒருவாரம் வீட்டுக்குவீடு விருந்துச்சாப்பாடு நடந்தது. விருந்துக்கு அழைத்தவர்களில் சிலர் பரம ஏழைகள். அவர்கள் வீட்டுக் குழந்தைகள் நல்ல சாப்பாட்டை அந்த விருந்தின் போதுதான் கண்டிருக்க முடியும். மற்ற வேளைகளில் அவர்களுக்கு மருந்துச் சாப்பாடுதான்.

இந்த ஏழு நாட்களுக்குள் மங்களத்துப் பாட்டி இன்னும் இரண்டு சுற்றுப் பருத்து விட்டாள். ஏற்கெனவே சிற்றானைக் குட்டியைப் போன்ற உடம்பு; இப்போது அது பூரித்து வெடித்து விடும் போல் பயமுறுத்தியது. அத்தனை பெரிய சுமையையும் அவள் அலட்சியப்படுத்தி விட்டு ஓடி ஓடிக் காரியங்கள் செய்தாள். லட்சுமி இப்போது அண்ணனைக் கவனிக்கவில்லை! தாயார் கல்யாணியம்மாள் இருபுறமும் திரும்பிப்பார்த்து மனமகிழ்ந்தாள். மகளுக்கும் மகனுக்கும் வாழ்வு தேடிக் கொடுத்து விட்ட பெருமை அவளுக்கு.

கௌரியின் நிழல் ஒவ்வொரு நாளும் அவனைப் பின் தொடர்ந்தது. திருமணத்துக்கு மறுநாளே அவள் திரும்பவும் பாவாடை தாவணி உடுத்திக் கொண்டாள். அந்த உடை அலங்காரமே தணிகாசலத்துக்குப் பிடித்திருந்தது. சிற்சில சமயங்களில் அவளை ஏறிட்டுப் பார்த்துத் திருட்டுச் சிரிப்பு சிரிப்பதோடு அவன் திருப்தி அடைந்தான். ஒன்பதாவது நாள் பக்கத்துக் கிராமத்துக்கு அவர்களை இரட்டை மாட்டு வண்டி கட்டி அழைத்துக் கொண்டு சென்றார்கள். சாலை நெடுகிலும் நீண்டு வளர்ந்த மரங்கள் நிழல் தந்தன. கௌரியும் அவனும் அப்போது பேசிக்கொள்ளவில்லையென்றாலும் அந்தப் பிரயாணம் அவனுடைய மனத்தில் அழுத்தமாகப் பதிந்து விட்டது.

அன்று மாலை கிராமத்தின் பெரிய வீட்டு மாடியில் தனித்திருந்தாள் கௌரி. கீழே பெண்கள் சமையல் போரில் ஈடுபட்டிருந்தார்கள். எதிர்பாராமல் அவளை மாடியில் சந்தித்த தணிகாசலம் மெல்ல அவள் அருகில் நெருங்கினான். கௌரியின் கைகால்கள் படபடத்தன; அவள் நெஞ்சு நடுங்கியது; வேர்க்க விறுவிறுக்க ஓட்ட மெடுத்தாள். அவளுடைய சடைப் பின்னல் அவன் கையில் அகப்பட்டுக் கொண்டது. பரிதாபமாக விழித்தாள்; கண்கள் அவனை விட்டு விடச் சொல்லிக் கெஞ்சின.

"நான் நாளைக்கு ஊருக்குப் போக வேண்டும், கௌரி!" — தணிகாசலத்தின் குரல் கரகரத்தது. சடைப் பின்னலை நழுவ விட்டான்.

ஓடத் துடித்த கௌரி இதைக் கேட்டவுடன் நின்று விட்டாள். கண்கள் வெட்கத்தை விட்டு நேரே அவன் முகத்தை விழுங்கின. உதடுகள் துடித்தனவே தவிரப் பேச்சு வரவில்லை.

"பேச மாட்டாயா, கௌரி?"

"வந்து......வந்து...... சீக்கிரம் என்னை அழைத்துக் கொள்ளுங்கள்."

அதிகமாய்ப் பேசி விட்டதுபோல் முகத்தைக் கரங்களால் மூடிக் கொண்டாள்.

அந்த இடத்தை விட்டுப் போகவும் அவளுக்கு மனமில்லை; நிற்கவும் துணிவில்லை. "அடிக்கடி அத்தைக்குக் கடிதம் போடுங்கள்; உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள்."

தணிகாசலம் செல்லமாய் அவள் கன்னத்தில் தட்டினான். அவள் அந்த இடத்தை விட்டுத் தயக்கத்தோடு கீழே இறங்கிப் போனாள். போகும்போது திரும்பித் திரும்பிப்பார்த்துக்கொண்டே தான் நடந்தாள். 'விவரம் தெரியாத சிறுமியில்லை, விவரம் தெரிந்த சிறுமி தான்' என்று மனம் பூரித்தான் புது மாப்பிள்ளை தணிகாசலம்.

விடுமுறை முடிந்து கண்ணபுரத்துக்கு வந்தவுடன் முதல் ஆசீர்வாதம் தேவகியிடம் கிடைத்தது. "மத்தியானம் ஆபீசில் சொல்லிக் கொண்டு இங்கே வந்து சாப்பிடு" என்றாள் அவள். தணிகாசலம் அடுத்தபடியாகத் தன்னிடம் அன்பு கொண்டிருந்த தலைமைக் குமாஸ்தா ரங்கராஜனைச் சென்று பார்த்தான். அவருடைய வரவேற்பில் அன்றைக்கு அவன் எதிர்பார்த்த உற்சாகமில்லை. சிரித்துக் கொண்டுதான் பேசினார்; ஊர் நலன்களை விசாரித்தார்; உபசரிப்பிலும் குறைவில்லை. ஆனால் அவனால் கண்டு கொள்ள முடியாத துயரம் ஒன்று அவருடைய செய்கை அனைத்திலும் வெளிப்பட்டது.

"நான் கொடுக்கும் கல்யாணப் பரிசை வாங்கிக் கொள்ளவேண்டும்; இல்லாவிட்டால் எனக்குக் கோபம் வந்துவிடும்."

இப்படிச் சொல்லி ஒரு தாம்பாளத்தில் வெற்றிலை பாக்கும் ஐம்பது ரூபாய் பணமும் கொண்டு வந்து கொடுத்தார். பணத்தை எடுப்பதற்கு அவன் கை கூசியது. "தணிகாசலம்! எடுத்துக்கொள்" என்று அவர் அதட்டினார். பிறகு அவனுக்கு விடை கொடுத்தனுப்பும் போது, "நீ நல்ல பையன்; ஆனால் முட்டாள்!" என்றார். "உன்னுடைய போக்குப்படி உலகம் திரும்பாது. நீதான் அதோடு ஒட்டி வாழ வேண்டும். சோதனைக் காலம் உனக்கு ஆரம்பமாகி இருக்கிறது. கவனமாய்ப்பிழைத்துக்கொள்."

அவர் ஏன் இப்படிக் கூறினார் என்பது அலுவலகத்துக்குள் அவன் நுழைந்தவுடன்தான் தெரிந்தது. ரங்கராஜன் அன்றைக்கு விடுமுறை கேட்டு எழுதி விட்டாராம். அங்கே வரவில்லை.

கலகலப்போடு பேசிக் கொண்டிருந்த குமாஸ்தா நண்பர்கள் தணிகாலத்தைக் கண்டவுடன் 'கப்சிப்'பென்று பேச்சை நிறுத்தி விட்டார்கள். யாரோ இரண்டு கிழவர்கள் துக்கம் விசாரிப்பது போல், "கல்யாணம் நடந்ததா?" என்று கேட்டு வைத்தார்கள். 'ஏன் நடந்தது?' என்று கேட்பதுபோல் தோன்றியது அவர்கள் குரல். மற்றவர்களுடைய முகத்தில் ஈயாடவில்லை. சிலர் பரிதாபமாக, சிலர் வெறுப்போடு, சிலர் பயத்தோடு தணிகாசலத்தைப் பார்த்து முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். 'கல்யாணம் செய்து கொள்வது அபாயகரமான காரியமா? தலைமைக் குமாஸ்தாவிலிருந்து எல்லோரும் ஒரே மாதிரி நடந்து கொள்ளுகிறார்களே!' என்று நினைத்தான்.

தன்னுடைய நாற்காலியில் உட்காரப் போன தணிகாசலத்திடம் எதிரிலிருந்த மனிதர் குறுக்கிட்டு, "இன்ஜினியர் உன்னை வந்து பார்க்கச் சொன்னார்; போய் விட்டு வா" என்றார்.

மராமத்து இலாகாவின் உயிர் நாடியான நாகநாதன் தணிகாசலத்தைத் திரும்பிப் பார்த்து விட்டு, அவனிடம் ஒன்றுமே பேசாமல் தபால்களைப் படிப்பது போல் பாசாங்கு செய்தார். நேரம் ஆயிற்று; அவன் நின்று கொண்டிருந்தான்; அவர் திரும்பவில்லை.

"சார்......!" என்றான் பையன்.

"வாங்கோ சார், கல்யாணம் பிரமாதமாக நடந்ததா?"

"நடந்தது."

"பெண் வீடு பெரிய இடம் போலிருக்கிறது. அங்கேயே இருந்துகொண்டு பெண்டாட்டி கையால் தண்டச்சோறு சாப்பிடலாமே; இங்கே எதற்குத் திரும்பி வந்தாய்?" என்றார்.



அதைக் கேட்டதும், தணிகாசலத்துக்கு ஒன்றும் புரியவில்லை.

படீரென்று மேசையைத் திறந்து அதற்குள்ளே இருந்த 'மலர்க்கொத்து'ப் பத்திரிகையை எடுத்து வெளியே போட்டார். "மரியாதையாய் உண்மையைச் சொல்லி விடு; நீ தானே இந்தக் கதையை எழுதினாய்?"

"ஆமாம்."

"என்னடா, ஆமாம்!" ஏக வசனத்தில் தொடங்கினார் நாகநாதன். "உலகத்தில் இல்லாத உண்மையை நீதான் கண்டு பிடித்து விட்டாயாக்கும்? மூனைத்து மூன்றிலை கிளம்பவில்லை. அதற்குள் திமிரைப் பார், திமிரை!"

தன்னை முட்டாள் என்றார் ஒரு மனிதர்; இவரோ திமிர் பிடித்தவன் என்கிறார். நடந்த நடப்பை வெளியே சொல்லி, தெரிந்த உண்மையை வெளி

யிடுகிறவர்களை அவன் முட்டாள்கள் என்றோ, திமிர் பிடித்தவர்கள் என்றோ நினைக்கவில்லை. தன்னை முட்டாள் என்று வேண்டுமானால் அவன் ஒப்புக்கொள்ளத் தயார். தனக்குத் திமிர் பிடிக்கவில்லை என்று எப்படி இவரிடம் சொல்வது? வாழ்க்கையில் வசதியற்றவர்களுக்குத் திமிர் பிடிப்பது குறைவாயிற்றே!

அவன் பேசாமல் நின்றான்.

"இதோ பார்! நீ நேற்றைக்கு வேலையில் சேர்ந்தவன். வேலை காயமாகாதவர்களை நான் காயப்படுத்தி வெளியில் தள்ள முடியும், தெரியுமா? உன் மேலுள்ள குற்றங்களைக் கேள்; ஒன்று உனக்கு வேலை செய்யத் தெரியவில்லை! நீ எழுதுகிற இங்கிலீஷைப் படித்தால் வெள்ளைக்காரன் தூக்குப் போட்டுக் கொள்வான். இரண்டு, நீ அடங்காப் பிடாரி; சட்டத்தை மதிக்காதவன். மூன்று, நீ ஆபீஸ் ரகசியத்தை வெளியில் சொல்லி விட்டாய்; கண்மாய்க் கரை 'எஸ்டிமேட்' உன் மூலமாய் வெளியில் போயிருக்கிறது. இந்த மூன்றாவது குற்றத்துக்காகவே உன்னைப் போலீசில் ஒப்படைக்கலாம்."

"இல்லை! நான் எதையும் சொல்லவில்லை!" என்றான் தணிகாசலம்.

"திருடன் என்றைக்காவது தான் திருடியதை ஒப்புக் கொள்வானா?"

தணிகாசலத்தின் மனம் பற்றி எரிந்தது. 'யார் திருடன்?' என்று அது தனக்குள் கேட்டுக் கேட்டு அலறியது.

"நான் ஒரு குற்றமும் செய்யவில்லை; என்னை மன்னித்து விடுங்கள். உங்களுக்குக் கோபம் வரும்படியாக இனி நடந்து கொள்ளவில்லை" என்று அழுது கொண்டே கூறினான் தணிகாசலம்.

"என்னைக் கெடுத்து விடாதீர்கள்! என்னை விட்டால் குடும்பத்தில் பிழைப்புக்கு வேறு ஆளில்லை; இப்போதான் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேன்."

நாகநாதன் இவ்வளவையும் கேட்டு விட்டு, "இதில் ஒரு கையெழுத்துப் போடு" என்றார். போட்டான். மற்றொரு காகிதத்தை அவனிடம் நீட்டினார்.

அதை வாங்கிப் படித்தான்.

அவன் தலை சுற்றியது. மூச்சு நின்று விடும் போலிருந்தது. தன்னுடைய எதிர்கால வாழ்க்கைக்குப் போட்டிருந்த சின்னஞ்சிறு அடிப்படை அந்தக் காகிதத்தில் 'படீர் படீர்' என்று வெடித்துச் சிதறுவதைக் கண்டான். அந்தக் கடிதத்தில் இருந்து கொண்டு, 'என்னைச் சீக்கிரம் உங்களுடன் அழைத்துக் கொள்ளுங்கள்' என்று கூறினாள் கௌரி. தாயார் கல்யாணி அம்மாள், 'இரண்டு மாதத்தில் கண்ணபுரத்தில் வாடகைக்கு ஒரு வீடு பிடித்துக் கொண்டு எழுது' என்று வற்புறுத்தினாள். இனி குடும்பம் நடத்துவது எங்கே? புது மனைவியோடு கொஞ்சிக் குலாவுவதுதான் எங்கே? கடன் கட்டுவது எங்கே?

அவசரப்பட்டுக் கல்யாணம் செய்து கொண்டதற்காகவும், பின் யோசனை இல்லாமல் 'இருபது ரூபாய்' என்ற பெயரில் கதை எழுதிடதற்காகவும் அவன் துக்கப்பட்டான். தேவகியின் வீட்டில் மத்தியானம் நடக்கப் போகும் விருந்தின் நினைவு அவனை வேதனைப் படுத்தியது. (தொடரும்)

## நெட்டால் தமிழ் வைதீக சபை

கடல் கடந்துள்ள வெளிநாட்டில், அதிலும் நிறவெறி தாண்டவமாடும் ஒரு நாட்டில் பல இன்னல்களுக்கிடையே தமிழர்கள் பொது நலப் பணிக்காகப் பெரிய கட்டடமொன்றை நிர்மாணித்திருக்கிறார்கள் என்றால், அது மிகவும் புகழ்ந்து பாராட்டத்தக்க ஒரு விஷயம் அல்லவா? தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த டர்பன் நகரில் உள்ள முக்கியமான இடத்தில் நெட்டால் தமிழ் வைதீக சபையினர் சில தினங்களுக்கு முன்தான் மூன்று மாடிகள் உள்ள ஒரு கட்டடத்தைக் கட்டி முடித்துள்ளனர். இந்த மண்டபக் கட்டடம் சமுதாய, மத, கலாச்சார நடவடிக்கைகளுக்கு உபயோகிக்கப்படும். முதல் மாடியில் உள்ள மண்டபத்தைக் கட்டும் செலவுக்காகத் தென்னாப்பிரிக்காவில் உள்ள இந்தியப் பெண்மணிகள் ஐயாயிரம் பவுன் கொடுத்தனர்.

இரண்டாவது மாடியில் உள்ள மண்டபம் 1860-ம் ஆண்டிலிருந்து இந்தியாவிலிருந்து சென்று பல துறைகளிலும் தொண்டு புரிந்து புகழ் பெற்ற பிரமுகர்களின் ஞாபகச்சின்னமாக விளங்கும். இந்தக் கட்டடம் கல்விச்சாலையாகவும் உபயோகிக்கப்பட்டு வருகிறது. சுமார் இரண்டு லட்சம் இந்தியர்கள் வசிக்கும் டர்பன் நகரில் நெட்டால் தமிழ் வைதீக சபையார் பொது நலத் தொண்டுக்காக ஏராளமான செலவில் ஒரு கட்டடம் நிர்மாணித்திருப்பது அவர்களுடைய நன்னோக்கத்தையும் தர்மசிந்தனையையும் உயர்ந்த பண்பையும் காட்டுகிறது.

இம் மாதம் நடைபெறவிருக்கும் தமிழ் வைதீக சபையினரின் கட்டடத் திறப்பு விழாவுக்கு ராஜாஜி அவர்கள் ஓர் ஆசிச் செய்தி அனுப்பியுள்ளார்.

பின்னியின் **காட்ஸ்வால்**



அற்புத காட்ஸ்வால் உடையை அணிந்தவுடன்,
குழந்தைகளே, எவ்வளவு
சந்தோஷமாயும், மிடுக்காகவும்
இருக்கிறீர்கள், பார்த்தீர்களா.






**காட்ஸ்வால்**
**விசேஷ மதிப்புடையது :**

அது உயர்ந்த ரகக் கம்பளியும் பருத்தியும் கலந்து அதி ஜாக்கிரதையுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது.

நீடித்து உழைப்பதுடன் என்றும் மென்மையாக இருக்கிறது.

அது எல்லா குழந்தைகளுக்கும் ஏற்றது. மிக்க மென்மையான சருமத்தைக்கூட உறுத்தாதது.

அது எப்போதும் பார்க்க நேர்த்தியாக இருக்கும். எந்த பருவகாலத்துக்கும் ஏற்றது.

காட்ஸ்வால் சுருங்காதென உத்தரவாதம். காட்ஸ்வால் துணியை வீட்டிலேயே சலவை செய்யலாம்.

காட்ஸ்வாலுக்கு ஈடு எதுவும் இல்லை! அதிகக் குளிரிலிருந்து பாதுகாக்க பின்னியின் அங்கோலாவை அணியுங்கள்.

படங்கள் அடங்கிய பின்னியின் காட்ஸ்வால் இலவச புத்தகத்திற்கு டிபார்ட்மெண்ட் Y, தபால் பை 2701, சென்னை-6 என்ற விலாசத்திற்கு எழுதவும்.



தி பங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் லிட்.

மானேஜிங் ஏஜெண்டுகள் : பின்னி & கம்பெனி (மதராஸ்) லிட்.

BY 102 (a)

**எல்லோருக்கும் தெரியும் –**






**ஆகையால்தான்**

**மற்றெந்தத் தேயிலையையும்**

**விட அதிகப்படியான ஜனங்கள்**

# ப்ரூக் பாண்ட் தேயிலையையே

**அருந்துகிறார்கள்!**

ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்

# என் குருநாதர்

பியாரிலால்

இந்த உலக வாழ்க்கையின் அர்த்தம் என்ன? எல்லாவற்றையும்விட முக்கியமான இந்தக் கேள்விக்கு விடை கண்டு பிடிக்க முற்படும் போதுதான் ஒவ்வொரு இளைஞருடைய வாழ்க்கையிலும் நெருக்கடியான ஒரு கட்டம் ஏற்படுகிறது. அப்போது மற்றவை யாவும் பின்னணிக்குச் சென்று விடுகின்றன: அந்தக் கேள்விக்குப் பூரணமான விடையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஒரே எண்ணம் அவர் மனத்தை ஆட்கொண்டு விடுகிறது.

இருபது வயதைக் கடந்த எங்களில் பலருடைய வாழ்க்கையிலும் அத்தகைய ஒரு நெருக்கடி ஏற்பட்டது. ரௌலட் சட்டத்தைக் கண்டித்து நாடெங்கும் கிளர்ச்சி மூண்ட போது, அதை அடக்க ராணுவச் சட்ட ஆட்சி தாண்டவமாடியது. அப்போதுதான் ஜாலியன் வாலாபாக் படுகொலை நிகழ்ந்தது. பொது மக்கள் சகிக்க முடியாத அவமதிப்புகளுக்கு ஆளாயினர். குறிப்பாக, மாணவர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளும் அவமானமும் அவர்களுடைய இருதயத்தில் ஆழமாகப் பதிந்து புண்படுத்தி விட்டன.

சமுதாயத்தின் ஆத்ம பலத்தை உருவாக்கும் சீரிய தலைவர்கள் என்று கருதப்படும் பேராசிரியர்கள் தங்களுடைய பெருமையைக் காற்றுவாக்கில் விட்டுவிட்டு, அற்ப அதிகாரத்துக்குப் பயந்து ராணுவச் சட்ட அதிகாரிகளுக்குத் தலை வணங்கலாயினர். அவர்கள் அந்த அதிகாரிகளின் கட்டளைகளுக்கிணங்க, தங்கள் மாணவர்களை, அவர்களுடைய குற்றத்தை விசாரிக்காமலேயே, தண்டிக்கத் தொடங்கி விட்டார்கள். இச் செய்கையால் மாணவர்கள் துயரத்தில் ஆழ்ந்தனர். நீர்க்குமிழி போன்ற அதிகாரத்தை, அணுவளவும் பின் வாங்காமல் எதிர்த்து நின்று நியாயம், நீதி, சத்தியம் இவற்றைப் பாதுகாக்க முடியாத ஆத்ம பலத்தினால் என்ன பயன்? அப்படியானால் ஆத்ம பலம் என்பது மனிதரின் வாழ்க்கையில் எவ்வித சக்தியுமற்ற வெறும் அழகு வார்த்தையா?

இத்தகைய கேள்விகள் என் மனத்தை அலட்டிக் குழப்பத் தொடங்கின. இவற்றுக்கு விடை தெரிந்து கொள்வதற்காக நான் காந்திஜியிடம் சென்றேன். நான் காந்திஜியின் அறைக்கு வெளியில் காத்துக் கொண்டிருந்தபோது உள்ளே ஏதோ விவாதம் நடந்து கொண்டிருந்தது. என் காதில் விழுந்தது.

அது, ராணுவச் சட்ட வழக்குகள் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்த காலம்: கொலைக் குற்றத்தில் சம்பந்தப்பட்ட ஒருவருடைய உறவினர்கள் காந்திஜியின் உதவியை நாடி வந்திருந்தார்கள்.

"உங்கள் ஆசாமி ஏதாவது குற்றம் செய்தது உண்டா என்பதை முதலில் எனக்குச் சொல்லுங்கள். அவர் ஏதாவது செய்திருந்தால், அதைச் சிறிதும் ஒளிவு மறைவின்றிக் கூறிவிட வேண்டும்" என்றார் காந்திஜி.

இதைக் கேட்டதும் எல்லோரும் திடுக்கிட்டுப் போய் விட்டார்கள். அந்தக் காலத்தில் அரசியல் கொலைக் குற்றத்தை ஒப்புக் கொண்ட ஒருவர் எவ்விதம் தப்ப முடியும்?

"கொடிய கொலைக் குற்றவாளிகூடத் தூக்குமேடைக்குச் செல்லுவதை நான் விரும்பவில்லை. அத்தகைய குற்றவாளிகள் பலரை நான் காப்பாற்றி யிருக்கிறேன். அவர்களில் சிலர் இன்று என் ஆசிரமத்தில் இருக்கிறார்கள். அவர்கள் முற்றிலும் சீர்திருந்தி நல்வழிக்கு வந்து விட்டார்கள்" என்று வந்தவர்களுக்கு நம்பிக்கை உண்டாகும் விதத்தில் உறுதி கூறினார் காந்திஜி.

ஒரு மன்னரைப் போன்ற அவரது நிலையும், சாந்தமும், உறுதியும், அவர் பேச்சில் இருந்த கம்பீரமும். அவரிடம் கண்ணுக்குப் புலப்படாத ஏதோ ஒரு சக்தி பூரணமாக இருக்கிறது என்பதைக் காட்டின; உலகத்தில் உள்ள வேறு எந்த சக்தியும் அதை அடக்க முடியாது என்பதையும் காட்டின.



காந்திஜி நூற்கும் காட்சி.

அப்போது அவர்களுக்குக் காந்திஜி கூறிய வார்த்தை என்ன என்பது எனக்கு ஞாபகத்தில் இல்லை. அந்த வார்த்தைகளைக் குறிப்பிடுவதும் அனாவசியமாகும். ஆனால் அவருக்குள்ள சக்தியை வார்த்தைகளின்றியே ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ள முடிந்தது.

இவ்விதமாக, காந்திஜியுடன் பேசாமலேயே என் கேள்விக்குப் பதில் கிடைத்துவிட்டது. ஆத்ம பலத்தின் சக்தி என்ன என்பது என் கண் முன் தோன்றி மறைந்ததைக் கண்டேன். நான் நாடி வந்த மனிதரையும் கண்டு பிடித்து விட்டேன். அதன் பின் அவரைத்தான் நான் குருவாக அடைந்தேன்.

அதிலிருந்து இரண்டு மாதங்கள் சென்றன. காந்திஜி விடுத்த கட்டளைக்கிணங்க, நான் கல்லூரிப் படிப்புக்கு ஒரு முழுக்குப் போட்டு விட்டு, அவரது ஆசிரமத்தில் சேர்ந்து கொண்டேன். நான் அங்கு சென்றபோது, காந்திஜி அவருக்கு இயல்பான சூறாவளி வேகத்தில் பிரயாணம் சென்றிருந்தார். அவர் திரும்பி வந்ததும் அவரை நான் பார்த்தேன்.

"உனக்கு எழுதத் தெரியுமா?" என்று கேட்டார்.

"நான் இதுவரை எழுதியதே இல்லை, அதாவது பத்திரிகைகளுக்கு எழுதியதில்லை" என்றேன்.

"அதனால் பரவாயில்லை. 'ஒத்துழையாமையின் விளக்கமும் அனுஷ்டானமும்' என்பது பற்றி ஒரு கட்டுரை எழுதிக் கொடுங்கள். சாப்பாட்டு நேரத்துக்கு முன் அது என் கையில் இருக்க வேண்டும்."

காந்திஜி எனக்குக் கட்டளை யிட்டபடியே நான் எழுதி முடித்தேன். மறுநாள் அவர் மீண்டும் பிரயாணத்துக்குக் கிளம்பி விட்டார்.



காந்திஜியும் மகாதேவ தேசாயும்.

சில நாட்களுக்குப் பின் நான் அந்தச் சம்பவத்தை அடியோடு மறந்தும் விட்டேன்.

அப்படியிருக்க, திடீரென்று ஒரு நாள் காந்திஜியிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. என்னுடைய கட்டுரை அவருக்கு மிகவும் பிடித்திருந்ததாகவும், என் எழுத்தையும் அறிவையும் அவர் உபயோகித்துக் கொள்ள விரும்புவதாகவும் அதில் காந்திஜி குறிப்பிட்டிருந்தார். அதன் பிறகு, தமது பிரயாணத்தின்போது டில்லியில் தம்முடன் வந்து சேர்ந்து கொள்ளும்படி அவரிடமிருந்து ஒரு தந்தியும் வந்தது.

டில்லியில் அவரை நான் சந்தித்தபோது, என்னுடைய கட்டுரையை "யங் இந்தியா"வில் பிரசுரிப்பதற்காக அனுப்பிக் கொண்டிருப்பதாக அவர் கூறினார். மேலும் சில நாட்கள் சென்ற பின் காந்திஜி என்னைப் பண்டித மோதிலால் நேருவுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

"யங் இந்தியாவில் அந்தக் கட்டுரையை எழுதிய இளைஞர் இவர்தான்" என்று காந்திஜி கூறினார். அந்தக் கட்டுரை மிகவும் நன்றாக எழுதப்பட்டிருக்கிறதென்று பண்டித மோதிலால் நேருவும், என்னைப் பாராட்டினார். இதையெல்லாம் கேட்டபோது எனக்குப் பெருமை தாங்க முடியவில்லை.

எனினும், முதலில் வேலைக்குச் சேர்ந்த போது, நான் காந்திஜியிடம் பெற்ற அனுபவம் எனக்கு நிதானப் புத்தியையும், அதே சமயம் உறுதியையும் மன பலத்தையும் கொடுத்தது.

அன்று மாலை ரோடாக்கில் நடக்கும் கூட்டத்துக்குக் காந்திஜி சென்றார். ஆனால், நான் அவருடன் செல்லாமல் பின்தங்கி விட்டேன். இரவு திரும்பிவந்ததும், "நம் கோஷ்டியுடன் நீங்கள் ஏன் வரவில்லை?" என்று கேட்டார்.

"வரும்படி என்னை யாரும் கேட்கவில்லை; நானாக வருவதற்குக் கூச்சமாக இருந்தது" என்று பதில் அளித்தேன்.

"ஏதோ தவறு நேர்ந்து விட்டது. இருந்தாலும் ஒருவர் தம்முடைய கடமையைச் செய்ய வேண்டிய விஷயத்தில் சம்பிரதாய முறைகளைக் கவனிப்பதோ, சங்கோசப் படுவதோ உள்ளூற இருக்கும் கர்வத்தையே காட்டுவதாகும். பிறர் செய்யும் தவறுகளின் விளைவுகளிலிருந்து அவர்களைக் காக்கவே ஒவ்வொருவரும் முயற்சிசெய்ய வேண்டும்" என்று என்னிடம் கூறினார்.

ஒரு சமயம் எங்களுடன் ஒரு பிரபல முஸ்லிம் காங்கிரஸ் தலைவர் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவர் வேறொரு வண்டியில் இருந்தார். நடுநிசியிருக்கும். ரயில்வண்டி ஒரு ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டதும் காந்திஜி தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டார்.

"இப்போது போன ஸ்டேஷன் எது?" என்று கேட்டார் காந்திஜி.

"குஜராத்" என்றேன்.

"அடுத்த ஸ்டேஷன் குஜ்ரான்வாலா. அடுத்த வண்டியிலிருக்கும் சே....... அங்கு தான் இறங்க வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும்."

"அவரை நீங்கள் எழுப்பினீர்களா? அடுத்த ஸ்டேஷனில் அவர் இறங்குவதற்குத் தயாராக இருக்க வேண்டுமே."

"நான் அவரை எழுப்பவில்லை."

"அஹிம்சையை அனுஷ்டிக்க விரும்புவோர் கண்கொட்டாமல் விழித்திருக்க வேண்டும். நான் அழைத்ததற்கு இசைந்து சே.......... நம்முடன் வந்தார். நீங்கள் முன்ஜாக்கிரதையாக இருந்து அவரை எழுப்பி யிருந்தால், பரஸ்பரம் அன்புப் பிணைப்பு மேலும் பலப்பட்டிருக்கும் அல்லவா?" என்று காந்திஜி உணர்ச்சி வசப்பட்டுக் கூறினார்.

அதிர்ஷ்டவசமாகக் கடைசியில் எல்லாம் சரியாக முடிந்தது. எனினும் அந்தச் சம்பவம் என் வாழ்க்கையில் மறக்க முடியாத ஒரு படிப்பினையாக அமைந்தது.

காந்திஜி சம்பந்தப்பட்ட வரையில் "அந்தரங்கக் காரியதரிசி" (Private Secretary) என்பது பொருந்தாத அர்த்த மற்ற வார்த்தை என்பதைச் சில நாட்

யில் நான் உணர்ந்து கொண்டேன். Secret (ரகசியம்) என்ற சொல்லிலிருந்தே Secretary (காரியதரிசி) என்ற சொல் உண்டாயிற்று. ஆனால் காந்திஜியிடம் அந்தரங்கமோ, ரகசியமோ என்ன இருக்க முடியும்?

மேல்நாடுகளில் செல்வாக்கும் சக்தியும் வாய்ந்த அரசியல் பிரமுகர்களுக்கு அந்தரங்கக் காரியதரிசியாக இருப்பது உயர்ந்த பதவிக்கு முதற்படியாகும். யாருக்கு அந்தரங்கக் காரியதரிசியாக இருக்கிறாரோ, அவரது பதவி கூடச் சிற்சில சமயங்களில் அந்தரங்கக் காரியதரிசிக்குக் கிடைத்து விடுவதும் உண்டு.

ஆனால், காந்திஜி விஷயத்திலோ நிலைமை அதற்கு நேர்மாறாக இருந்தது. காந்திஜிக்கு அந்தரங்கக் காரியதரிசியாக இருப்பவர் பெயருக்கோ, புகழுக்கோ ஆசைப்படக் கூடாது. பொதுவாக எல்லோரும் ஏங்கி நிற்கும் ஆடம்பரமான பட்டம் பதவிகளைத் துச்சமாக நினைக்க வேண்டும். தலைவர் எந்த லட்சியத்துக்காகத் தொண்டு புரிகிறாரோ, அந்த லட்சியத்துக்குத் தன்னை முற்றிலும் அர்ப்பணம் செய்து கொண்டு விடவேண்டும்.

காந்திஜி, தம்மைக் குடியானவர் என்றும், நெசவாளி என்றும், நூற்பவர் என்றும், தோட்டி என்றும் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு விதமாகச் சொல்லிக் கொண்டார். ஆனால், அவரது காரியதரிசிகளோவெனில் அந்த எல்லாத் தொழில்களும் தெரிந்தவர்களாக இருக்க வேண்டியிருந்தது.

காந்திஜிக்குப் பெரிய காரியம், சிறிய காரியம் என்ற ஏற்றத்தாழ்வு இல்லை. ஒவ்வொரு கடமையும் முக்கியமானதுதான். ஒவ்வொன்றையும் உற்சாகத்துடனும் அக்கறையுடனும் கவனமாகவும் செய்து தீரவேண்டும்.

வேலை வாங்குவதில் காந்திஜி சிறிதும் தயவு தாட்சண்யம் காட்ட மாட்டார். ஒவ்வொருவரும் எந்தக் கணத்திலும் எத்தகைய அவசரமான வேலைக்கும் தயாராக இருக்க வேண்டும். கஷ்டமான காரியமென்றோ சௌகரியக் குறைவாக இருக்கிறதென்றோ கூறி அவரிடம் கடமையைச் செய்யாமல் தட்டிக் கழிக்க முடியாது. "கடமையைச் செய்யத் தவறாதே" என்பதுதான் காந்திஜியின் கட்டளை. அவரைச் சேர்ந்த சகலரும் அந்தக் கட்டளையை நிறைவேற்றித்தான் தீரவேண்டும்.

வட்டமேஜை மகாநாடு நடந்த போது நாங்கள் லண்டனில் தங்கியிருந்தோம். அப்போது இந்தியாவில் நிறைவேறிய வங்காள அவசரச் சட்டத்தின் நகல் ஒன்று எங்களுக்குத் தேவையாக இருந்தது. அது சம்பந்தமாக இந்தியா மந்திரி காரியாலயத்தைக் கேட்ட போது, அவர்களிடம் ஒரே ஒரு பிரதிதான் இருக்கிறதென்றும், அதைக் கொடுப்பதற்கில்லையென்றும் கூறிவிட்டார்கள். லண்டன் மகாநாடு நடந்து கொண்டிருக்கையில் அந்த அவசரச் சட்டத்தின் முழு விவரமும் காந்திஜியின் கைக்குக் கிடைப்பதை அவர்கள் விரும்பவில்லை. அதற்காகவே அவ்விதம் சாக்குப் போக்குச் சொல்லுகிறார்கள் என்பதை நாங்கள் தெரிந்து கொண்டோம்.

உடனே நான் இந்தியா மந்திரி காரியாலயத்தில் உள்ள எங்கள் நண்பர்களில் ஒருவருக்கு டெலிபோன் செய்தேன். "ஒரே ஒரு பிரதிதான் இருக்கிறதென்றால், நாங்கள் அன்று வந்து நகல் எடுத்துக் கொள்கிறோம்" என்று சொன்னேன். பிறகு அன்று சாயங்காலத்துக்கு முந்தியே எங்களுக்கு அவசரச் சட்டத்தின் பிரதி கிடைத்து விட்டது!



திலகம் இடுகையில் பாபு பரவசம் அடைகிறார்

* * *

நூற்றல், நெசவு சம்பந்தமான முறைகளில், நான் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த போது, ஒரு நாள் மாலை ஆசிரமத்தின் நடைபாதையில் காந்திஜியைச் சந்தித்தேன். அது, ஒத்துழையாமையும் சட்ட மறுப்பும் வெகு மும்முரமாக நடந்து கொண்டிருந்த காலம். பண்டித மோதிலால் நேருவினால் ஆரம்பிக்கப் பட்ட "இண்டிபெண்டெண்ட்" பத்திரிகைக்கு உதவியாகக் காந்திஜி ஏற்கெனவே மகாதேவ தேசாயை அலகாபாத்துக்கு அனுப்பியிருந்தார். ஜார்ஜ் ஜோசப் கைதியான செய்தி அப்போதுதான் எங்களுக்குக் கிடைத்தது. "ஜோசப் ஸ்தானத்தில் இண்டிபெண்டெண்ட் பத்திரிகை ஆசிரியர் பதவியை மகாதேவ தேசாய் ஏற்றுக் கொள்வார். அவரும் எந்த நிமிஷத்திலும் கைது செய்யப் படலாம். அவர் கைதியானால் நீங்கள் அங்கு சென்று அப்பதவியை ஏற்றுக் கொள்ள வேண்டும். நீங்கள் தயாராக இருக்கிறீர்களா?" என்று கேட்டார் காந்திஜி.

"நான் எப்போது புறப்பட வேண்டும்?"

"நாளைக்கு."

"ஓ, சரி" என்று கூறினேன்.

நான் அலகாபாத் சென்றதும், பத்திரிகைச் சட்டப்படி "இண்டிபெண்டெண்ட்"



காரியதரிசி பியாரிலால்

பத்திரிகையிடமிருந்து சர்க்கார், ஜாமீன் தொகை கேட்டிருக்கிறார்கள் என்பது தெரிந்தது. எனவே, அப் பத்திரிகையை நிறுத்தி விடுவதைத் தவிர வேறு வழியில்லை.

மேற்கொண்டு என்ன செய்வது என்பதற்குக் காந்திஜியின் உத்தரவை நாடினேன். காந்திஜியிடமிருந்து உடனே தந்தி மூலம் பதில் வந்தது.

"பத்திரிகையை நிறுத்தி விடாதீர்கள். சைக்ளோஸ்டைல் பிரதிகள் எடுத்துப் பத்திரிகையை நடத்துங்கள். இல்லாவிட்டால் கையால் எழுதியாவது நடத்துங்கள்" என்று காந்திஜி கட்டளையிட்டிருந்தார். அக்கட்டளையின்படியே நடந்தோம்.

* * *

நான் முதன் முதலாகக் காந்திஜியிடம் வேலைக்குச் சென்றபோது, "பிறர் செய்யும் தவறுகளிலிருந்து அவர்களைக் காக்கவே முயற்சிக்க வேண்டும்" என்று கூறினாரல்லவா? அதுபோலவே, கடைசியாக நான் செய்ய வேண்டிய கடமையையும் காந்திஜி என் மனத்தில் பதிய வைத்திருந்தார்.

காந்தி மகான் மறைந்தபின், அவரது உடலைக் கெடாமல் பாதுகாத்துச் சிறிது காலம் வரையில் எல்லோரும் தரிசனம் செய்வதற்காக வைத்திருக்க வேண்டும் என்று யோசனை கூறப்பட்டது. இந்த யோசனையை யாரும் எதிர்க்கவில்லை.

ஆனால், எனக்குக் காந்திஜி இட்டிருந்த கட்டளை முற்றிலும் வேறாகும். தமது ஆவி எந்த இடத்தில் பிரிகிறதோ, அந்த இடத்திலேயே தாமதமின்றித் தம்மைத் தகனம் செய்துவிட வேண்டும் என்று காந்திஜி கட்டளையிட்டிருந்தார்.

"பாபுவின் உடலை வைத்திருக்கக் கூடாது. அவ்விதம் வைப்பது அவரது விருப்பத்துக்கு முற்றிலும் விரோதமாகும்" என்று அருகிலிருந்த ஒரு நண்பரின் காதில் கூறினேன்.

"அப்படியானால், அதைப் பகிரங்கமாகக் கூறி விடுங்களேன்" என்றார் அவர்.

நான் தயங்கினேன். நமது பெரிய தலைவர்கள் யாவரும் அங்கிருக்கும்போது நான் ஒருவன் மாத்திரம் அதை எதிர்ப்பதா? அவ்விதம் எதிர்க்க நான் யார்? இருந்தாலும், ஒருவருடைய கடமையைச் செய்வதில் தயக்கமோ கூச்சமோ கூடாதென்று காந்திஜி எனக்குக் கூறியது ஞாபகத்துக்கு வந்தது. நான் தைரியத்தை எல்லாம் வரவழைத்துக்கொண்டேன்.

லார்டு மவுண்ட்பாட்டனைப் பார்த்து, "இவ்விதம் காந்திஜியின் உடலை வைத்திருக்க உத்தேசிப்பது அவருடைய விருப்பத்துக்கும் எனக்கு இட்டுள்ள கண்டிப்பான கட்டளைக்கும் விரோதமாகும்" என்றேன்.

"சாதாரணமாக, அவர் வயது முதிர்ந்து இறந்திருந்தால், அது வேறு விஷயமாகும். ஆனால், அசாதாரணமான இந்த நிலைமையில்............" என்று மவுண்ட்பாட்டன் சமாதானம் சொன்னார்.

"'இவ் விஷயத்தில் நீங்கள் உங்கள் கடமையைச் செய்யத் தவறினால், நான் இறந்த பிறகு கூட உங்களைக் கடிந்து கொள்வேன்' என்று காந்திஜி என்னிடம் கூறியிருக்கிறார்" என்றேன்.

"அப்படியானால் சரி. அவரது விருப்பத்துக்கு நாம் மரியாதை செலுத்த வேண்டும்" என்றார் மவுண்ட்பாட்டன் இறுதியாக.

உடலைக் கெடாமல் வைத்திருப்பதென்ற யோசனை கைவிடப்பட்டது.

* * *

நீண்ட காலம் அவருடன் சேர்ந்திருக்கவும், அவருக்குத் தொண்டு செய்யவும் எனக்குப் பாக்கியம் கிடைத்தது. அதை யெல்லாம் நினைக்கும் போது எனக்கு உணர்ச்சி மேலிடுகிறது. மற்றெதையும் காட்டிலும் காந்திஜியின் இணையற்ற கருணையும், எல்லையற்ற இரக்கமும், அன்பும், அவரது களங்கமற்ற அடக்கமும், கடவுளின் சக்தியைத் தன்மையைக் காண்பதற்காக மாத்திரமே வாழ வேண்டும் என்ற பேரார்வமும் குன்றின் மேலிட்ட தீபம் போல் சுடர் விட்டு ஒளி வீசுகின்றன.

காந்திஜி மானிட வர்க்கத்துக்காக வாழ்ந்தார். மானிட வர்க்கம் காந்தி மகானிடத்தில் வாழ்ந்தது.

வாயில்லாத கோடிக்கணக்கான மக்களின் இதயத்தில் உள்ள கடவுளைத் தவிர வேறு எந்தக் கடவுளையும் ஒப்புக் கொள்ள முடியாது என்று அவர் கூறுவது உண்டு. கோடிக்கணக்கான அந்த மக்களுக்குத் தொண்டு செய்வதுதான் சத்தியம்; அந்த சத்தியம் தான் கடவுள். அந்தக் கடவுளைத்தான் காந்திஜி வணங்கி வந்தார்.

"நான் போன பிறகு, எந்தத் தனி மனிதரும் என் இடத்தை முற்றிலும் பூர்த்தி செய்ய முடியாது. ஆனால் நான் உங்களில் பலருடைய இதயத்திலும் இருப்பேன். உங்களில் ஒவ்வொருவரும் தம்மைக் காட்டிலும் லட்சியமே பெரிதென்று எண்ணி நடப்பார்களாயின், எனது மறைவால் ஏற்பட்ட காலி ஸ்தானம் பெரிதும் பூர்த்தியாகிவிடும்" என்று காந்திஜி எங்களிடம் கூறுவது வழக்கம்.

இந்தக் கட்டளையை, காந்திஜியைக் குருநாதராகக் கொண்டு தொண்டு செய்யும் பாக்கியம் பெற்ற எங்களில் ஒவ்வொருவரும் இன்று ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

[Courtesy : Illustrated Weekly of India.]



# கூடாத ஆசை

ஜயலக்ஷ்மி

"என்ன சாமியப்பா! சாவதானமாகக் குந்திக்கிட்டிருக்கியே. விஷயம் தெரியாதா உனக்கு?"

"என்ன மாரியண்ணே! என்ன விஷயம்?"

"பூவங்குடி மிராசுதார் இருக்காரில்லே..."

"சின்னப் பண்ணையாரா? இல்லே, பெரிய பண்ணையாரா?"

"பெரிய பண்ணையாருதான்!"

"நல்ல மனிசருச்சே! அவருக்கென்ன?"

"அவருக்கு ஒண்ணுமில்லே. அவருடைய கையிலே போட்டுக்கிட்டிருந்த வைர மோதிரம் குளிக்கும்போது கை நழுவிக் குளத்திலே விழுந்துடிச்சாம்..."

"அப்படிச் சொல்லுன்னுனும்! ஊம்!" உற்சாகம் கரைபுரண்டோடியது சாமியப்பனுக்கு.

"இன்னு மூழ்கிறவனுங்கெல்லாம் வந்து குவிஞ்சுட்டாங்களாம் பூவங்குடியிலே! மோதிரத்தை எடுத்துக் கொடுக்கிறவனுக்கு ஐம்பது ரூபாய் இனாமாம். வேட்டியாம்..." என்று கூறினான் மாரி.

"நீ போண்ணே, இதோ வெம்பிட்டேன்!" என்று குதித்தெழுந்தான் சாமியப்பன்;

மாரி சென்று விட்டான்.

"வள்ளி! வள்ளி! அந்த அரிப்புக் கூடையை எடுத்திட்டு வா!" குதூகலம் பொங்கக் கூறினான் சாமியப்பன்.

"இரண்டு நாட்களாகவே உனக்கு உடம்பு நல்லாயில்லே. இன்னைக்குப் போய்த் தண்ணியிலே ஊறிக்கிட்டு கிடந்தால் உடம்புக்கு ஆவுமா?" என்று கேட்டுக் கொண்டே குடிலைவிட்டும் வெளியே வந்தாள் வள்ளி.

"எல்லாம் ஆவும்; நீ கொண்டா கூடையை! ஒரு நாளைக்கெல்லாம் இறுங்க மூழ்கினு ஒரு ரூபாய்க்காக கிடைக்க மாட்டேங்குது. நாலணாக் காசு கொடுக்க ஒவ்வொருத்தரும் மூக்காலே அழுவாங்க. உடம்பைப் பார்த்தா முடியுமா? கனா கண்டாக ஐம்பது ரூபாயில்லே......" என்றான் சாமியப்பன்.

"உன்னைப் போல எத்தனை பேருங்க வந்திருக்காங்களோ அங்கே..." என்றாள் வள்ளி.

"எத்தனை பேருங்கதான் வரட்டுமே தம்பனை மிஞ்சிக்க யாராலேயும் முடியாது புள்ளே, யாராலேயும் முடியாது!" என்று மார் தட்டினான் அவன்.

"..............?"

"ஆண்டவன் புண்ணியத்திலே மோதிரம் என்கையிலே அகப்படணும். பண்ணையாரு கிட்டே ரூபாயை வாங்கிகினு நேரே பஜாருக்குப் போய்......"

"பஜாருக்கா?"

"ஆமாம், வள்ளி! உனக்கு வெள்ளைத் தோடு வாங்கியாறப் போறேன்!" என்றான் முண்டாசை இழுத்துக் கட்டிக் கொண்டே சாமியப்பன்.

"என்னமோ......... உன் இஷ்டம்!" என்று கூறி, நீண்ட பெருமூச்சு விட்டாள் வள்ளி.

"அப்படிச் சொல்லாதே, வள்ளி! இன்னைக்கு எனக்குப் பெரிய அதிர்ஷ்டமே வரப்போவதாக்கும்! ஆஹா! இப்படியே பண்ணையாரு வீட்டு நகைங்க ஒண்ணு ஒண்ணு அந்தக் குளத்திலே விழவேணும்டா ஆண்டவனே!" என்று கூறியபடி புறப்பட்டான் சாமியப்பன்.

"ஆசையைப் பாரு ஆசையை" என்றாள் வள்ளி.

அவன் சிட்டியடித்துக்கொண்டே சென்றான்: அவன் போன திசையையே வள்ளி கவலையுடன் பார்த்துக் கொண்டு நின்றாள்.

★

நல்லபடியாகக் கணவன் திரும்பி வர வேண்டுமே என்கிற கவலை வள்ளியின் இதயத்தை அரித்துப் பிடுங்கியது. அப்படியே வாசற்படியருகில் உட்கார்ந்து விட்டாள்.

"எல்லாம் உன்னால் வந்த வினைதான்! நீதானே வெள்ளைத்தோடு வேண்டுமென்று ஆசைப்பட்டாய்?" என்று உள் மனம் அவளை இடித்துக் காட்டியது.

'அதனாலென்ன? அவர் தினமும் போகவில்லையா இறா மூழ்க?' என்றாள் இவள்.

"இறா மூழ்கப் போவான்! இன்று குளத்தில் மூழ்கித் தேட அல்லவா போயிருக்கிறான்? அதுவும் அந்தக் குளம் பெரிய குளம். ஆழமான குளம். முதலைங்க கூட அதிலே இருக்கிறதாகச் சொல்றாங்களே?" என்று பீதியடைந்தது உள்ளம்.

"அடப்பாவமே! நான் எதற்கு வெள்ளைத் தோடு வேணும்னு கேட்டுத் தொலைச்சேன்" என்று தன்னைத்தானே நொந்து கொண்டாள் வள்ளி.

'நானா கேட்டேன்!' அடுத்த கணமே அவள் உள்ளம் கேட்ட கேள்வி இது!

அன்று ஒரு நாள்!

இரவு நேரம். வானத்தில் முழுநிலா மிதந்து சென்று கொண்டிருந்தது. அதன் வெள்ளொளியால் வையகமே வெள்ளி முலாம் பூசியது போல் பளபளத்துக் கொண்டிருந்தது. தவழ்ந்து வந்து கொண்டிருந்த தென்றல் சுகந்தத்தைப் பரப்பிக் கொண்டிருந்தது, எல்லா இடத்திலும்.

அரை வயிற்றுக்குத்தான் இருவரும் கஞ்சி குடித்திருந்தார்கள். இருந்தாலும் அவர்களுக்கு ஓர் திருப்தி. வள்ளியின் வாயில் வெற்றிலை குழம்பிக் கொண்டிருந்தது. அவனும் போட்டிருந்தான்.

அவளை உற்றுப் பார்த்தான் அவன். சூழ்நிலை அவனுக்குப் போதையை ஊட்டியது. "வள்ளி!" என்றான்.

"ம்" என்று முனகினாள் அவள்.

"நீ இப்போ எவ்வளவு அழகா இருக்கே, தெரியுமா?"

"ஹ்க்கும்......"

"பொய் சொல்லல்லே வள்ளி, நெசமாகத்தான் சொல்றேன். ஏற்கனவே நீ அழகான பொண்ணு. இப்போ முழுவாமே வேறே இருக்கிலே! அதனாலே ரொம்ப ரொம்ப அழகா இருக்கே? நீ வேணுமின்னா கண்ணாடியிலே பார்த்துக்கோ! நாளைக்கு ஒரு அணாவுக்குக் கண்ணாடி வாங்கி வரட்டுமா?" அவன் ஆசையாக, சகஜமாகத்தான் கேட்டான்.

"அட, நீ சும்மா இரு!" என்று சிணுங்கினாள் வள்ளி வெளிப்படையாக. உள்ளம் மட்டும் உள்ளூறச் சிலுசிலுக்காமலில்லை. அவளும் ஒரு பெண்தானே?

"வள்ளி!"

"......" மௌனமாக இருந்தாள் அவள்;

"ஏ! வள்ளி!"

"ஏனும்?"

"முழுவாமே இருக்கறப்போ பொம்பிளைங்களுக்கு எதுமேலேயாச்சும் ஆசை உண்டாகும்னு சொல்லுறாங்களே அது நெசந்தானா?"

"பேச்சைப்பாரு, பேச்சை. கொஞ்சம் கூட வெட்கமா இல்லே......"

"வெட்கம் என்ன புள்ளே இதிலே. சும்மா சொல்லு!"

"எனக்குத் தெரியாது. போ!"

"சொல்லுங்கறேன்......"

"ஆமா! அப்படித்தான் சொல்லுவாங்க."

"அப்படியானா உனக்கு எதுமேலே ஆசை?"

"எனக்கு ஒண்ணு மேலேயும் ஆசையில்லே!"

"பொய்!"

"பொய்யின்னா போ!"

"சொல்லுன்னு சொல்லுறியா? உலகத்துப் பொம்பிளைங்களுக்கெல்லாம் இருக்கிற ஆசை உனக்கு மட்டும் இல்லாமே போகுமா......?"

"ராணியம்மாளுங்களுக்கு இருக்கும், பெரிய பெரிய பணக்காரங்களுக்கு இருக்கும்.



எனக்கு இருக்காது!" என்றாள் வள்ளி சிறிது கோபத்துடன்.

"உனக்கும் இருக்கத்தான் செய்யும். என்னாலே ஒண்ணும் செய்து தர முடியாதுன்னு நீ சொல்ல மாட்டேங்கிறே! அப்படித்தானே? இரு புள்ளே, இரு!" என்று கோபத்துடன் எழுந்தான் சாமியப்பன்.

"உட்காரு, சொல்லுறேன்!" என்று அவன் கையைப் பிடித்து அமர்த்தினாள் வள்ளி.

"அப்பச் சொல்லு!"

"எனக்குக் காதுக்கு ஒரு வெள்ளைத் தோடு வேணும்னு ஆசை!" என்று கூறினாள் வள்ளி நாணம் பொங்க.

"பூ! இவ்வளவுதானே? எவ்வளவு ரூபாய் இருக்கும்?" என்று கேட்டான் அவன் வெகு அலட்சியமாக.

கோடி வீட்டு ராஜாயி நேத்து வாங்கியிருக்கா. ஐம்பது ரூபாயாம்" என்று கூறினாள் வள்ளி.

"ஐம்பது ரூபாய்! வள்ளி! இன்னைக்குச் சொல்லுறேன்! உனக்குக் குழந்தை பிறக்கிறதுக்கு முன்னாலே நான் வெள்ளைத்தோடு வாங்கிப் போடாவிட்டால் என் பெயரு சாமியப்பனில்லே!" என்று மார் தட்டிக் கொண்டான் அவன்.



பாட்னு ஆங்கிலப் பத்திரிகை 'சர்ச்லைட்'டின் ஆசிரியர் ஸ்ரீ எம். எஸ். மந்த்ரேஸ்வர சர்மா அவர்களின் மனைவியார் திருமதி லக்ஷ்மி அம்மாள் சென்ற அக்டோபர் மாதம் 9-ந்தேதி சிவபதம் சேர்ந்தார். அவரது அந்திமச் சடங்குகள் காசியில் நடந்தன.

அதற்குப் பிறகு அவர்களுக்கு அன்றிரவு சொர்க்கமாகத் தானிருந்தது.

இதுதான் நடந்தது. அவளாக அவனிடம் வேண்டுமென்று கேட்கவில்லை. அவள் கேட்கும்படி அவன் நிர்ப்பந்தித்தான். அவள் கேட்டாள். அது இவ்வளவு தூரம் கொண்டு போய் விடும் என்று அவள் கண்டாளா?

சுறுசுறுப்பாக எழுந்திருந்தாள் வள்ளி. களைத்து வரும் கணவனுக்குப் பிடித்தமான உணவு தயாரிக்கப் பரபரவென்று வேலை செய்தாள். கலவன் கீரைக் குழம்பும், காணான் பொரியலும் நொடியில் தயாராகி விட்டன. பசு மஞ்சள் பூசிப் பட்டாகக் குளித்து விட்டு, பெங்களூர் அரக்குக் கலர் குங்குமம் நெற்றியில் பளிச்சென்று விளங்கக் குடிசையின் வாசலில் வந்து நின்றாள். விழிகள் அவன் வரும் வழிமேல் பதிந்து நின்றன. நின்றாள் நின்றாள் அப்படி நின்றாள். கால்கள் சோர்ந்து விழுந்தன. உட்கார்ந்து விட்டாள் அப்படியே.

அவள் அப்படி எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தாளோ, தெரியாது.

உச்சிப் பொழுதுக்கும் மேலாகி விட்டது. திடுக்கிட்டு எழுந்திருந்தாள் வள்ளி. தெருவோடு போய்க் கொண்டிருந்தான் மாரி.

"அண்ணே! பூங்குடியிலிருந்து தானே வர்றே? அது வரலில்லையா?" என்று கேட்டாள் ஏக்கம் பொங்க.

"உன் புருசன் பிடிவாதத்தைக் கேட்கவேணுமா? ஐந்தாறு பேருங்க கை சளைத்துப் போய் எழுந்திருந்து போயிட்டானுக. இவன் மட்டும் மோதிரத்தை எடுத்து விட்டுத்தான் மறு வேலைன்னு ஒரே பிடிவாதமாக மூழ்கி விட்டே இருக்கான்!" என்று கூறினான் மாரி.

"ஐயோ, அதுக்கு உடம்பு சரியாயில்லையே! இவ்வளவு நேரமா தண்ணியிலே ஊறினா..." வள்ளிக்கு அழுகை வந்து விடும்போலிருந்தது.

"நான் எவ்வளவோ சொல்லிவிட்டேன். அவன் கேட்கல்லே..." மாரிபோய்விட்டான்.

வள்ளிக்குப் பயம் பிடித்துக் கொண்டது. 'காலையில் போன புருசன் இன்னுமா வராமல் இருப்பாரு? அவருக்கு என்னவோ ஏதோ தெரியல்லியே!' என்று வாய்விட்டு அரற்றியபடி சிம்னி விளக்கைக் கொளுத்தினாள். கால் வயிற்று எண்ணெயில் கொழுந்து விட்டு எரிய முடியாமல் 'முணுக் முணுக்'கென்று எரிந்தது சிம்னி.

உள்ளுக்கும் வாசலுக்கும் ஆயிரம் நடை நடந்தாள் வள்ளி. கால்கள்தான் கடுத்தன. பசி வயிற்றைப் புரட்டியது. ஆனால் சாப்பிடப் பிடிக்கவில்லை. உட்காருவதும் எழுந்திருப்பதுமாகவே யிருந்தாள். நேரம் ஊர்ந்து கொண்டேயிருந்தது. நெஞ்சம் உழன்று கொண்டே யிருந்தது.

ஒன்பது மணிச் சங்கு 'ஊ...' என்று ஓலமிட்டது. தெருக் கோடியில் முக்காடிட்ட உருவம் ஒன்று ஊர்ந்து வருவது தெரிந்தது. விழிகளை விரித்துப் பார்வையை வெகு தூரம் ஓட விட்டாள். சந்தேகமே யில்லை. அது சாமியப்பன்தான்.

குடிசைக்குள் போய் ஓலையைக் கொளுத்தித் தண்ணீரைக் காயப் போட்டாள். பிறகு வாசலுக்கு ஓடி வந்தாள். எதிரே வந்த அவன் உடல் அவள் மீது உராய்ந்தது.

"இந்தா, புள்ளே! இதைச் சீக்கிரமா காதிலே போட்டுக்க" என்று கூறி அவன் ஒரு காகிதப் பொட்டலத்தை அவளிடம் கொடுத்து விட்டுக் குடிசைக்குள் சென்றான்.

நிலவு வெளிச்சத்தில் அவன் கொடுத்த பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்தாள் வள்ளி.

ஒரு ஜோடி ரங்கூன் கமலத் தோடு பளபளவென்று டாலடித்தது அவள் கையில்.

"அங்கேயே வெளிச்சத்தில் உட்கார்ந்து போட்டுக்கிட்டு வா!" குடிசைக்குள்ளிருந்து குரல் கொடுத்தான் அவன்.

காதிலிருந்து வெள்ளி தெட்டியை உருவிப் போட்டு விட்டுப் புதுத் தோடுகளை அதில் அணிந்து கொண்டு குடிசைக்குள் சென்றாள்.

"சோறு தின்க வாயேன். கருட்டி மடக்கிறு படுத்துட்டியே! உனக்குப் பசிக்கலியா?" என்று கேட்டாள்.

"தோடு போட்டுக்கிறியா?" அவன் குரல் ஒரு மாதிரியாக இருந்தது.

"போட்டுக்கிட்டேன்!" என்றாள் வள்ளி.

"விளக்கை எடுத்துக்கிட்டு இப்படி என் கிட்டே வா!" என்றான் அவன்.

அப்படியே வந்தாள் வள்ளி.

"விளக்கை அவன் முகத்துக்கு நேராகத் தூக்கிப் பிடித்துக் கொண்டாள் இடது கையினால். வலது கையால் அவனுடைய மோவாயைத் திருப்பி, "இப்படித் திரும்பு" என்று கூறினாள்.

'சுரீர்' என்றது அவளுக்கு. "இதென்ன இப்படிக் கொதிக்குது உன் உடம்பு" என்று பதறினாள் அவள். கைகள் அவன் கன்னத்தில் பதிந்தன. மழுவாகக் கொதித்தது. "காய்ச்சல்லே அடிக்குது. ஐயோ! நான் என்ன செய்வேன்!" என்று கூறி விம்மத் தொடங்கி விட்டாள் அவள்.

"எதுக்குப் புள்ளே கூச்சல் போட்டுக் கலாட்டா பண்ணுறே! ரொம்ப நேரமா தண்ணியிலே இருந்தது கொஞ்சம் கடுதான்

## அவரைப் பாருங்கள்!

- அவருக்குச் சளி மூண்டிருக்கிறது அல்லது தொண்டையில் கபம்.
- அவர் படுக்கையில் உட்காருகிறார் அல்லது ஜன்னலை நோக்கி ஓடுகிறார்.
- அவருக்கு மூச்சை யடைப்பதுபோல இருக்கிறது; மூச்சுவிட அவஸ்தைப் படுகிறார்.
- அவர் உள் மூச்சு குறுகியும் விரைவாயும் இருக்கிறது.
- அவர் வெளி மூச்சு கடினமாகவும் நீண்டும் இருக்கிறது.
- இருமும்போது அவருக்கு வேர்க்கிறது
- அவர் உதடுகள் வெளுத்திருக்கின்றன
- அவர் முகம் ஒரு கதையைக் கூறுகிறது

## அதுதான் ஆஸ்த்மா

கவலையும் பச்சாத்தாபமும் தோய்ந்த கண்ணீருக்கும் அப்பாற்பட்ட உருவமாக அவர் காட்சியளிக்கிறார்

## நவரத்ன கல்பம்

உபயோகியுங்கள்

ஆனந்தமும் உற்சாகமும் உள்ளவராக அவரை அப்படியே மாற்றிவிடும்

○●○

வைரம், கெம்பு, நீலம், மரகதம், புஷ்பராகம், பவழம், முத்து, கோமேதகம் வைடூரியம் ஆகிய ஒன்பது உயர்ந்த கற்களின் கலவையே நவரத்ன கல்பம்



கவிராஜ்
பண்டிட்
துர்க்காதத்த சர்மா
வைத்திய வாசஸ்பதி
அவர்களால்
கண்டுபிடிக்கப்பட்டது

○●○

இதர விவரங்களுக்கு எழுதவும்

**NAVRATNA KALPA PHARMACY**
**JULLUNDUR CITY (India)**

---

30 வருடங்களுக்கு மேலாக பல்லாயிரக்கணக்கானவர்களால் பிரயோகப்படுகிறது

NOPAIN
AN ANALGESIC BALM

GIVES IMMEDIATE RELIEF IN RHEUMATISM SCIATICA NEURALGIA HEADACHE SPRAINS CHEST COLDS STIFF NECK ETC.

CALCHEMICO
TRADE MARK
MADE IN INDIA
THE CALCUTTA CHEMICAL CO. LTD. CALCUTTA-29

## நோபெயின்

வலிகளை ப்போக்கும்

CNF-ITM-57

தென் இந்திய ஆபீஸ்:
5/149, பிராட்வே, சென்னை-1



படிப்புத் திறனிலும் நடிப்புத் திறனிலும் படிப்படியாய் முன்னேறி வரும் மதராஸ் பள்ளியின் வருடாந்திரப் பரிசளிப்பு விழாவின் சில காட்சிகளைப் படங்களில் காணலாம்.

1. அசோக சக்கரவர்த்தியின் சரித்திரத்திலிருந்து ஒரு காட்சி. யுத்த ஒழிப்புக்குச் சித்த மாறும் கட்டம். அந்த வழிப்போக்கனின் முகத்தில் உள்ள பாவத்தைப் பாருங்கள். "என்ன சாதித்துவிட்டான் அசோகன்? எங்கும் ரத்த வெள்ளம்; அநாதைகள் யுத்தத்தில் வெற்றியாம், சே!" என்ற வாக்கியங்கள் இளம் நடிகன் சாமளா நாதனின் முகத்தில் பிரதிபலிப்பதைப் பாருங்கள்! மாறு வேஷத்திலிருக்கும் அசோகனாக நடித்த பேர்வழி, பிரபல நடிகர் எப். ஜி. நடேசய்யரின் பெண்வயிற்றுப் பேரன், அருணாசலேசன். போதாதா? விமர்சனம் எதற்கு?

2. "தையலைக் கேளடி உந்தன் பையனைப் போல" என்ற இடத்துக்கு அபிநயம் பிடிக்கிறது குழந்தைகள் வனஜா, பத்மாவதி, சாரதா மூன்றும் படுசுட்டிகள்.

3. மாகாணத்தில் உயர் மத்திய வகுப்புப் பரீட்சையில் முதலாவதாகத் தேறிய என். பத்மநாபனுக்குத் தலைவர் வெங்கடராமன் பரிசு வழங்குகிறார்.

வழக்கம் போல் வைபவ முடிவில் ரூ 2,500 நன்கொடை வசூல் செய்து அளித்தார் ஸ்ரீ கே. ராமமூர்த்தி. ஆபத்து வரும் போதெல்லாம் "ஸம்பவாமி யுகே யுகே" என்று பிரசன்னமாகும் ஸ்ரீ ராமமூர்த்தி புது தில்லியில் ஒரு தனி நபர் ஸ்தாபனமாகவே விளங்குகிறார்.

---

காட்டிடும். சரிதான் போ! நீ போய்ச் சோறு தின்னு!" என்றான் அவன் அசட்டையாக.

"நீ வரல்லியா?" என்று கேட்டாள் அவள்.

"எனக்கு வாய் வேப்பங்காயா இருக்குது. ஒண்ணும் புடிக்கல்லே. நீ போய்ச் சாப்பிடு" என்றான் சாமியப்பன், திரும்பிப் படுத்துக் கொண்டே.

மறுபடியும் கொஞ்சம் ஓலையைக் கொளுத்திப் போட்டு ஏதோ அவளுக்குத் தெரிந்த கஷாயத்தை வைத்துக் கொடுத்தாள் கணவனுக்கு. அவள் ஆசையுடன் சமைத்த கலவன் கீரைக் குழம்பையும் காணான் பொரியலையும் அவர்கள் வீட்டுச் சொறி நாய் அன்று களைத்துச் சாப்பிட்டது.

பொழுது விடிந்த பிறகும் சாமியப்பனுக்கு ஜுரம் குறையவில்லை. கவலையுடன் வைத்தியரை அழைத்து வந்து காட்டினாள் வள்ளி. வைத்தியர் ஏதேதோ சூரணம், மாத்திரை எல்லாம் கொடுத்து விட்டுப் போனார். மேலும் இரண்டு நாட்கள் நகர்ந்தன. சாமியப்பனுக்கு ஜுரம் அதிகமாகி விட்டிருந்தது. தன் நினைவின்றி அவன் பிதற்றிக் கொண்டிருந்தான். வைத்தியர் அன்று ஊரில் இல்லை.

செய்வதறியாது கண் கலங்கி நின்றாள் வள்ளி. வேண்டாத தெய்வங்களுக்கெல்லாம் வேண்டிக் கொண்டாள். ஒன்றும் பயனில்லை. வேறு வழியில்லாமல் டாக்டர் கணபதியிடம் ஓடினாள். அவர் கால்களைப் பற்றிக்கொண்டு கெஞ்சினாள். கணபதி வந்து சாமியப்பனைப் பரிசோதித்துப் பார்த்தார். அவர் முகம் வெளிறிப் போயிற்று.

"என்னங்கய்யா......" பதறினாள் பேதை.

"இது ஒரு கடுமையான விஷ ஜுரமம்மா. நான் மருந்து எழுதித்தருகிறேன். வாங்கிவா. ஊசி போட்டு, உள்ளுக்கும் மருந்து கொடுத்தால், ஒருகால் பிழைக்கலாம். எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் செய்கிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நல்லது" என்று கூறி மருந்தை எழுதிக் கொடுத்தார் டாக்டர்.

"இரண்டும் என்ன விலைங்க இருக்கும்...?" பொங்கி வரும் அழுகையின் நடுவே கேட்டாள் வள்ளி.

"குறைந்தது நாற்பது ரூபாய் இருக்கும்" என்றார் டாக்டர்.

"நாற்பது! அவ்வளவுக்கு நான் எங்கே சாமி போவேன்?" நடுங்கினாள் அவள்.

"நான் என்னம்மா செய்யட்டும்? எனக்கு பீஸ் வேண்டாம். மருந்தை வாங்கித்தானே ஆகவேண்டும். நீ பணத்தைக் கொண்டு வந்து என் வீட்டில் கொடு. நானே வேண்டுமானால் டவுனிலிருந்து மருந்தை வாங்கி வரச் சொல்கிறேன். அவ்வளவுதான் என்னால் செய்யக் கூடியது" என்று கூறிச் சென்று விட்டார் டாக்டர்.

கையைப் பிசைந்தாள் வள்ளி. நாற்பது ரூபாய்க்கு அவள் எங்கே போவாள்? தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள், செயலற்று. பளிச்சென்று நினைவு வந்தது வள்ளிக்கு.

ஒன்பது மாதக் கர்ப்பிணி இளைக்க இளைக்க நடந்தாள். மனத்தின் வேகம் முன்னே தள்ளியது. உடலின் பாரம் பின்னே அழுத்தியது. இழுத்துப் பிடித்துக் கொண்டு எப்படியோ

மூன்று மைல்களைக் கடந்து வைரநாதம் செட்டியார் கடைக்கு வந்து விட்டாள்.

செட்டியாரிடம் அந்தக் காதெத் தண்டையும், தோடுகளையும் வைத்தாள்.

"சாமி! நாலைந்து நாளைக்கு முன்னேதான் இந்தத் தோட்டை உங்ககிட்டே வாங்கி வந்தார். இப்போ கண்ணை முழிக்காமே கிடக்காரு. நீங்க கொஞ்சம் பெரிய மனசு பண்ணி இதை எடுத்துக்கிட்டு ரூபாய் கொடுத்திங்கன்னு..." மேலே கூறமுடியாமல் 'ஓ' வென்று அழுது விட்டாள் வள்ளி.

செட்டியார் தோட்டை மேலும் கீழுமாகத் திருப்பித் திருப்பிப் பார்த்தார். "நாலு நாள்தான் ஆச்சுங்கறே. ரொம்ப அழுக்கேறிக் கிடக்குதே! முப்பது ரூபாய் தரேன், வாங்கிக் கிட்டுப்போ!" என்றார்.

"ஐயையோ! சாமி! மருந்து விலையே நாற்பது ரூபாயாச்சே!" என்னம்மா உளறினள் பாவம் அபலை.

செட்டியார், "சரி, மேலே ஐந்து வேணுமானால் வாங்கிக்கோ!" என்று கூறினார்.

பிகுபிடிப்பாய் அவரிடம் எப்படியோ நாற்பது ரூபாய்களை வாங்கிக் கொண்டாள் வள்ளி.

அதே வேகத்தில் அவருடன் மருந்துகளை வாங்கிக் கொண்டு டாக்டரின் வீட்டுக்கு ஓடினள்.

டாக்டர் கஜபதி சாமியப்பனுக்கு இஞ்செக்ஷனும் செய்து, உள்ளுக்கு மருந்தும் கொடுத்தார். மெள்ளக் கண்களைத் திறந்தான் சாமியப்பன். டாக்டருக்கும் நம்பிக்கை பிறந்தது. "இனிமேல் பயமில்லை!" என்றார். வள்ளி "அப்பாடி..." என்று பெருமூச்சு விட்டாள். சுரீர் என்றது அவளுக்கு அடிவயிற்றில். "அம்மா......" என்று அலறிக் கொண்டு கீழே உட்கார்ந்தாள்.

"சாமியப்பா! வாயைத் திற. இந்தக் கஞ்சியைக் கொஞ்சம் குடி." என்ற மாரியின் குரல் கேட்டுக் கண்ணை விழித்தான் சாமியப்பன்

"அண்ணனு! வள்ளி எங்கே...?" என்று கேட்டு மிரள மிரள விழித்தான் சாமியப்பன்.

"அதோ! அந்த மூலையிலே படுத்திருக்கா" என்று கூறினன் மாரி,

"ஏன்! அவளுக்கு என்ன உடம்பு?" கவலை தாங்க முடியவில்லை அவனுக்கு.

"அவளுக்கா......" என்றான் மாரி. அதற்குள் 'குவா குவா' என்ற ஒரு மதலையின் குரல் சாமியப்பனின் காதைத் துளைத்தது.

"அண்ணே!" என்றான் உவகையால் இதழ் துள்ள.

"உனக்கு மகன் பிறந்திருக்கான்டா!" என்று கூறினன் மாரி மகிழ்ச்சியுடன்.

"மகனு? எனக்கா?" யானை பலம் வந்து விட்டது சாமியப்பனுக்கு. குடிசையைவிட்டு வெளியேறிய மாரியைக்கூடக் கவனிக்காமல் எழுந்திருந்து வள்ளியின் அருகில் சென்றான்.

"உடம்பு ஆறிடுதே! ஏன் எழுந்திருந்தீங்க?" என்று கோபித்துக் கொண்டாள் வள்ளி படுத்தபடியே.

குழந்தையின் அருகில் வந்து உட்கார்ந்தான் சாமியப்பன். அதன் பட்டுப் போன்ற கைகளைத் தொட்டு, "என் ராசா!" என்றான். அவன் உள்ளம் துள்ளியது. "வள்ளி! இவன் பிறக்கக்காட்டியும் உனக்கு நான் தோடு வாங்கிப் போட்டுவிட்டேன் இல்லையா?" என்றான் மனைவியைப் பார்த்து.

"ஆமாம், ஆமாம்!" என்றாள் வள்ளி சலனமற்ற குரலில் உற்சாகம் பொங்க.

"வள்ளி! அன்றைக்கு நான் ஜுர வேகத்திலே நல்லாவே பார்க்கலே. எங்கே காட்டு, உன் காதை!" என்று மனைவியின் முகத்தருகில் குனிந்தான் சாமியப்பன். அவன் கண்கள் வள்ளியின் காதில் துழாவின. அங்கே அவன் கண்டது வழக்கம்போல் வெள்ளை 'தெட்டி' யைத்தான்.

"வள்ளி! தோடுங்க எங்கே?" பதற்றத்துடன் கேட்டான் சாமியப்பன். "ஹூம்..." என்று நெடுமூச்செறிந்த வள்ளி, "இருக்குது பத்திரமாய்" என்றாள்.

"எங்கே?"

"செட்டியார் கடையிலே!"

"ஏன்?"

"அது இப்போ என் காதிலே ஜொலிச்சுக் கிட்டிருந்தா நீங்க இந்நேரம் இங்கே உட்கார்ந்து உங்களைப் பார்த்து மகிழ முடியுமா? ஏன் என் கூடத்தான் இதுபோல் பேசிக்கிட்டிருக்க முடியுமா?" என்றாள் வள்ளி.

"வள்ளி!" ஆற்றாமை மீருந்திருந்தது அவன் குரலில்.

"அத்தான், நம்பளைப்போல் உள்ளவங்களெல்லாம் அது மாதிரி சாமான்கள் மேலே ஆசையே வைக்கக்கூடாது, ஆமாம்!" என்றாள் வள்ளி மெதுவாக; ஆனால் அழுத்தமாக.

"இப்......எவ்வளவு ஆசையா வாங்கி வந்தேன்..." என்றான் அவன்.

"நானும் ஆசையா கேட்டேன். நீங்களும் ஆசையா வாங்கியாந்து போட்டீங்க. அந்தத் தோடே அதை மறந்துடுங்க அத்தான்! இதோ பாருங்க உங்க மகனை! உங்களையே முழிச்சு முழிச்சுப்பார்க்கறான்" என்று கூறினாள் வள்ளி.

ஆவலுடன் குழந்தையின் முகத்தைப் பார்த்தான் சாமியப்பன். அது தன் வண்டு விழிகளைக் குறியில்லாமல் சுழற்றிக் கொண்டிருந்தது. பட்டுப்போன்ற அதன் அதரத்தில் ஆசையுடன் முத்தமிட்டான் அவன். அந்த நிமிஷத்தில் ஒரு குழந்தையைப் போலத்தான் அவன் காணப்பட்டான்.

# விருது பெற்ற பிரமுகர்கள்



பாரத ரத்ன ஸ்ரீகோவிந்த் வல்லப பந்த்



பத்ம விபூஷண்
ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா



பத்ம விபூஷண்
ஸ்ரீ மோதிலால் சிமன்லால் செதல்வாட்



பத்ம விபூஷண்
ஸ்ரீ கனஷியாம்தாஸ் பிர்லா

# பத்ம பூஷண்


ஸ்ரீமதி பாலசரஸ்வதி


ஸ்ரீமதி லக்ஷ்மி மேனன்


உஸ்தாத் முஷ்டக்
உசேன் கான்


ஸ்ரீ கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி


ஸ்ரீமதி ஆண்டாள்
வேங்கட சுப்பாராவ்


ஸ்ரீ என். ரத்தன் ஜங்கர்

# பத்ம ஸ்ரீ


ஸ்ரீ எல்.எம். சிட்டாலே


ஸ்ரீ நாராயணசாமி தர்மராஜன்


ஸ்ரீ சுவாரம் வெங்கடசாமி நாயுடு


டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன்


ஸ்ரீ டி. என். ஜகதீசன்


ஸ்ரீமதி நளினிபாலாதேவி

# மாதர்குல திலகங்கள்



## திருமதி மரகதவல்லி அம்மையார்

மங்கைப் பருவம்: பிராயம் பத்தொன்பது. உலகம் அறியாப் பேதை. வாழ்க்கைப் பாதையில் மேடு பள்ளங்களை வகுத்து உணர முடியாத வயது. இந்த இளம் பெண்ணின் வாழ்க்கையில் திடீர் என்று ஒரு பெரும் அதிர்ச்சி ஏற்பட்டு விட்டது. இல்லற வாழ்க்கையை ஆரம்பிப்பதற்குள்ளாகவே கணவனை இழந்து கைம்பெண் ஆகிவிட்டாள்.

மகத்தான துரதிர்ஷ்டத்தில் ஒரு அதிர்ஷ்டம்! அந்தப் பெண் அறிவிலும் ஆற்றலிலும் சமூக சேவையிலும் பெயர் பெற்ற தஞ்சை மாவட்டத்தில் பிறந்து வளர்ந்து வாழ்க்கைப்பட்டதுதான். கணவனை இழந்த பெண் மாமியாரின் ஆதரவையும் இழந்து விட்டாள். தன்னுடைய எதிர்கால வாழ்க்கையைத் தானே தேடிக் கொள்ள முடிவு செய்தாள். அதற்கு உறு துணையாக இருந்தது அப்பொழுது ஏற்பட்டிருந்த சாதி ஒழிப்பு இயக்கம். அந்த இயக்கம் தஞ்சை மாவட்டத்தில் வேகமாகப் பரவியிருந்தது. அதில் ஈடுபட்டுப் பெண் குலத்துக்குத் தொண்டு செய்யக் கிளம்பினர். அப்படிப் புறப்பட்ட வீராங்கனைதான் திருமதி மரகதவல்லி அம்மையார்.

இந்தச் சமயத்தில் காந்தீயம் என்னும் புது தர்மம் தமிழ் நாட்டில் பரவிவரத் தொடங்கியது. செட்டிமார் நாட்டில் அந்தத் தர்மத்துக்கு விசேஷமான வரவேற்பு ஏற்பட்டது. தூய கதர் ஆடை தரித்த பல இளைஞர்கள் நாட்டின் முன்னேற்றத்துக்குரிய பல துறைகளில் ஈடுபட்டு உழைத்தார்கள். தமிழ் ஆர்வம் பொங்கித் ததும்பியது. சமூக சீர்திருத்தத்தில் பலர் ஆவேசம் கொண்டார்கள். விவாக முறைகளில் மாறுதல்கள் செய்தார்கள். விதவை மணத்தைத் தீவிரமாக ஆதரித்தார்கள் இந்த இயக்கத்தில் உற்சாகமாக இருந்தார் செட்டியார் சமூகத்தைச் சேர்ந்த திரு சொ. முருகப்பா அவர்கள். அவர் திருமதி மரகதவல்லி அம்மையாரைச் சந்தித்தார். அவர்கள் இருவருடைய கருத்தும் ஒத்து இருந்தன. இருவரும் சீர்திருத்த முறையில் விதவா விவாகம் செய்து கொண்டனர். ஒருவருக்கு ஒருவர் துணையாக இரண்டு பேரும் சமூகப் பணியில் தீவிரமாக ஈடுபட்டார்கள். பல துறைகளில் தொண்டு செய்த பிறகு பெண் குலத்துக்கும் குழந்தைக் குலத்துக்கும் தொண்டு செய்யும் பணியில் ஈடுபட்டார்கள். அமராவதி புதூருக்கு அருகில் 'மகளிர் இல்லம்' என்னும் ஸ்தாபனத்தை ஏற்படுத்தினார்கள். மாண்டிஸோரி அம்மையாரின் முறைப்படி குழந்தைகளுடைய அறிவுப் பயிற்சியை ஆனந்த மயமான பயிற்சியாக நடத்துவதுதான் இந்த ஸ்தாபனத்தின் முக்கிய நோக்கம். பொதுவாகச் சொந்தத் தாய்மாரிடம் அன்புள்ள குழந்தைகளுமுண்டு; பயமுள்ள குழந்தைகளுமுண்டு. ஆனால் திருமதி மரகதவல்லி அம்மையாரிடம் பயமுள்ள குழந்தைகளை மகளிர் இல்லத்தில் கிடையாது என்று கூறலாம். திருமதி மரகதவல்லி அம்மையாரைப் பார்த்து விட்டால் குழந்தைகளுக்கு ஒரே ஆனந்தம். படிப்பை ஒரு விளையாட்டு போலவே பயின்று அதில் நல்ல தேர்ச்சி பெற்று வந்தார்கள்.

மகளிர் இல்லம் வளர்ந்தது. சுமார் ஐம்பது ஏக்கர் நிலத்தில் பல கட்டடங்களுடன் உயர்ந்தது. மாண்டிஸோரிப் பள்ளிக்கூடத்துடன் பெண் பாடசாலை, காந்தி அனாதை இல்லம் ஆகியவைகளும் சேர்ந்தன. பின்னர் பல மாண்டிஸோரிப் பள்ளிக்கூடங்கள் செட்டிமார் நாட்டில் தோன்றியவுடன் மாண்டிஸோரிப் பள்ளிக்கூடத்தை விட்டுப் பெண் பாடசாலையையும், காந்தி அனாதை இல்லத்தையும் மட்டும் போற்றி வளர்க்கத் தொடங்கினார்கள். இந்த ஸ்தாபனங்களுக்கு ஊன்றுகோலாக இருந்து வந்த திரு சொ. முருகப்பா அவர்கள் சென்ற ஆண்டு ஜூன் மாதம் திடீர் என்று காலமான பின் இப்பொழுது திருமதி மரகதவல்லி அம்மையாரே இந்த ஸ்தாபனங்களை நிர்வகித்து வருகிறார்.

தாய் நாட்டுக்கும் சமூகத்துக்கும் 'மிகச் சிறந்த முறையில் ஊழியம் செய்துவரும் திருமதி மரகதவல்லி அம்மையாரை நமது மாதர் குல திலக வரிசையில் மிகுந்த மகிழ்ச்சியுடன் அறிமுகம் செய்து வைக்கிறோம். திருமதி மரகதவல்லி அம்மாள் நீடூழி வாழ்ந்து பெண்ணினத்துக்கு நல்ல பல தொண்டுகள் புரிந்துவரப் பிரார்த்திக்கிறோம்.

நேர்த்தியான வர்ணத்தைத்
தேர்ந்தெடுப்பது கடினமாயிருக்கலாம்
—ஆனல் நேர்த்தியான பெயின்டை
தேர்ந்தெடுப்பது மிகவும் எளிது



குட்லாஸ்

# நெரோலாக்

பெயின்டுகளேயே
வாங்குங்கள்



குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் பிரைவேட் லிட்.

ஏஜன்டுகள் :
ஹாரிஸன்ஸ் & கிராஸ்பீல்ட் லிட்.
தபால் பெட்டி நெ. 4, கொச்சின்
டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ.,
தபால் பெட்டி நெ. 200, சென்னை

# இப்பொழுது என்ன நடந்து கொண்டிருக்கிறது?

உலகத்தில்...இந்தியாவில்...உங்கள் மாகாணத்தில்?
வீட்டிலேயே, ஒரு ரேடியோவின் மூலம் அன்றாட
உலக சமாசாரங்களையெல்லாம் உடனுக்குடன்
நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள். மின்சார வசதி
இல்லாத இடங்களில் நீங்கள் வசித்தாலும்கூட
டிரை பாட்டரியினால் இயங்கும் ரேடியோ
ஒன்று வாங்கி அதன் மூலம் காதுக்கு இன்பம்
தருபவைகளையெல்லாம் கேட்டு சந்தோஷம்
அடையமுடியும் என்பது ஞாபகம் இருக்கட்டும்.
தெளிவான ஒலியுடன், தொல்லை அற்ற
சேவை செய்யக்கூடிய, பாட்டரியினால் இயங்கும்
ரேடியோ, உங்களுடைய குடும்பத்திற்கு
ஒரு மதிப்புள்ள சொத்தாகும்.



நம்பிக்கைக்கும் சிறந்த உழைப்பிற்கும்
'எவரெடி' பாட்டரிகளே உங்கள்
ரேடியோவிற்கு மிகச் சிறந்தவை.




நேஷனல் கார்பன் தயாரிப்புகள்

நேஷனல் கார்பன் கம்பெனி
(இந்தியா) லிமிடெட்

NCR 1276.

பாலர் மலர்

# திராட்சைப்பழம்

அழ. வள்ளியப்பா

இராட்சைப் பழம்—நல்ல
இராட்சைப் பழம்
இன்னத் தின்ன இனிமையான
இராட்சைப் பழம்.

கொத்துக் கொத்தாய் இருக்குமாம்
கொடியில் மேலே தொங்குமாம்.
அத்த னையும் பறிக்கவே
ஆசை யாக இருக்குமாம்.

இராட்சைப் பழம்—நல்ல
இராட்சைப் பழம்

காற்றில் ஆடி அசையுமாம்
கற்கண் டைப்போல் இனிக்குமாம்
பார்க்கப் பார்க்க எட்டியே
பறித்துத் தின்னத் தூண்டுமாம்.

இராட்சைப் பழம்—நல்ல
இராட்சைப் பழம்.

பச்சைக் கோலி போலவே
பளப ளப்பாய் இருக்குமாம்.
நிச்ச யமாய் வாயிலே
எச்சில் ஊறச் செய்யுமாம்.

இராட்சைப் பழம்—நல்ல
இராட்சைப் பழம்
இன்னத் தின்ன இனிமையான
இராட்சைப் பழம்.

சாமி

சித்திரத் தொடர் கதை (7)

# சோதிடப் புலி

அக்ஷயம்

1

பெரிய சங்கடமாகப் போய் விட்டதே! இதிலிருந்து எப்படித் தப்புவது? எப்படி யாவது ஏறிக் குதித்துத் தப்பியோடி விடலாமா? ஆமாம், அதுதான் சரி. நல்ல வேளையாக இந்தப் பக்கம் யாரும் வரக் கூடாது என்று எச்சரிக்கை செய்திருக்கிறோம்.

2

ஐயையோ! யாரோ இந்தப் பக்கம் வருகிறாற் போலிருக்கிறதே!

3

ஓம் காளி! ஹ்ராம். ஹ்ரீம், ஹ்ரூம் சொல்லடி! இதெல்லாம் யாரால் வந்த வினை! ---- ஏ நாக்கே! எல்லாம் உன்னால் வந்த வினை தான். அதிக ஆசைப்பட்டால் எத்தனை பெரிய கேடு விளையும், தெரியுமா?

4

என் பெயரைச் சொல்கிறாரே! திருடியவள் நான் என்று தெரிந்து விட்டதா?

5

6

பூசை வேளையில் யாரும் வரக் கூடாது என்று சொல்லியிருந்தேனே, ஏன் வந்தாய்! இப்பொழுது உன்னை என்ன செய்கிறேன் பார்!


7
உங்கள் காலில் விழுந்து கும்பிடுகிறேன், சாமி! நான் பிள்ளைகுட்டிக்காரி! என்னை மன்னித்துத் தான் ஆகவேண்டும்!


8
மன்னிப்பதா? முடியவே முடியாது


ஐயோ சாமி! அப்படிச் சொல்லக்கூடாது அந்த மூன்று ரத்தின ஹாரங்களையும் உங்களிடமே கொண்டு வந்து தந்து விடுகிறேன்.




9
ஆ! திருடி!
என்னை நீங்கள் எப்படியாவது காப்பாற்றித்தான் ஆகவேண்டும். நான் போட்டிருக்கும் தங்க வளையலைத் தந்து விடுகிறேன்.


10
என்ன? எனக்கு லஞ்சமா கொடுக்கப்பார்க்கிறாய்? போனால் போகிறது, பெண் பிள்ளையாக இருக்கிறாய், பிழைத்துப் போ! அதற்கு ஒரு வழி சொல்கிறேன்.


11
அந்த ரத்தின ஹாரங்களை உக்கிராண அறையில் இருக்கும் மாடத்தில் வைத்து விடு. ஆனால் இந்த ரகசியத்தை யாரிடமும் சொல்லக் கூடாது, தெரிந்ததா?


12
தொடரும்

## 32. "ஐயோ! இவனா?"

மந்திரக்கிழவி தன்னைப் பார்க்கத்தான் வந்ததாகச் சொன்னதும் மந்திரவாதி கார்குருவுக்கு சந்தோஷம் தாங்கவில்லை.

"நீங்கள் ஏன் உங்கள் பறக்கும் குதிரையில் ஏறி வரவில்லை?" என்று கேட்டான்.

"இன்னும் உனக்கு அந்த மந்திரக் குதிரையின்மேலுள்ள மோகம் விடவில்லையா?"

"அது எப்படி விடும்? நீங்கள் அந்த மந்திரக் குதிரையை என்னிடம் கொடுத்து, அதை எப்படி உபயோகிப்பது என்று சொல்லுகிற வரையில் எனக்கு அதன் மீதுள்ள மோகம் குறையாது" என்று உடனே பளிச்சென்று பதில் சொன்னான் கார்குரு. பிறகு அவர்கள் இரண்டு பேரும் அவர்களின் மந்திர விவகாரங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் வேணும் என்றே ஒன்றும் தெரியாதவள் போல் மந்திரவாதி மால்மாவைப் பற்றி மந்திரக் கிழவி குறிப்பிட்டாள்.

மால்மாவின் பெயரைக் கேட்ட உடனே கார்குருவுக்கு அடங்காத கோபம் வந்தது.

"இந்த வேளையிலே எனது சத்துருவின் பெயரை ஏன் குறிப்பிடுகிறீர்கள்? அவனுக்கு என்னாலான தீங்குகளைச் செய்து கொண்டேயிருக்கிறேன்" என்று கார்குரு பதில் சொன்னான்.

"அப்படியா? இன்னும் அவன்மீது நீ கொண்ட கோபம் தணியவில்லையா?" என்று கேட்டாள் மந்திரக் கிழவி.

"அது எப்படித் தணியும்? அவன்தான் எனக்கு ஜன்ம விரோதியாயிற்றே!" என்று கார்குரு பதில் அளித்தான்.

"ஓகோ! மால்மாவின் குழந்தைகளை நீ சமீபத்தில் பார்த்தாயா? எப்பொழுது எங்கே பார்த்தாய்? அவர்களுக்குஎன்ன தீங்கு இழைத்தாய்? சீக்கிரம் சொல்!" என்று கேட்டாள் மந்திரக் கிழவி.

உடனே கார்குரு, "ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? உங்களுக்கு அவர்களைத் தெரியுமா?" என்றான்.

"இல்லை, இல்லை. மால்மாவின் மீது உள்ள கோபத்துக்காக அவனது மக்களுக்குத் தீங்கு இழைக்கலாமா? தகப்பனார் ஏதாவது குற்றம் செய்தால் அதற்காக அவனது குழந்தைகளைத் தண்டிப்பதா? எனக்கு என்னவோ அது சரியென்று படவில்லை. அது போகட்டும். நீ என்ன தீங்கு இழைத்தாய், சொல்!" என்று கேட்ட மந்திரக் கிழவிக்கு, கார்குரு ஒன்றுமே சொல்லாமல் பேசாமல் இருந்தான்.

உடனே மந்திரக் கிழவிக்குக் கோபம் வந்தது. "என்ன பேசாமல் இருக்கிறாய்? உன்னைப்போல் மால்மாவும் மந்திரவித்தை

மாயப் பந்து

ராஜு



யில் நன்றாகப் பயிற்சி பெற்றவன்தான். உன்னைவிட அனுபவசாலி என்பதினால் நீ கலந்துகொண்ட போட்டிகளில் அவன் வெற்றி பெற்றான். பொறாமைக் குணம் கொண்ட உன்னால் மால்மாவின் திறமை யைக் கண்டு சந்தோஷம் அடைய முடிய வில்லை. அவன் குழந்தைகளிடம்கூடக் காரணம் இல்லாமலே விரோதம் பாராட்டு கிறாய்!'' என்றாள்.

"அம்மா! நீங்கள் சொல்வது உண் மையே! மால்மாவின் மீது என் மனத்தில் என்னவோ ஒரு பகை ஏற்பட்டு விட்டது. இனிமேல் அதை அகற்றுவது முடியாத காரியம்!'' என்றான் கார்குரு.

"உன் பகையைப் பற்றி எனக்கு ஒன்றும் இல்லை. உனது நலனுக்காக ஏதோ சொன் னேன். அது போகட்டும். நீ மால்மாவின் குழந்தைகளுக்குஎன்ன தீங்கு இழைத்தாய் என்பதை மாத்திரம் சொல்லு. என்னிடம் அதையெல்லாம் சொல்லக் கூடாது என்று நீ நினைத்தால் சொல்ல வேண்டாம்!'' என்று சற்றுக் கோபமாகவே பேசினாள் மந்திரக் கிழவி.

"அம்மா! உங்களுக்குத் தெரியாத [illegible] என்னிடம் என்ன இருக் கிறது? அப்படியே [illegible]



நேரத்துக்குள் தெரிந்து கொள்ளும் சக்தி உங்களுக்கு இல்லையா? நடந்தபடி உண்மையை அப்படியே சொல்கிறேன், கேளுங்கள்!'' என்று கூறி, மால்கோஷை யும் கலாவையும் தான் சந்தித்தது முதல் மால்கோஷை ஏரிக்கரையில் கொண்டு விட்டது வரையில் நடந்ததை நடந்தபடியே சொன்னான் கார்குரு.

"என்ன கார்குரு! மால்கோஷ் ஒரு இளம் பாலகன். மிகவும் புத்தி வாய்ந்த வன். யாரோ செய்த குற்றத்துக்கு அவ னுக்குப் பெரிய தண்டனையாக அல்லவா கொடுத்து விட்டிருக்கிறாய்!'' என்று கூறி அலுத்துக் கொண்டாள். அப்பொழுது வாசல் பக்கம் யாரோ வருவது தெரிந்தது.

கார்குரு வருபவர்கள் யார் என்று தெரிந்து கொண்டு விட்டான். 'மந்திரக் கிழவி இருக்கும் சமயத்தில் என் சீடன் கலாவை எதற்காக இங்கு அழைத்து வரு கிறான்? நாம் நினைத்த காரியம் நிறை வேறாமல் போய்விடும்போல் இருக்கிறதே!' என்று நினைத்தான்.

ஆனால் மந்திரக் கிழ வியோ, 'அட, பாவமே! மால்கோஷை விட்டுப் பிரிந்த கலா இவன் வீட் டுக்கு எதற்கு வந்து சேரு கிறாள்! இதெல்லாம் அவ ளுடன் வந்திருக்கும் கார் குருவின் சீடன் வேலையா கத்தான் இருக்கும்! சீடன் என்ன செய்வான்? கார்குருவின் சொற்படி நடந்திருப்பான். இனி மேல் நான் இங்கு இருக் கக் கூடாது. கலா என்னைப் பார்த்தால் பல சிக்கல்கள் உண்டாகும். அவளுக்குத் தெரியாமல் இந்த இடத்தை விட்டுப் போய் விட வேண்டும்'' என்று நினைத்தாள்.

உடனே கார்குருவிடம், "யாரோ வருகிறார்கள் போல் இருக்கிறது. நான் அவசரக் காரியமாக ஒரு இடத்துக்குப் போக வேண் டும். வெகு நாட்கள் கழித்து உன்னுடன் பேசி யதால் பொழுதுபோனதே தெரியவில்லை. உன் வீட் டுத் தோட்டப் பக்கமாகக் குறுக்கு வழியில் செல்லு கிறேன்'' என்று கூறினாள் மந்திரக் கிழவி.

மந்திரக் கிழவி தோட்டம் பக்கமாகப் போக வேண்டி

மென்றுதான் கார்குரு எண்ணினான். அதனால் அவன் மந்திரக் கிழவியைத் தோட்டப் பக்கம் வரையில் கொண்டு போய் விட்டு விட்டு வந்தான். கலாவைக் கண்டதும் கார்குருவுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. கலாவிடமிருந்து எப்படி யாவது இந்த முறை மந்திர ஜமக்கா ளத்தை அபகரிக்க வேண்டும் என்று தீர்மானித்தான். கலாவை வரவேற்பது போல் வாசற் பக்கம் வந்தான்.

கலா மந்திர ஜமக்காளத்திலிருந்து கார்குருவின் வாசலில் வந்து இறங்கிய வுடன், அதை மடித்து வழக்கம் போல் முத்துமாலையுடன் பையில் வைத்துத் தன் தோளில் மாட்டிக் கொண்டாள். அவளை அழைத்து வந்தவன், "அம்மா! இந்த வீட்டில்தான் உன் அண்ணன் இருந்தான். உள்ளே போய் இந்த வீட்டுச் சொந்தக் காரனைப் பார்ப்போம்" என்று கூறி அழைத்துக் கொண்டு போனான்.

வாசல் பக்கம் அப்பொழுது வந்துகொண் டிருந்த கார்குருவைப் பார்த்தவுடன் கலா வுக்கு இடி இடித்தாற் போலிருந்தது. யாரைப் பார்க்க வேண்டாம் என்று நினைத் தாளோ, அவன் வீட்டுக்கு அவளே வருவது என்றால் ஒரு அதிர்ச்சியான சம்பவம் தான் அல்லவா?

கார்குரு, "கலா, வா!" என்று கூப்பிட் டதுதான் தாமதம், "ஐயோ! இவனா?" என்று பெரிதாகக் கத்தினாள் கலா. அடுத்த நிமிஷம் மயங்கிக் கீழே விழுந்தாள்.

அவள் மூர்ச்சையாகிக் கீழே விழுந்ததைப் பார்த்த கார்குரு, "ஹாஹா! பிரதம சீடா! நான் நினைத்தபடி ஆயிற்று. சீக்கிர மாக இவளைத் தூக்கு. முன்பு மால்கோஷ் இருந்த அறையிலேயே விட்டு விடு வோம்" என்றான்.

பிறகு இருவரும் மயக்கம் அடைந்திருந்த கலாவை மெதுவாகத் தூக்கிக் கொண்டு போய் மால்கோஷ் முன்பு படுத்துக் கொண் டிருந்த அதே கட்டிலில் படுக்க வைத் தார்கள். கார்குரு அவசரம் அவசரமாகத் தன் பிரதம சீடனை அருகில் அழைத்து, "இதுதான் சமயம். மெதுவாகக் கலாவின் பையில் உள்ள பறக்கும் ஜமக்காளத்தை எடுத்து விட்டு, எனது ரகசிய அறையில் இருக்கும் அலமாரியில் விருந்தினர்கள் உபயோகத்துக்காகப் பல ஜமக்காளங்கள் இருக்கின்றன அல்லவா, அவற்றில் கலா வின் ஜமக்காளத்தைப் போலவே உள்ள ஒன்றை எடுத்து அவள் பையில் மறைத்து வைத்துவிடு" என்றான்.

"ஐயா! நீங்கள் சொல்லியபடி இப் பொழுதே செய்து முடிக்கிறேன். ஆனால் எப்படிப் பறக்க விடுவது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் அந்த மந்திர ஜமக் காளத்தை வைத்துக் கொண்டு என்ன பிரயோசனம்?" என்று கேட்டான் சீடன்.

"சீடா! சரியான கேள்வியைத்தான் கேட்டாய். நான் அதைப் பற்றி யோசிக்கா மல் இல்லை. அந்த மந்திர ஜமக்காளத்தை எப்படிப் பறக்கவிடுவது என்பது நமக்குத் தெரியப் போவதில்லை. அதை இரகசிய மாகவே மால்மாவின் பெண் கலா வைத் திருக்கிறாள். ஆனால் இந்த அரிய பொருளை மால்மா இழந்துவிட வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்த ஜமக்காளத்தை எனக்கு உபயோகப்படுத்திக் கொள்ள முடியாவிட்டாலும் மால்மாவுக்கும் அவன் புதல்வி கலாவுக்கும் உபயோகப்படாமல் இருக்க வேண்டும் என்பதுதான் எனது எண்ணம். அது கைகூடிவிட்டால் எனக்குப் போதும். மால்மாவின் மகன் மால்கோஷ் பைத்தியம் பிடித்தவனைப்போல் திரிவதும், கலா மந்திர ஜமக்காளத்தை இழந்து ஊர் ஊராக நடந்து திரியப்போவதுமே மால்மா வுக்குச் சரியான பாடம் கற்பித்ததுபோல் ஆகும். சீக்கிரம் சென்று மாற்று ஜமக் காளத்தை எடுத்து ஒளித்து வை. கலா இருக்கும் அறையை வழக்கம்போல வெளிப் பக்கம் பூட்டவேண்டாம். இவள் பெண் ஆனதால் பயப்படப் போகிறாள். கதவுகள் திறந்தபடியே இருக்கட்டும்" என்றான் கார்குரு.

(தொடரும்)


இதோ
உங்களுக்கு
முற்றிலும் புதிய
மாதிரியான
இரு பவுடர்கள்
ஸாண்டால்
சந்தனத்துடன் கூடிய
பால்கம் பவுடர் ...
ஸாண்டல் வுட்
டாய்லட் பவுடர்
சுத்தமான தனி
சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது.
டி.எஸ்.ஆர். & கோ
கும்பகோணம்
A.K.GOPAL


"GOKUL"
SANTOL
TOILET POWDER
GOKUL
SANDAL
TOILET POWDER

# கால்கேட் குளோரோபில் ஈறுகளை பலப்படுத்துகிறது



*வைத்திய சோதனை நிரூபிக்கிறது!*

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை முறை தவறாமல் தேய்த்தால் குளோரோபிலின் நற்பலன்கள் உங்களுக்கு கிட்டுகின்றன. ஒவ்வொரு முறை கால்கேட் குளோரோபில் உபயோகிக்கும் போதும்,

- ஈறுகளைப் பலப்படுத்துகிறது!
- வாய்நாற்றத்தை அதி தீவிரமாக ஒழிக்கிறது!
- சொத்தையாக்கும் கிருமிகளை வாயினின்று ஒழிக்கிறது!

குழந்தைகள் அதன் அதி மதுரமான சுவையை விரும்புகின்றன!




இதோ!
பெரிய எகானமி
சைஸில் கிடைக்கிறது!

* நீரில் கரையும் குளோரோபிலின் சேர்ந்தது.

CTPA/6/6

---

# விடோமால்ட்

திரண்ட விடமின் சத்துக்களடங்கியது




விடமின்-ஏ
விடமின்-பி-1
விடமின்-டி

நல்ல ருசியுள்ள, புஷ்டிதரக் கூடிய மால்ட் எக்ஸ்ட்ராக்ட் அடிப்படையில் மேற்கண்ட அத்யாவசியமான விடமின் சத்துக்கள் அடங்கியது. போஷாக்கு குறைவானவர்கள், நோயினின்றும் தேறுபவர்கள், கர்ப்பிணிகள் மற்றும் பாலூட்டும் தாய்மார்களுக்கு மிக உகந்தது என சிபார்சு செய்யப்படுகிறது.




தயாரிப்பாளர்கள் :

தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரி லிட்.

மல்லேஸ்வரம், பெங்களூர் - 3.

விற்பனை டிப்போ : 35/37, கம்ப செட்டி தெரு, சென்னை 1

MITL-4

# மாலவல்லியின் தியாகம்

அத்தியாயம் 19

## அரிஷ்டநேமியின் ஆசிரமம்

பொழுது புலர்ந்தது. புள்ளினங்கள் யாவும் தங்கள் இனிய குரலினால் கட்டியம் கூறிக் காலைப் பொழுதை வரவேற்றன.

குன்றுகள் சூழ்ந்த அந்தப் பிரதேசத்தில் அருணோதயம் ஆகும் தருணத்தில் இயற்கை அன்னை பல ஜால வேலைகளைச் சிருஷ்டித்து, பூமிக் குமரிக்கு என்னென்னவோ பொன்னாபரணங்களை யெல்லாம் சூட்டி அலங்கரித்த வண்ணம் இருந்தான். உதய சூரியனின் வரவு கீழ்த்திசையில் இருந்த ஓர் உயரமான குன்றின் உச்சியின் மேலிருந்து அற்புதமாகத் திகழ்ந்தது: அது கதிரவன் அந்தப் பிரதேசத்தின் வனப்புகளை யெல்லாம் பார்வையிட வருவது போல் இருந்தது.

காலை இளம் பரிதி வீசும் கதிர்களின் செழுமையினால், அங்கிருந்த பசும் புல் போர்த்திய குன்று மரகத மலையாகவே காட்சி அளித்தது.

கீழே அடர்த்தியாக வளர்ந்திருந்த பசும் புல்களின் நுனிகளிலே அமர்ந்திருந்த பனித் துளிகள் சூரிய பகவானைத் தங்கள் அகத்திலே கொண்டு வைரத்துகள் போல் பிரகாசித்தன. அந்தப் பனித் துளிகளின் அன்பை ஏற்றுக்கொள்பவர்போல் அவைகளைத் தம் கிரணங்களினால் இழுத்துத் தம்முடன் ஐக்கியமாக்கிக் கொண்டார் சூரியதேவன்.

பறவைக் கூட்டங்கள் கலகலத் தொனியுடன் வானத்தில் பறந்து குதூகலம் அடைந்தன.

காட்டு மலர்களெல்லாம் கதிரவன் வரவால் மகிழ்ச்சி பொங்கித் ததும்ப, அவைகள் சுமந்து கொண்டிருந்த பனி நீரைச் சிந்தி, செங்கதிர்த் தேவனுக்கு ஆராதனை செய்து மலர்ச்சியடைந்தன.

கூட்டம் கூட்டமாக வெகு தூரம் தெரிந்த குன்றின் தொகுதிகளைப் பார்க்கும்போது அவைகள் கதிரவனுக்குச் சிரம் குனிந்து வணக்கம் செலுத்துவதாகத் தோன்றின.

விண்ணில் சஞ்சரித்த சிறு சிறு முகிற் கூட்டங்கள் காலைக் கதிரவனின் ஒளி பட்டு வெள்ளி வரம்புகளுடன் ஜ்வலித்துக் கொண்டிருந்தன.

ஜைன முனிவரான அரிஷ்டநேமி உதயத்துக்கு முன் எழுந்து வெளியே சென்று வருவது வழக்கம்.

அரிஷ்டநேமி வேகமாக ஆசிரமத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

அவர் நடந்து வந்து கொண்டிருந்த ஒற்றையடிப் பாதையில் ஒரு பெண்கொடி துவண்டு கிடந்தது. தடாகத்திலிருந்து பறித்து எறியப்பட்ட தாமரைக் கொடி போல் அவள் மேனி வாடியிருந்தது. அவள் முகமும் ஆபரணங்கள்



ஏதும் இன்றியே, அந்தத் தாமரை மலரைப் போலவே அழகாயிருந்தது.

அவளைக் கண்டதும் ஜைன முனிவர் உள்ளத்தில் அளவு கடந்த கருணை உணர்ச்சி பொங்கியது.

பரபரப்புடன் அந்தப் பெண்ணுக்கு உயிர் இருக்கிறதா என்று பரீட்சித்துப் பார்த்தார். அவள் இலேசாக மூச்சு விடுவது தெரிந்ததும், அவர் முகத்தில் நம்பிக்கை ஒளி பிறந்தது. உடனே அவளைத் தூக்கிக் கொண்டு, அவர் தம் ஆசிரமத்தை நோக்கி நடந்தார்.

ஆசிரமத்தில் இருந்த ஒரு மேடையில் அந்தப் பெண்மணியைக் கிடத்திவிட்டு, தம் வளர்ப்பு மகள் சுகேசியை அழைத்தார். அவள் அப்பொழுது தான் தண்ணீர் கொண்டு வருவதற்குச் சுனைப் பக்கம் சென்று தண்ணீர்ப் பானையுடன் திரும்பி வந்து கொண்டிருந்தாள்.

"அப்பா, அழைத்தீர்களா?" என்று கேட்டு விட்டு அவரை நெருங்கினாள்.

"சுகேசி! கொஞ்சம் குளிர்ந்த தண்ணீர் கொண்டு வா அம்மா! பாவம்! இந்தப் பெண் வழியிலே மயக்கமாகப் பிரக்ஞையற்று விழுந்து கிடந்தாள். நான் இங்கே கொண்டு வந்து சேர்த்தேன்" என்றார் அரிஷ்டநேமி.

சுகேசி, உடனே பரபரப்புடன் ஓடிச் சென்று பானையிலிருந்து குளிர்ந்த நீர் கொண்டு வந்தாள். மயக்கமாகக்கிடந்த பெண்மணியின் முகத்திலே தெளித்தாள். அவள் சில நிமிஷங்களில் மயக்கம் தெளிந்து எழுந்தாள். உடனே தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்தாள். அவள் உடம்பு இலேசாக நடுங்கியது. பேசக்கூட முடியாமல் அவள் களைத்துப் போயிருந்தாள்.

சுகேசி ஒரு நொடியில் உள்ளே சென்று பாலும் பழமும் கொண்டு வந்தாள்.

"இந்தா, இதைச் சாப்பிடு!" என்று அன்போடு கூறிப் பால் குவளையை அவளிடம் கொடுத்தாள்.

அந்தப் பெண்மணி பால் அருந்தியதும் சற்றுக் களை தெளிந்தவளாகக் காணப்பட்டாள்.

"நான் எங்கேயிருக்கிறேன்? நீ யார் அம்மா?" என்று அந்தப் பெண்மணி கேட்டாள் மிகவும் மெலிந்த குரலில்.

சுகேசி அவள் கரங்களை மிகவும் அன்போடு பற்றிக் கொண்டு, "பயப்படாதே! நீ இருப்பது ஜைன முனிவர் அரிஷ்டநேமியின் ஆசிரமம். வழியில் மயங்கி விழுந்து கிடந்த உன்னை எடுத்துக் கொண்டுவந்து இங்கே சேர்த்தார். நான் அவர் மகள். என் பெயர் சுகேசி. நீ உன்னுடைய பெயரைச் சொல்லவில்லையே!" என்றாள்.

"நான் ஒரு துரதிர்ஷ்டம் பிடித்தவள். கஷ்டப்படுவதற்கென்றே பிறந்தவள். என் பெயர் மாலவல்லி. ஒரு பெரிய விபத்திலிருந்து தப்பி நான் இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன். நான் இங்கு இருப்





பதில் உங்களுக்கு ஏதாவது சிரமமா யிருக்குமோ?'' என்றாள் அந்தப் பெண்.

''எங்களுக்கு ஒரு சிரமமும் இல்லை, அம்மா! நீ இங்கு எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் தங்கியிருக்கலாம். என்னையும் சுகேசியையும் தவிர, இந்த ஆசிரமத்தில் வேறு யாரும் இல்லை. உல கில் மனிதனாய்ப் பிறந்தவனின் முக்கிய கடமை இயன்ற வரையில் பிறருக்கு உதவுவதுதான். நீ இங்கு இருப்பது சுகேசிக்கு நல்ல துணையா யிருக்கும்'' என்றார் அரிஷ்டநேமி.

மாலவல்லி இரு கரங்களையும் கூப்பி அவரை வணங்கி, ''அநாதையாய்க் கிடந்த என்னைக் காப்பாற்றி உயிர்ப் பிச்சை அளித்தீர்கள். அதற்கு நான் என்றும் தங்களுக்குக் கடமைப்பட்டிருக் கிறேன். இன்னும் சில காலம் இந்த உட லில் உயிர் தங்கியிருக்கவேண்டி யிருக் கிறது. நான் ஒரு பெரிய அபாயத்தி லிருந்து தப்பி ஓடி வந்திருக்கிறேன்...'' என்று கண்ணீருக்கிடையே கூறினாள்.

''குழந்தாய்! கலங்காதே. கண்ணீ ரைத் துடைத்துக் கொள். அருகதேவன் அருளால் உனக்குச் சகல நன்மைகளும் உண்டாகும். நீ மிகவும் களைத்துப் போயிருக்கிறாய். குளித்துவிட்டுச் சாப் பிடு!'' என்று கூறி அரிஷ்டநேமி தியா னத்துக்கு எழுந்தார்.

பிறகு சுகேசியும் மாலவல்லியும் சுனைக்குப் போய் நீராடி விட்டு வந்த னர். மாலவல்லிக்குக் களைப்புத் தீர்ந்து தெம்பும் உற்சாகமும் வந்தன. சுகேசி யும் அவளும், தேனும் தினைமாவும், பாலும் பழமும் சாப்பிட்டனர்.

''மாலவல்லி! உனக்கு இந்த ஆகாரங் கள் பிடிக்கின்றனவோ இல்லையோ! இந் தக் கானகத்தில் வசிக்கும் எங்களுக்கு இவைகளெல்லாம் சாப்பிட்டுப் பழகிப் போய் விட்டன!'' என்றாள் சுகேசி.

''சுகேசி! இந்த ஆகாரம் தேவாமிர் தமா யிருக்கிறது. நகர்ப்புறங்களில் கிடைக்கும் ஆகாரங்கள் பலவிதமாக அறுவகை ருசி பேதங்களுடன் தயாரிக் கப்பட்டிருக்கும். அவற்றைப் பக்குவம் செய்து பரிமாறுவதே தனிமாதிரியா யிருக்கும். இங்கே கிடைக்கும் ஆகாரங் களில் அந்த வீண் ஆடம்பரங்களெல் லாம் இருக்காது. ஆனால் இந்த உண வில் இருக்கும் முக்கியமான ருசி ஒன்று அங்கே இருக்காது. அது என்ன சொல்லு, பார்க்கலாம்!'' என்று மால வல்லி புன்முறுவலுடன் கேட்டாள்.

சுகேசி அவளைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, ''எனக்கு அதைப் பற்றி யெல்லாம் என்ன தெரியும்? நான் மனித சஞ்சாரமற்ற காட்டுப் பிரதேசத்தி லேயே சின்னஞ் சிறு வயது முதல் வாழ் பவள். நீ குறிப்பிடும் முக்கியமான ருசி என்ன என்று எனக்குத் தெரியவில்லை. நீயே சொல்லி விடு!'' என்றாள்.

''அந்த முக்கியமான ருசி என்ன தெரியுமா? தன்னலமற்ற அன்பு! நீ உணவில் அன்பையும் கலந்து அளித்திருக்கிறாய். அது நகர்ப்புறங்களிலே கிடைக்காது. அப்படிக் கிடைத்தாலும் ஒரு காரணம் பற்றிப் பிறந்த அன்பாகத்தான் இருக்கும்!'' என்றாள் மாலவல்லி.

''நீ பொல்லாதவள். மிகவும் அழகாகப் பேசுகிறாய். முதன் முதலில் உன்னைப் பார்த்ததிலிருந்தே உன்னிடம் எனக்கு இனம் தெரியாத அன்பு உண்டாகிவிட்டது. ஆகவே, அன்பின் உறைவிடம் என்று உன்னைத்தான் சொல்லவேண்டும்'' என்றாள் சுகேசி.

''ஆகா! நீயும் அழகாகத்தான் பேசுகிறாய். அது இருக்கட்டும். உன்னைப் பற்றி நீ ஒன்றும் சொல்லவில்லையே!''

''என்னைப் பற்றிச் சொல்லுவதற்கு ஒன்றும் இல்லை. எனக்கு விவரம் தெரிந்த நாட்களாக இந்தக் குன்றுகளையும் வனங்களையும் தவிர வேறு எதையும் நான் பார்த்ததில்லை. ஆதரவு அற்று, நரபலியிடும் பயங்கரக் காபாலிகர்களிடம் சிக்கி உயிர் துறக்க இருந்த என்னை இந்த ஜைன முனிவர் காப்பாற்றித் தம்முடைய ஆதரவில் வளர்த்து வருகிறார். இவர்தான் என் தாய், தந்தை, குரு, தெய்வம்...என் வரலாறு கிடக்கட்டும். உன்னைப் பற்றி நீ ஒன்றுமே சொல்லவில்லையே! பெரிய அபாயத்திலிருந்து தப்பி வந்திருப்பதாகச் சொன்னாய். அது என்ன அபாயம்?'' என்று கேட்டாள் சுகேசி.

மாலவல்லியைப் பார்த்ததிலிருந்து சுகேசிக்கு அவளிடம் ஒரு தனி அன்பு உண்டாகி விட்டது. மேலும் மாலவல்லியைப் பார்த்தால் அவளுக்குத் தன்னுடைய பிரதிபிம்பத்தையே பார்ப்பது போலிருந்தது. இதன் காரணமாகவும் அவள்மீது ஏற்பட்ட பாசம் எல்லைமீறிப் பெருகியது.

மாலவல்லி மறுமொழி ஒன்றும் கூறாமல் எங்கேயோ பார்வையைச் செலுத்திய வண்ணம் இருக்கவே, சுகேசி அவளைப் பார்த்து, ''...நான் உன் மனசு நோகும்படி ஏதாவது சொல்லி விட்டேனா? உன்னுடைய வரலாற்றைச் சொல்லுவதில் உனக்கு விருப்பம் இல்லையென்றால் நான் உன்னை வற்புறுத்தவில்லை...!'' என்றாள்.

''சுகேசி! நீ கேட்டதில் ஒரு தவறும் இல்லை. எனக்கே உன்னிடம் என்னைப் பற்றிய விவரங்களைச் சொல்ல வேண்டும் என்றுதான் ஆசை. துயரம்நிறைந்த என் கதையைச் சொல்ல நினைத்ததும் சிறிது மனக்கலக்கம் உண்டாயிற்று. அதனால் தான் கொஞ்ச நேரம் மௌனமாயிருந்தேன். நான் பிறந்து வளர்ந்த கதை

யைச் சொல்லுவதற்குச் சுவாரஸ்யமாக ஒன்றும் இல்லை. இசைக்கணிகையர் மரபில் பிறந்த நான் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவள். ஒருகாலத்தில் பல்லவ ராஜ சபையில் அரண்மனைப் பாடகியாகவும் இருந்தேன்......"

சுகேசி இதைக் கேட்டதும் பெரிதும் வியப்படைந்தாள்.

"அரண்மனைப் பாடகியாகவா இருந்தாய்? ஆகா! அது எத்தனை பாக்கியம்! ஏன் நீ அந்த நல்ல பதவியை விட்டு விட்டு இப்படி அவதிப்பட வேண்டும்?" என்று வியப்புடன் கேட்டாள் சுகேசி.

மாலவல்லி அவளைத் தழுவிக்கொண்டு மேலும் சொல்லுவாள்:

"சுகேசி! நீ உலகம் தெரியாதவள். நீ தெரிந்து கொண்டிருக்கும் உலகம் சூது, வாது, துயரம் எதையுமே அறியாதது. ஆனால் நான் என் வாழ்க்கை அநுபவத்தில் தெரிந்து கொண்டிருக்கும் உலகம் பயங்கரமானது; முள் நிறைந்த புதர் போன்றது; நச்சுப் பொய்கை போன்றது. இத்தகைய கொடுமையான உலகத்தில் அன்பு, அழகு இவைகளுக்கு எதிரிடையாகப் பெரும் முதலைகள் போல், குலம், அந்தஸ்து, மதம் இவைகளெல்லாம் விழுங்கக் காத்திருக்கின்றன. எந்த அழகைக் கண்டு என் குழந்தைப் பிராயம் முதல் எல்லோரும் என்னைப் பாராட்டிச் சீராட்டினார்களோ, அந்த அழகே எனது இன்ப வாழ்வுக்கு நிரந்தர அபாயமாக முளைத்து விட்டது. ஆகவே, இன்ப சுகங்களை யெல்லாம் வெறுத்து, அன்புருவமான புத்தர் பெருமானின் பாதங்களில் லயித்து, பிக்ஷுணியாகி விட்டேன். அப்படியான பின்பும் என் அழகின் தொடர்பு என்னை விட வில்லை. நிரபராதியான என்மீது ஒரு கொலைக் குற்றம் சுமத்தப்பட்டது. அதன் காரணமாக, புத்த விஹாரத்தை விட்டு வெளியேறினேன். நந்திபுரத்துக்கு அருகில் அந்நகர்க் காவலர் இடங்காக்கப் பிறந்தாரின் சேவகர்களால் பிடித்துச் செல்லப்பட்டேன். அங்கு எனக்குக் கட்டாயத் திருமணம் செய்விக்கும் அளவுக்கு என் விதி சதி செய்து விட்டது."

இதற்குப் பிறகு மாலவல்லி சுகேசியிடம், கள்வர்களால் அபகரித்துச் செல்லப்பட்ட இடங்காக்கப் பிறந்தாரின் மகன் திருப்புவனி என்ற எண்ணத்தில் தன்னை அவர்கள், தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளி கொண்டாரின் மகன் கோளாந்தகனுக்கு மணம் முடிக்க முற்பட்டதை விவரமாகக் கூறினாள்.

திருமண ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கும்போது புலிப்பள்ளி கொண்டார் மாலவல்லி யார் என்பதைக் கண்டு

கொண்டதையும், அவளை மிரட்டி உடனே வெளியேறச் சொன்னதையும் சுகேசியிடம் மாலவல்லி கூறினாள்.

* * *

நந்திபுரத்தில், பெருந்தக்க இடங்காக்கப் பிறந்தாரின் மாளிகையில் தனி அறையில் அடைபட்டிருந்தபோது மாலவல்லி அடைந்த அநுபவங்கள் அதிவிநோதமானவை. பாவம், பேதைப் பெண்! மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் அவள் தவித்துப் போனாள். நீண்டகாலமாக, குழந்தைப் பிராயம் முதலே கள்வரிடம், சிக்கிக் கொண்டபடியினால் தங்கள் மகள் சற்றுச் சித்தம் வேறுபட்டிருப்பதாக அவர்கள் நினைத்தார்கள்.

தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளிகொண்டார், திருபுவனியைத் தனிமையில் சந்தித்துப் பேசச் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொண்டு அவள் அறைக்குப் போனார்.

"பெண்ணே! நீ யாரென்பது எனக்குத் தெரியும். நீ உண்மையைச் சொல்ல மாட்டாய். இதோ நான் சொல்லுகிறேன். நீ இடங்காக்கப் பிறந்தாரின் மகள் திருபுவனியில்லை. உன் பெயர் மாலவல்லி. நீ ஒரு இசைக்கணிகை. இனி நீ இங்கே ஒரு கணப்போதும் தாமதிக்கக் கூடாது. உடனே எங்கேனும் ஓடிப் போய்விடு. இல்லையென்றால், திருபுவனிக்கும் உனக்கும் இருக்கும் உருவ ஒற்றுமையைக் கொண்டு பெரிய குடும்பத்துக்கே அழிவுதேடப் பார்த்தாய் என்ற குற்றத்தை ருசுவாக்கி உன்னைச் சிறைப்படுத்துவேன்!" என்று பயமுறுத்தி விட்டுத் தஞ்சைக்குப் போய் விட்டார், அமைச்சர் புலிப்பள்ளி கொண்டார்.

அதற்குப் பிறகு மாலவல்லியினால் அங்கே இருக்க முடியவில்லை. இரவோடு இரவாக நந்திபுரத்தை விட்டு யாருமறியாமல் வெளியேறி நெடுந்தூரம் நடந்து, காஞ்சிபுரம் சென்று, பிறகு அரிஷ்டநேமியின் ஆசிரமத்தை அணுகினாள்.

இந்த வரலாற்று விவரங்களைக் கேட்டதும் சுகேசியின் நயனங்களில் அவளையறியாமலே கண்ணீர் பெருக்கெடுத்தது.

"மாலவல்லி, உனக்கு ஏற்பட்ட துன்பங்கள் தாங்கொணாதவை. இடங்காக்கப் பிறந்தாரின் மாளிகையிலிருந்து தப்பிய நீ, காஞ்சீபுரத்துக்கு ஏன் போனாய்?"

"சுகேசி! காஞ்சீபுரத்தில் பூதுகர் இருப்பதால் அவரிடம் போய்ச் சேர்ந்து விட்டால் அவருக்கு உறுதுணையாக இருந்து அவர் முயற்சிகளுக்கு இயன்ற உதவியைச் செய்து கொண்டிருக்கலாம் என்ற எண்ணத்தில் காஞ்சீபுரம் போனேன். அங்கு புத்ததேரித் தெருவிலுள்ள புத்தப் பள்ளியில் அடைக்கலம் புகுந்தேன். ஆனால் அங்கும் எனக்கு அமைதி கிடைக்கவில்லை. என்னைத் தேடிக் கண்டுபிடிப்பதில் பல வீரர்கள் தீவிரமாக முனைந்திருக்கிறார்கள் என்னும் விஷயம் அங்கே போன சிறிது நேரத்துக்கெல்லாம் எனக்குத் தெரிய வந்தது. உடனே அங்கிருந்து யார் கண்களிலும் படாமல் வெளியேறிக் கடும் நடை நடந்து இந்த மலைப் பிரதேசத்துக்கு வந்தேன்......... களைப்பினால் சோர்ந்து பாதையிலேயே விழுந்து விட்டேன்,... பிறகு உன் வளர்ப்புத் தந்தை என்னைக் கண்டு காப்பாற்றினார்......" என்று மாலவல்லி மிகவும் தழுதழுத்த குரலில் கூறினாள்.

"...மாலவல்லி! உனக்கு இங்கேயும் ஆபத்து நிறைய இருக்கிறது. நந்திபுரத்து வீரர்களும் பழையாறை வீரர்களும் உன்னைத் தேடிக் கொண்டிருக்கின்றனர். அதன் காரணமாக இங்கேகூட ஒரு முறை ஏக அமர்க்களம் ஏற்பட்டது. நந்திபுரத்து வீரர்கள் என்னைப் பிடித்துத் தூக்கிச் செல்ல முயன்றனர். நல்ல சமயத்தில் பழையாறை வீரர்கள் அவர்களைத் தடுத்து என்னை விடுவித்தனர்" என்று கூறினாள் சுகேசி.

"உன்னைத் திருபுவனி என்று அவர்கள் நினைத்திருக்க வேண்டும். விபரீதம் தான்......! அது இருக்கட்டும்...... சுகேசி! உன் வயதுக்கு இப்பொழுது உனக்குக் கல்யாணம் ஆகியிருக்க வேண்டுமே! இது விஷயத்தில் உன் தந்தை முயற்சி செய்ய வில்லையா?" என்று கேட்டாள் மாலவல்லி.

ஏற்கனவே சிவந்திருந்த சுகேசியின் முகம் மேலும் குப்பென்று சிவந்தது.

ஆனால் அவள் மாலவல்லிக்கு மறுமொழி ஒன்றும் கூறவில்லை.

உடனே மாலவல்லி அவளை நெருங்கித் தழுவிக்கொண்டு, ''சுகேசி! உன் மனசுக்குள் யாரையாவது நினைத்துக் கொண்டிருக்கிறாயா? என்னிடம் கூடச் சொல்ல மாட்டாயா? எனக்கென்னவோ உன்னைப் பார்த்தது முதல் உன் அழகுக்கு ஏற்ற வாலிபனைத் தேடி உனக்கும் அவனுக்கும் விவாகம் செய்து வைத்துப் பார்க்க வேண்டும் என்று ஆசையாயிருக்கிறது. உம்! உன்னை அடைவதற்கு எந்த நாட்டு இளவரசனுக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ!'' என்று கூறி மாலவல்லி சுகேசியின் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள்.

சுகேசி தலைகுனிந்து கொண்டிருந்தாள். மாலவல்லி அவளது அழகிய முகத்தைத் தூக்கி நிமிர்த்தினாள். 'என்ன இது! சுகேசியின் கண்களிலிருந்து கண்ணீர் பிரவாகமாய்ப் பெருக்கெடுத்தோடுகிறதே!'

''சுகேசி, ஏன் கண்ணீர் விடுகிறாய்? என்னிடம் சொல்ல மாட்டாயா? நீ யாரையாவது நேசிக்கிறாயா?'' என்று மிகவும் உருக்கமாகக் கேட்டாள் மாலவல்லி.

சுகேசி கண்களைத் துடைத்துக் கொண்டு, ''மாலவல்லி! உன்னிடமாவது மனம் விட்டுப் பேசினால்தான் எனக்குக் கொஞ்சம் அமைதி கிட்டும். காட்டு மல்லிகைக் கொடி மாதிரி கவலையற்றுக் காட்டுப் பிரதேசத்திலேயே வளர்ந்த எனக்கு உலகமே தெரியாமலிருந்ததில் அதிசயமென்ன இருக்கிறது? அப்படியிருந்த என் உள்ளம் ஒரு இளைஞரிடம் ஈடுபட்டு விட்டது. சில மாதங்களுக்கு முன்பு, ஒரு இளைஞரும் சோதிடர் ஒருவரும் இங்கே வந்தார்கள். அந்த வாலிபர் முகம்...... மிகவும்......அழகாயிருந்தது. என்னையறியாமலே என் உள்ளம் அவரை நாடியது. என் விருப்பத்தை அறிந்தவர் போல் தந்தையும், என்னைப் பற்றிய வருங்காலப் பொறுப்பை அந்த வாலிபரிடமே ஒப்படைத்தார். என்னைத் தூக்கிப்போக முயன்ற முரடர்களிடமிருந்து அந்த வீர வாலிபர் போராடி என்னைக் காப்பாற்றினார்!''

''அவர் உன்னை விரும்பினாரா? உன்னிடம் தமது உள்ளன்பை வெளியிட்டாரா?''

''......இல்லை. நாங்கள் ஒரு வார்த்தை கூடப் பேசிக் கொள்ளவில்லை. எங்கள் விழிகள்தான் சந்தித்தன...!'' அப்பப்பா, இதைச் சொல்லி முடிப்பதற்குள் சுகேசிக்குத்தான் எத்தனை வெட்கம்!



"சுகேசி! அந்த வாலிபர் இப்பொழுது எங்கே யிருக்கிறார்?"

"அவர் காஞ்சிக்குப் போவதாகச் சொல்லிப் போனார்."

"அவர் பெயர் தெரியுமா?"

"தெரியாது!"

"இது அதிசயமான காதலாக அல்லவா இருக்கிறது? போகட்டும். அவருடன் வந்தாரே, அவருடைய பெயராவது தெரியுமா?"

"உம்......ஆமாம்......அவர் பெயர் சந்தகர்.குடந்தைநகரத்துச்சோதிடர்!"

இதைக் கேட்டதும் மாலவல்லியின் முகத்தில் மகிழ்ச்சிக் குறி தோன்றியது.

"சுகேசி! நீ அதிர்ஷ்டக்காரிதான். வலுவில் உன்னை ஒரு அழகன் தேடி வந்தாரல்லவா? அது இருக்கட்டும். அவர் எப்பொழுது வருவதாகச் சொன்னார்?" என்று மிகுந்த ஆவலோடு கேட்டாள் மாலவல்லி.

"குறிப்பாக எதுவும் சொல்லவில்லை. அவசரக் காரியமாகக் காஞ்சிபுரத்துக்குச் செல்லுவதாகவும், திரும்பி வரும்போது என்னை அவசியம் தம்மோடு அழைத்துக் கொண்டு போவதாகவும் சொன்னார்!"

"சுகேசி! நீ வருத்தப்படாதே. அந்த வாலிபன் யாரென்று கண்டறிந்து உன்னை அவனுக்கு எப்படியாவது மணம் முடித்து வைக்கிறேன். இதற்காக நான் எத்தகைய தியாகத்தையும் செய்யக் கொஞ்சமும் பின்வாங்க மாட்டேன். இது சத்தியம்! சுகேசி, நீ எப்போதாவது அவரைக் காண நேர்ந்தால் உன்னால் அவரை உடனே அடையாளம் கண்டு கொள்ள முடியுமா?"

"மாலவல்லி! நீ என்னத்துக்காக இந்தக் கேள்வியைக் கேட்கிறாய் என்று எனக்குத் தெரியும். என் உள்ளத்தில் இருப்பதை உன்னிடம் மறைப்பதில் பயனில்லை. அவர் இங்கே வந்தால், அவரை நான் கண்ணால் பார்ப்பதற்கு முன்பே என் கருத்தால் அவர் வரவைக் கண்டு கொண்டு விடுவேன். என் நினைவில்...அவர்...சதா நிறைந்திருக்கிறார்; நெஞ்சோடு எப்போதும் உறவாடுகிறார்........." என்று நாணத்தினால் குனிந்த தலையுடன் சுகேசி கூறினாள்.

மாலவல்லி சுகேசியை இறுகத் தழுவிக் கொண்டாள்.

சூரியன் மலைவாயில் விழும் தருணமாதலால் மேற்கே செக்கர் வானத்தைத் தீட்டி, சிவப்பு வர்ணக் குழம்பில் அவனும் குதித்துத் தன்னுடைய செங்கிரணங்களினால் குன்றுகளுக்கும் சிவப்பு வர்ணம் பூசினான்.

மெல்லிய தன் இடையில் ஒரு மண் குடத்துடன் சுகேசி தண்ணீர் கொண்டு வரச் சுனைக்குப் புறப்பட்டாள். மாலவல்லி எவ்வளவோ வற்புறுத்தித் தானும் வருவதாகக் கூறியும் அவள் அதற்குச் சம்மதிக்கவில்லை.

மாலை நேரத்து மஞ்சள் வெய்யிலில் தங்கக் கொடி நடந்து செல்லுவது போல், அசைந்து ஆடிக் கொண்டு சென்றாள் சுகேசி.

சுனைக்குச் சென்று நீர் மொண்டு கொண்டு கொஞ்ச தூரம் வந்ததும், 'டக்டக்' 'டக்டக்' என்ற குதிரைக் குளம்புகளின் சத்தம் துரித கதியில் கேட்டது. சுகேசி சற்றுத் தயங்கி ஒலிவந்த திசையைப் பார்த்தாள். மறுகணம் குதிரை அவள் இருந்த இடத்தை நோக்கியே வந்தது. சித்திரப் பாவையைப் போல் அயர்ந்து நின்றுவிட்ட சுகேசியின் அருகே வந்ததும் குதிரை நின்றது. குதிரை மேலிருக்கும் வீரனைப் பார்த்ததும் சுகேசியின் கரிய பெரிய விழிகள் ஆச்சரியத்தினால் விரிந்தன. (தொடரும்)

## தவிப்பும் முடிவும்!



# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

உபயோகிக்கும் பெண்மணியுடன் தோற்றமளிக்க

# அவன் பெருமை கொள்ளுகிறான்



POND'S
Vanishing
cream

எண்ணெய்ப் பசையற்றதான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தைப் பாது காக்கவும், மரு, தழும்பு இவைகளைத் தெரியாமல் மறைக்கவும் செய்யும். இந்த அற்புதமான க்ரீமைத் தடவியபின் பவுடர் போட்டுக் கொண்டால், பவுடர் மணிக்கணக்கில் படிந்து நிற்கும்!

**இலவச புஸ்தகம்**

அழகுபற்றிய குறிப்புகள் கொண்ட Lovelier with Pond's என்ற எமது புத்தகத்தை வரவழையுங்கள்.
பி. ஓ. பாக்ஸ் நம்பர் 1612
டிபார்ட்மெண்ட் நீ. 28 வி. பம்பாய் 1
என்ற விலாசத்திற்கு எழுதவும்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

இனிய குழந்தைகளின் இன்பமயமான எதிர்காலம்
குழந்தைகளின் தினம் — நவம்பர் 14, 1957

# விளையாடும் வேளை

அழகிலும் உழைப்பிலும்
எது சிறந்தது என்று
அம்மாவுக்குத் தெரியும்.
அதனால்தான்
விளையாடும்போது நான்
அணிகின்ற கால்சட்டை
மேல் சட்டைகளை
எல்லாம் கைத்தறித்
துணிகளிலேயே
கொடுத்திருக்கிறாள்...
இந்தியக் கைத்தறித்
துணிகள் தரவாரியான
நெசவுகளிலும், புத்தம்
புதிய பாணிகளிலும்,
விதவிதமான வண்ணங்
களிலும் கிடைக்கின்றன.
ஆட்டத்துக்கு அழகும்
வசதியும் அளிக்கின்றன.

# கைத்தறித் துணிகள்

அகில இந்தியா கைத்தறி போர்டு,
ஷாஹிபாக் ஹவுஸ், விட்டட் ரோடு, பம்பாய்




DA.57/188TH

# மூன்று புத்தகங்கள்

## திருமகளும் கலைமகளும்

பேராசிரியர் கல்கி அவர்களின் கட்டுரைகள் மிகவும் வேகம் வாய்ந்தவை என்பது யாவரும் அறிந்த விஷயம். மேலெழுந்த வாரியாகப் பார்த்து விட்டு, வழ வழா வென்று எழுதும் வழக்கம் அவருக்கு இருந்த தில்லை. 'அதற்குக் காரணம் எழுதுவதற்கென்று அவர் விஷயங்களைத் தேடிக்கொண்டு போனதில்லை. கண்ணெதிரே நாட்டில் நடக்கும் சம்பவங்களை அவர் பார்க்கும்போது அவருடைய மனத்தில் அழுத்தமாகப் பதிந்ததை அலசி ஆராய்ந்து விட்டுப் பிறகு எழுத வேண்டுமென்று தோன்றினால்தான் எழுதுவார். மனத்தில் தோன்றிய உண்மைகளை வெளியிட அவர் ஒருபோதும் தயங்கியதில்லை. மற்றவர்கள் ஒப்புக் கொள்வார்களா, மாட்டார்களா என்று யோசித்துக் கொண்டிருந்ததும் இடையாது.

இப்படி அவர் உத்வேகத்துடன் எழுத எடுத்துக் கொண்ட விஷயங்கள் பலவற்றுள் 'கல்விப் பிரச்னை' சம்பந்தமாக அவர் தொடர்ந்து சில காலம் எழுதிய கட்டுரைகள் முக்கியமானவை. இந்தக் கட்டுரைகள் ஒன்று சேர்ந்து 'திருமகளும் கலை மகளும்' என்ற புத்தகமாக வெளியாகியிருக்கிறது.

அந்தக் கட்டுரைகளைப் படித்துப் பார்த்தால் நம் செந்தமிழ்நாட்டுக் குழந்தைகளின் விஷயத்தில் பேராசிரியர் கல்கி அவர்கள் கொண்டிருந்த சிரத்தையும், அன்பும் நன்கு வெளியாகின்றன. கல்விப் பிரச்னையை எவ்வளவு கவலையோடு ஆராய்ந்து எழுதியிருக்கிறார் என்பதும் புலனாகின்றது.

உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் மாணவர்களின் கஷ்டங்களை உணர்ந்தும், ஆரம்பப் பள்ளியில் படிக்கும் குழந்தைகளின் படிப்பு வீணாகப் போய் விடுவதை அறிந்தும் அவர் இக் கட்டுரைகளை எழுதியிருக்கிறார்.

அவருடைய யோசனைகளுக்குச் செவிசாய்த்திருந்தால், இப்போது படிக்கும் குழந்தைகளைப் போல் இரண்டு மடங்கு குழந்தைகளைப் படிக்கச் செய்திருக்கக்கூடும்.

கணிதம், பூகோளம், ஆங்கிலம், தமிழ் இந்தப் பாட புத்தகங்களைப் படித்துப் பார்த்து அவற்றிலுள்ள குறைகளை அவர் அலசியிருக்கிறார். நிச்சயமாக அந்தக் கட்டுரைகள் ஆசிரியர்களுக்குள்ளே ஒரு விழிப்பை ஏற்படுத்தியது. இப்பொழுதும் அவருடைய யோசனைகள் ஆசிரியர்களுக்கும், கல்வித்துறையில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் சிந்தனையைத் தூண்டி விட்டுத் தங்களுடைய பொறுப்பை உணரச் செய்வதாக இருக்கின்றன.

பாட புத்தகங்கள் எழுதுவோரும், அப் புத்தகங்களை வெளியிடுவோரும் அவசியம் ஒருமுறை இந்தப் புத்தகத்தைப் படித்துப் பார்க்க வேண்டும். விலை ரூ. 2-50.

## குமரியும் குன்றமும்

அரசியல் கட்டுரைகளெல்லாம் சாதாரணமாக வெகு காலம் நிலைத்து நிற்பதில்லை. அந்தந்தச் சமயத்தில் நாட்டில் உள்ள நிலைமைகளைப் பற்றிய அரசியல் கட்டுரைகள் அமைந்திருக்குமாதலால், அந்தச் சூழ்நிலை மாறிய உடனே அந்தக் கட்டுரையின் வேகமும் குறைந்து போய்விடும்.

ஆனால் வெறும் உணர்ச்சியை வைத்துக் கொண்டு, ஒரே ஆவேசத்துடன் படிப்பவரின் மனத்தைக் கவர வேண்டும் என்பதற்காகப் பிரமாதமான வார்த்தைப் பின்னல்களுடன் எழுதாமல், நாடு செழித்து முன்னேற வேண்டும் என்ற ஆசையுடன், நாட்டு மக்களின் நிலை உயர வேண்டும் என்ற அக்கறையுடன் எழுதப்படும் கட்டுரைகள் என்றும் மங்கிப் போவதில்லை. அப்படி எழுதப்படும் கட்டுரைகளில் உணர்ச்சி வேகம் இருந்தாலும், உள்ளூற உண்மை மிளிர்வதால் அவற்றை எப்போது படித்தாலும் ரஸமாக இருக்கிறது. பத்து வருடங்களுக்கு முன்னால் அடியோடு வேறு சூழ்நிலையில் எழுதப்பட்ட கட்டுரையானாலும், அதில் பொதிந்திருக்கும் உண்மை இப்போதும் பொருத்தமாகவே இருக்கும்.

பேராசிரியர் கல்கி அவர்கள் எழுதிய அரசியல் கட்டுரைகள் சில "குமரியும் குன்றமும்" என்ற பெயரில் புத்தக வடிவில் வெளியாகியிருக்கின்றன. கல்கி அவர்கள் எழுதிய அரசியல் கட்டுரைகள் பிரசித்தமானவை.

'குமரியும் குன்றமும்' என்ற இத் தொகுதியில் 1945 முதல் 1954 ஜனவரி மாதம் வரை கல்கி இதழ்களில் வெளியான கட்டுரைகள் அடங்கியிருக்கின்றன. இதைப் படிக்கும் போது நமது தேசத்தில் சுதந்திரத்துக்கு முன்பிருந்த நிலைமை, சுதந்திரம் பெற்ற மகிழ்ச்சி, அதைக் காக்க வேண்டிய கடமை, இவையெல்லாம் கண் முன்னால் நிற்கின்றன.

"சுருக்கமாகக் கூறினால் இதைப் படிப்பதன் மூலம் தேசீய இயக்க வரலாறு முழுவதையும் தெரிந்து கொள்ளலாம்" என்று பதிப்புரையில் எழுதியிருப்பது உண்மை. விலை ரூ. 2.

## மகாத்மாவும், மகாகவியும்

காந்தி மகாத்மாவிடம் அத்யந்த பக்தி கொண்டிருந்தவர் பேராசிரியர் கல்கி அவர்கள். அதே போல அமரகவி பாரதியாரிடமும் அளவற்ற மதிப்பு கொண்டிருந்தவர். இந்த இருவரையும் பற்றி அவர் எழுதிய சில கட்டுரைகள் புத்தக வடிவில் வெளி வந்துள்ளன.

பெரியோர்களைப் போற்றுவதன் அவசியத்தையும், அவர்களுடைய வாழ்க்கைச் சம்பவங்களைத் தெரிந்து கொள்வதால் ஏற்படும் நன்மைகளையும் அவர்களுடைய வாக்குகளை ஞாபகப்படுத்திக் கொள்வதால் உண்டாகும் பயனையும் ஆணித்தரமாக எடுத்துக் கூறியிருக்கிறார் கல்கி அவர்கள்.

மகாத்மாஜி அவர்கள் சென்னைக்கு விஜயம் செய்தபோது நடந்த சம்பவங்களை மிகவும் ரஸமாகச் சித்திரித்திருக்கிறார். எட்டயபுரத்தில் பாரதிக்கு மணி மண்டபம் கட்டுவதற்காக அவர் செய்த முயற்சிகளும், மண்டபம் எழுந்த பின் அவர் உள்ளத்தில் உண்டான உவகையும் இந்தக் கட்டுரைகளில் நன்கு பிரதிபலிக்கக் காண்கிறோம். விலை ரூ. 1-50.

கிடைக்குமிடம்: பாரதி பதிப்பகம், 15, உஸ்மான் ரோடு, சென்னை-17.

# குரு பத்தினி




வண்டு வைகும் மணமலிய சோலை சூழ்ந்த முனிவர் தேவசர்மாவின் ஆசிரமம். அவர் எழுப்பிய இவ்வழகிய இல்லறத்தின் கூடு ஒரு வெஞ்சிறை போலவே இருந்தது. அவருடைய பத்தினியான இளமடந்தை கருசிக்கு, விருப்பம்போல் திரிய அவாவும் ஒரு மான்பிணை அப்பச்சை வேலிக்குள் அடைபட்டுக் கிடந்தது. தேவசர்மா செல்லும் வேத நெறியில் காதலுக்கோ இடமில்லை. நெஞ்சோடு பின்னும் ஒரு நட்புக்கு வழி அடைத்துக் கிடந்தது. மனித உள்ளத்தைக் கருகச் செய்யும் வெய்ய பாலையாகவே அந்த இல்லறம் கருசிக்கு மாறியது. கற்றைச் சடையும், புகை மங்கிய விழியும், வறண்ட மேனியும் உள்ள அம்முனிவரிடம் அன்பையும் பரிவையும் அவள் பெறவில்லை. கருசிக்குக் கணவனிடத்தில் ஒரு வெறுப்பு.

அவளுடைய பெண் உள்ளம், இந்த இல்லறத்தளையை அறுத்துக் கொண்டு செல்லத் துடித்தது. காதல் நிரம்பிய வாழ்க்கையில்தான் எத்தனை இன்பங்கள், விளையாட்டுக்கள்! இவற்றைத் தேவசர்மாவிடம் அவள் காணவில்லை. வண்டைத் தேடி மலர் அலைந்தது. அவள் மனத்தை வெளியே இழுக்க ஒரு மாயக் குழலிசை கேட்டது. தேவசர்மாவுக்கும் தெரியும், இந்த மான்பிணை தம்மிடம் தங்கி இருக்காதென்று. பத்தினியை எப்போதும் தம் கண்காணிப்பிலேயே வைத்திருந்தார். வாசலைத் தாண்டி வெளியே சற்று எங்கே யாவது போனால், கடும் குரல் எழுப்பி அவளை அழைப்பார். அவளும் விதிர்த்துத் திரும்பி விடுவாள்.

கருசியின் உள்ளத்தில் புரட்சி தோன்றியது. அவள் அலங்காரத்தை வெறுத்தாள். கூந்தலில் மலர் செருகிக் கொள்வதில்லை. ஆவின் பாலை வெறுத்தாள். இதற்கெல்லாம் தேவசர்மா அசையவில்லை. ஆனால் எத்தனை நாள் இப்படியே இருப்பது? கருசியைப் போன்ற கட்டழகியை இழக்கச் சற்றும் அவருக்கு மனம் இடம் தரவில்லை. இவளைக் கட்டிக் காப்பதே பெருந் தொல்லையாகி விட்டது அவருக்கு.

ஒரு பெரு வேள்வியில் ரித்விக்காகக் கலந்துகொள்வதற்கு அவருக்கு அழைப்பு வந்தது. கருசியை எப்படித் தனியாக விட்டுச் செல்வதென்ற கேள்வி அவர் மனத்துள் எழுந்தது. எத்தனை கட்டுதிட்டங்கள் எத்தனை தடங்கல்கள் அவர் செய்திருந்தார், கருசிக்கு! தாம் இந்த வேள்விக்குப் போனதும் அவள் மறைந்து விடுவாளென்ற உண்மை அவருக்குத் தெரியாமல் போகவில்லை. என்ன செய்வதென்று விழித்தார்.

தேவசர்மாவிடம் முறையாக வேத சாத்திரங்கள் கற்றுவரும் மாணவன் விபுலன். நெறிதவறாத நைஷ்டிக பிரும்மச்சாரி. அவன் ஆசிரமத்தில் இருப்பது தேவசர்மாவின் நினைவுக்கு வந்தது. "விபுலா!" என்றழைத்தார்.

வணக்கத்துடன் குருவின்முன் வந்து நின்றான் மாணவன் விபுலன்.

"நான் ஒருநாளைக்கு வெளியே செல்ல வேண்டி இருக்கிறது. சாகலர் செய்யும் வேள்வியில் நான் கலந்துகொள்ளப் போகிறேன். அழைப்பு வந்திருக்கிறது. ஆனால் என் மனசு இங்கேயே நிற்கிறது......" என்றார் தேவசர்மா சற்று வேதனையுடன்.

"ஏன் குருதேவா?" என்றான் விபுலன்;

அவர் சற்று நேரம் பேசவே இல்லை. ஒரு வித அவமானம் அவரைப் பேசவிடாமல் தடுத்து நிறுத்தியது.

"உன்னால் எனக்கு ஒரு காரியம் ஆகவேண்டும்" என்றார் அவர்.

"கட்டளை இடுங்கள்......அதன்படி நடக்கிறேன்" என்றான் விபுலன்.

"சொன்னது போல் செய்ய வேண்டும்... தவறக் கூடாது" என்றார் முனிவர்.

"என் உயிரைத் தரக்கூடச் சித்தமாக இருக்கிறேன். என்ன, சொல்லுங்கள்?" என்றான் விபுலன்.

குரல் தழுதழுக்க அவர், "கருசிக்கு என்னிடத்தில் ஆசையோ, பற்றுதலோ இல்லை... உனக்கு இது தெரியுமென்று நினைக்கிறேன்" என்று கூறினார்.

"தெரியாது குருதேவா! இப்போதுதான் நான் கேள்விப்படுகிறேன்."

"அவளுடைய மனசு இந்த ஆசிரமத்தில் இல்லை. என்னைவிட்டு, இந்தச் சமயம் பார்த்துப் போய் விடுவாளோ என்று அஞ்சுகிறேன்..." என்றார் தேவசர்மா.

குருவுக்கு நேர்ந்த இந்தப் பெருத்த அவமானம் விபுலனாலும் தாங்க முடியவில்லை.

"நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் அவளைக் காத்துக் கொள்கிறேன். என் குரு பத்தினியைக் கவர்ந்து செல்ல எவனாலும் முடியாது...இந்தக் கை வலுவற்றதன்று" என்றான் அவன்.

தேவசர்மாவுக்குப் பெரும் பாரம் மனத்தை விட்டு இறங்கியது. அமைதியுடன் சாகலரின் வேள்விக்குச் சென்றார்.

விபுலன் இளைஞன்: இதுவரையில் பெண்களை அவன் நிமிர்ந்து கூடப் பார்த்தவனன்று. ஏட்டுச் சுவடியிலேயே உள்ளத்தைச் செலுத்தியவன். கற்பனையில்கூடக் காதல் எப்படி இருக்குமென்பதை அறியான். இல்லறத்தை விட்டே பறக்கக் காத்திருக்கும் ஒரு கிளிக்குக் காவலாக அவன் நிற்க வேண்டி வந்தது.

ஆ. நெருங்கி விட்டது வேளை, இந்த நிழல் அடர்ந்த குடிலை விட்டு ஓட! களிப்பு, கருசியின் உள்ளத்தில் துள்ளியது. வாச மலர்களைக் கொய்தாள்; மேனியில் பூப்பொடி இமிர்ந்து, வண்ணச் சீரை அணிந்து, மைபரந்த விழிகள் கஞ்சனப்புள் போல நிலைக்காமல் சுழல இங்கு மங்கும் அலைந்தாள். தீங்குரல் எடுத்துப் பாடினாள். விபுலன் அவளுக்குத் தெரியாமல் வந்து அவளது ஒவ்வொரு போக்கையும் கவனித்து வந்தான். தன் ஓலைச் சுவடிகளை யெல்லாம் கட்டி வைத்து விட்டான். அந்திப் பொழுது நெருங்கியது. கருசி, தான் வெற்றிடமாக்கப் போகும் பர்ணசாலைக்கு விளக்கேற்றி வைத்தாள். உட்புறம் சென்று தன்னைப் பின்னும் அழகு செய்துகொள்ளும் அந்த ரிஷி யுவதியை மறைவாகவே கவனித்து வந்தான் விபுலன். அவள் தன் கரிகுழலில் ஒரு மகிழம்பூச் சரத்தை வளைத்துக் கொண்டே எழிலுடன் நின்ற காட்சி ஏதனாலோ விபுலனுடைய உள்ளத்தைக் கடைந்தது. அவனுக்கு மெய்ம்மயிர் பொடித்தது. கருசி இன்று ஆசிரமத்தை

க.நா.குமாரசாமி



விட்டுப் போகாது போனால், என்றென்றுமே அவனுக்கு விடுதலை இல்லை !

எந்தச் சமயம் அவள் நழுவிப் போய் விடுவாளோ, தெரியாது. விபுலன் மறைவாகவே அவளைப் பின்தொடர்ந்தான். இன்று அவனுக்குப் பெரிய சோதனை. குருவின் கட்டளையை நிறைவேற்ற வேண்டுமே என்ற நிலை; தப்பியோடும் குருபத்தினியை எப்படித் தடுப்பது என்ற தயக்கம்.

கருசி மெல்லப் பர்ணசாலையை விட்டு நிலவு தோய்ந்த வாசல் முற்றத்தில் வந்து நின்றாள். அவள் பின்னாலேயே ஒரு நிழல் தொடர்வதைக் கண்டு திடுக்கிட்டாள்.

"யார்...விபுலனா...யாரோ வென்று பார்த்தேன். எதற்காக இங்கே வந்தாய்?" என்றாள் குருபத்தினி.

விபுலன் அவள் எதிரே வந்து வழிமறித்தான். 'இளமையை வெளியே இழுக்கும்



அந்த மாயையை இன்று தோல்வியுறச் செய்வதே என் வேலை. குருவின் ஆக்ஞையை எப்படியாவது நிறைவேற்றுவேன்'—இந்த உறுதியுடன் வந்தவன் அந்தப் பிரும்மச்சாரி.

கருசி தன் புருவத்தை நெரித்து, அவனைக் கடிவது போல், "என்ன, உனக்குப் புத்தி மழுங்கிப் போய் விட்டதா? நீ என்னைத் தடுப்பது அழகல்ல. என் சாபத்துக்கு ஆளாவாய். விலகிப் போ" என்றாள்.

விபுலன் தலைகுனிந்து நின்றான். அந்த இடத்தை விட்டு அவன் நகர்ந்து போகவும் இல்லை. அவள் இடப்போகும் சாபத்தை ஏந்திக் கொள்ளவும் அவன் சித்தமாக இருந்தான். அவன் மன உறுதியில் ஒரு குறும்பு எண்ணம் புகுந்தது. இந்த நாடகத்தில் தானும் ஒரு பொய் வேடம் கொண்டு நடித்தால் என்ன என்று:

தலைகுனிந்திருந்த விபுலன், நிமிர்ந்து, அந்த நிலவொளியில் கருசியின் முகத்தையே கண்களில் காதற்கனிவுடன் நோக்கினான். அந்நீள் விழி மடந்தையும், அவன் குறிப்பை உணர்ந்தாள் ; விபுலனை மெல்ல அணுகினாள். "உன் மனதில் என்ன ?" என்றாள் மெல்லிய குரலில்.

"குருவுக்கு அடிமை இல்லை நான்...உனக்குத்தான்" என்றான் விபுலன்.

"எனக்கா ?...ஏன் இத்தனை நாள் இதை ஒளித்தாய் ?"

"என் வாழ்வில் தோன்றிய முதல் வியப்பு நீயேதான். இதுவரை என் கனவைக் கவடிக்குள் புதைத்திருந்தேன். அதை இன்று நினைவாக்கியவள் நீதான். தவம் எதற்கு இனி எனக்கு...? தவப் பயனை இதோ கண்டு விட்டேன்" என்றான். குரலில் ஒரு தடுமாற்றம் தோன்ற.

இந்த இன்ப பேரிட்டால் கருசிக்கு மூச்சு இரைந்தது. ஒரு தீவிர நகையின் நிழல் அவள் கண்களில் ஆடியது. அவள் உடலின் துடிப்பை விபுலன் உணர்ந்தான். இந்த நடிப்பு ஆனாலும் விபுலன், கருசியை நோக்கி, "என்னை மன்னித்து விடு" என்றான்.

"என்ன தவறு செய்து விட்டாய் நீ?" என்றாள் கருசி.

"என் எண்ணத்தை நிறைவேற்றியவைதத்தான்" என்றான் விபுலன்.

"எனக்கு இன்பத்தைத் தரும் ஆள் இவ்வளவு அருகில், இந்த ஆசிரமத்திலேயே இருக்கும்போது, நான் என் மனத்தை வீணாக வெளியே அலைய விட்டேனே...! இந்தப்பாலை வனம் இன்று எனக்கு ஓர் பச்சைத் திட்டாக மாறியது" என்றாள் கருசி.

அப்போது நிலவு அவ்விருவரைச் சூழ்ந்து ஒரு மாய உலகைத் தோற்றுவித்தது.

"விபுலா! உன் உதடுகள் ஏன் துடிக்கின்றன? கோழை ஆகி விட்டாயா? உனக்கு ஏன் இப்படி உடல் நடுங்குகிறது?" என்றாள் கருசி.

தொலைவில், உதிர்ச் சருகுகள் மீது யாரோ நடந்து வரும் ஓசை கேட்டது. நிலவொளியில் தேவசர்மாவின் உருவம் தெரிந்தது. கருசி சட்டென்று ஆசிரமத்தை நோக்கி விரைந்தாள். விபுலன் குருநாதரை எதிர்கொள்ளச் சென்றான்.

ஆசிரமத்துள் கருசி இருப்பதைக் கண்டு, தேவசர்மாவுக்கு ஒரே மகிழ்ச்சி. அவர் அஞ்சியது போல் ஒன்றும் நடக்கவில்லை. தன் மானத்தைக் காத்த சீடனை நன்றியுடன் நோக்கினார். விபுலன் தன் படிப்பைக் கவனிக்கச் சென்றான்.

கருசி இப்பொழுதெல்லாம், பர்ணசாலைக்கு வெளியே வந்து நிற்பதில்லை. அவள் உள்ளத்தில் நிரம்பியவன் விபுலன். தேவசர்மா அயர்ந்து தூங்கும்போது, அப்போதைக்கு மெல்ல எழுந்து வந்து வெளியே நோக்குவாள், விபுலன் வந்து நிற்கிறானா என்று.

# 'அனாஸின்'

## ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பான
## நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளது

**1. க்விநையின் சல்பேட் 2. காப்பின்**
**3. பினாஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்**

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனாஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரித நிவாரணமளிப்பதில் அனாஸினுக்கு இணையொன்றில்லை ... அனாஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வலிவேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனாஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது இருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனாஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனாஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைசா மட்டுமே.

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
**'அனாஸின்'**
வேண்டுமென்றே
கேளுங்கள்










ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைசா

**சாவித்திரி** கூறுகிறார்:

"நறுமணத்திற்கும் மென்மைக்கும் நான் தேர்ந்தெடுப்பது லக்ஸ் டாய்லெட் சோப்"




பிரபல சினிமா நட்சத்திரமாகிய சாவித்திரி அன்றாடம் தமது பொலிவான மேனிக்கு மணங் கமழும், தூய, வெண்மையான லக்ஸ் டாய்லெட் சோப்பையே உபயோகித்து வருகிறார். நீங்களும் அதை ஏன் உபயோகிக்கக்கூடாது?

# லக்ஸ்
# டாய்லெட் சோப்

**சினிமா நட்சத்திரங்களின் அழகுசாதன சோப்**

---

LTS. 553-50 TM பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு

தேவசர்மா, புதிய ஓலைச்சுவடியில், வேதத்துக்குத் தாம் கண்ட உரையை வரைந்து கொண்டிருந்தார். கருணி தம் எதிரே திடுமெனத் தோன்றுவதைப் பார்த்து அவர் திகைப்புற்றார். தாம் வெளியே சென்ற அந்த ஒரு நாளைக்குள் இவரிடத்தில் என்ன மாறுதலோ இது என்று நினைத்துக் கொண்டார்.

"எனக்கு ஒன்று வேண்டும்" என்றாள் கருணி.

"என்ன? சொல் மனசைவிட்டு" என்றார் முனிவர்.

"கந்தர்வ புஷ்கரிணியில் கல்லாரமென்னும் உயர்வகைச் செங்கழுநீர் மலர் இருக்கிறதாம். அதை நான் தலையில் சூடிக்கொள்ள ஆசைப்படுகிறேன்" என்றாள் கருணி.

இளமையுடன் கூடிய வனப்பினள் தம்மை ஒரு பொருட்டாக எண்ணி, இதை யாசிக்கும் போது அவளைத் திருப்தி செய்ய வேண்டுமென்றே அவருக்குப் பட்டது.

தேவசர்மா, விபுலனைக் கூப்பிட்டார். அவர் குரலைக் கேட்டதும் அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. கருணி தன்னைப்பற்றி ஏதாவது சொல்லி விட்டாளோ; அன்று தான் நடித்தது வெளிப்பட்டு விட்டதோ என்றெல்லாம் குழப்பம் மூண்டது அவனுக்கு. பயந்தவாறு சென்றான் குருவின் முன்பு.

கருணி அங்கே இருப்பதைக் கண்டு அவன் பின்னும் திடுக்கிட்டான். நெறி தவறிச் செல்ல இருந்த ஒருத்தியைக் காதலிப்பது போல் பாசாங்கு செய்தது உண்மையாகவே அவன் உள்ளத்தை உறுத்தியது.

அன்று அவன் நடந்துகொண்ட மாதிரி இனி அவன் என்றுமே நடந்துகொள்ள மாட்டான். நெருக்கடியான சந்தர்ப்பத்தில், குருவின் உத்தரவுக்குக் கீழ்ப்படிய வேண்டிய நிர்ப்பந்தத்தில் அவன் தன் மனத்துக்குக் கொஞ்சம் கூட விருப்பம் இல்லாதபோதிலும் அவ்வாறு பொய்யாக நடிக்கவேண்டி வந்தது. அந்தச் சூழ்நிலையில் அவன் இருந்த நிலைமையில் அவனால் வேறுவிதமாக நடக்க முடியவில்லை. ஆனால் அவன் உடலால் மட்டும்தான் காதல் கொண்டதாக நடித்தான். அவன் உள்ளம் சிறிதும் அற நெறியிலிருந்து பிறழவில்லை. ஆயினும் அந்த நினைப்பு என்னவோ அவனைச் சுட்டு விட்டது.

குருவின் முன் கைகட்டி நின்றான் விபுலன். அவன் கருணியை நிமிர்ந்துகூட நோக்கவில்லை.

"விபுலா! கந்தர்வ புஷ்கரிணியாமே, அங்கே அருமை மிக்க செங்கழுநீர் மலர் பூத்திருக்கிறதாம். இவளுக்கு அது வேண்டுமாம் ...எப்படியாவது அதை நீ கொண்டு வர வேண்டும்" என்றார் தேவசர்மா.

ஒரு ஆக்ஞை அல்லவா? எளிதில் கிடைக்கக் கூடியதா அந்தச் செங்கழுநீர் மலர்? எத்தனையோ இன்னல்களைக் கடந்து அவ்வபூர்வ மலரைக் கொண்டுவந்து குருவினிடம் தந்தான் விபுலன்.

"எனக்கு எதற்கு? கருணிதானே கேட்டாள்? அவளிடம் கொடு" என்றார் தேவசர்மா.

இன்னொரு சங்கடமான ஏவல்! அவன் தயங்கி, "இது என்னால் ஆகாது, குருதேவா! என்னைத் தவறாகப் புரிந்துகொள்ள வேண்டாம்" என்றான்.



"என்ன சார், புதுச் சட்டையை இப்படிக் கத்தரித்து இருக்கிறது?"

"அப்படியா? கொஞ்சம் முன்னாலே ஒருவர் 'சட்டைத்துணி நன்றாயிருக்கிறதே, கொஞ்சம் மாதிரி தருவீர்களா?' என்று கேட்டான். அவர் வேலையாக இருக்கும் என்று நினைக்கிறேன்!"

---

"உன்னைப் பற்றி நான் தவறாக நினைக்கவில்லை. உனக்கு விடுதலை தருகிறேன். நீ இனி என் சீடனல்ல" என்றார் தேவசர்மா.

"ஏன் குருதேவா?" என்றான் விபுலன்.

"உன் மனசையே கேட்டுப் பார்" என்றார் அவர். மின்னல் தீண்டியது போல் விபுலனுடைய உடல் துடித்தது.

"நான் மறைவில் செய்த பிழையைப் பொறுத்தருளவும்" என்றான் விபுலன் கண்களில் நீர் மல்க.

"நீ செய்த அந்தத் தவறு என்ன?" என்றார் தேவசர்மா.

விபுலன் அழுது விட்டான். நடந்ததை ஒன்று விடாமல் வெளிப்படுத்தி விட்டான், தன் குருவிடம்.

"என் குருபத்தினியைக் காக்க இதைச் செய்தேன். இது நான் உளமாரச் செய்த தன்று" என்றான் விபுலன்.

தேவசர்மாவின் முகத்தில் எதையும் மன்னித்து விடும் ஒரு சாந்தம் நிலவியது.

"உன்னை நம்புகிறேன் விபுலா...நீ செய்தது நடிப்புத்தான். உன் உள்ளம் மனித உள்ளந்தானே? அந்த இன்பத்தின் சாயம் சிறிதாகிலும் அதில் தோயாது போகாது..." என்று கூறினார் அவர்.

மோகச் சுடரை முத்தமிடுவதுபோல் நடித்தாலும் அந்த மோகத்தின் வேகம் நம்மைப் பாதிக்கத்தான் செய்யும். விளக்கின் அழகைக் கண்டு அதைச் சுற்றிச் சுற்றி வரும் விட்டில் பூச்சி அந்த விளக்கின் தீப்பிழம்பினால் பொசுங்கி இறந்து விடும். இறகைப் பொசுக்கிக் கொள்ளும் எண்ணம் அதற்குச் சிறிதும் கிடையாது. இன்பத்தில் ஓர் எரிச்சல் இருப்பதை அன்றுதான் விபுலன் உணர்ந்தான்.

தேவசர்மா விபுலனை மன்னித்து விட்டார். "இந்தப் பூவை உன் கையிலிருந்தே பெற வேண்டுமென்பது அவள் அவா...உனக்காகக் காத்திருக்கிறாள்" என்று விபுலனைச் கருசியிடம் அனுப்பினார் முனிவர்.

கருசியும் விபுலன் வருகைக்காக் காத்திருந்தாள். அவன் வந்தான். "இந்தாருங்கள், நீங்கள் கேட்ட மலர்" என்று அச்செங்கழுநீர் மலரை அவளிடம் தந்தான்.

"நீயே என் கூந்தலில் அதைச் செருகு" என்றாள் கருசி.

"நீங்கள் என் மதிப்புக்குரிய குருபத்தினி" என்றான் விபுலன்.

"என்மீது உனக்குக் காதல் இல்லையா? எல்லாம் நடிப்புத்தானா?" என்றாள் கருசி.

"ஆமாம். நெறிதவறிச் செல்ல இருந்த உங்களைத் தடுக்கவே அப்படி நடித்தேன்...முனிவர் எனக்கு விடை கொடுத்து விட்டார்...நான் போகிறேன் இந்த இடத்தை விட்டு, ஆறுதபுண் ஒன்றைமனத்துள் சுரந்து" என்றதும் விபுலன் அங்கே நிற்கவில்லை.

பேதை அவன் செல்வதைப் பார்த்து விக்கி விக்கி அழுதாள். இரவு எத்தனை நாழிகை இருக்குமோ, தெரியாது......கருசி மெல்லத் தன் கணவர் இருக்குமிடத்துக்கு வந்தாள்...

தேவசர்மா தியானத்தில் இருந்தார். அவருடைய காலடியில், பட்டுப் போன்ற தன் குழல் கற்றையை விரித்து, அவரைத் தொட்டாள். முனிவர் விழித்து "யார்... கருசியா?" என்றார்.



இலங்கை சர்வகலாசாலையின் மாணவர் சங்கத்தின் தலைவர் திரு ஆர். கே. சோமசுந்தரம் சமீபத்தில் பாரிஸ் நகருக்குப் பிரயாணமானார். பாரிஸ் நகரில் நடக்கும் சுதந்திர ஐங்கேசிய மாணவர் மகாநாட்டில் கலந்து கொள்வதற்காகப் போயிருக்கிறார்.

"நான்தான்..."

"இந்த இருட்டில் ஏன் வந்தாய்?"

அவ்வறையில் எரியும் விளக்கொளியில், நன்கு புலனாகியது; விபுலன் தன் அடையாளமாக விட்டுச் சென்ற அரிதான செங்கழுநீர் மலர், கருசியின் கூந்தலிலிருந்து, முனிவரின் காலடியில் கிடந்தது.

அந்த மலரின் ஸ்பரிசம் போல் கற்பை நோக்கித் திருந்திய ஒரு பெண்ணின் உள்ளத்தை உணர்ந்தார் முனிவர்.

"என்ன இது? கருசி, உனக்குத்தான் நான் விடுதலை தந்து விட்டேனே......" என்றார் தேவசர்மா.

"எனக்கு அந்த விடுதலை வேண்டாம்......உங்கள் கடினமான பாதுகாப்பிலேயே நான் இருப்பேன்......"

"எனக்கு ஒன்றும் புரியவில்லையே நீ சொல்வது?" என்றார் முனிவர்.

"உங்களைவிட உயர்வானவர் எவருமில்லை... நீங்களே உண்மையான மனிதர். இதுகாறும் தங்களுடைய ஒப்பற்ற தன்மையை அறிந்து கொள்ளும் சக்தி எனக்கு இல்லாமற் போனது பெரிய துர்ப்பாக்கியம்தான்!" என்று தழுதழுக்கும் குரலில் கூறிவிட்டு மீண்டும் முனிவர் தேவசர்மாவின் காலடியில் விழுந்து வணங்கினாள் கருசி.

யாருடைய மனவேதனையைப் போலவோ அந்தச் செங்கழுநீர் மலரின் இன்மணம் அங்கே இலேசாகக் கமழ்ந்தது.

[ஆதாரம்: மகாபாரதத்தில் வரும் ஒரு சிறு உபாக்கியானம்.]

## "கல்கி" நவம்பர் மாதச் சிறுகதைப் போட்டி

### பரிசு ரூபாய் நூறு

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம். எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். போட்டிக்கு ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டு பக்கத்துக்குள் இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாத மூன்றாவது வாரத்தில் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகளும் "கல்கி"யில் பிரசுரமாகும். கதைகள் அந்தந்த மாதம் 20-ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்துவிட வேண்டும்.

கதைகளைத் திரும்பப்பெற விரும்பும் எழுத்தாளர்கள் கதைகளுடன் போதிய தபால்தலைகள் வைத்து அனுப்பவேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறோம்.

தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும், குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.



## பூரண வாய் சுத்தத்திற்கென தயாரிக்கப்பட்டது

- கிருமிகள் அகற்றப்பெற்ற நைலான் முடிகள்.
- அழகிய பிளாஸ்டிக் பிடியில் நன்கு இணைக்கப்பட்ட முடிகள்.
- உங்கள் பற்களுக்கான உருப்பெற்றது; சுலபமாக சுத்தம் செய்கிறது.
- மிருதுவான சுத்தி—பல்லின் எனாமலை பாதிக்காது.
- மெதுவான முறையில் ஈறுகளை பலப்படுத்துகிறது.

**அதிக பலனுடன்!**

பற்களைப் பூரணமாக சுத்தம் செய்கிறது. ஈறுகளை மிருதுவாக தடவி விடுகிறது.

மூன்று அளவுகள்: பெரியவர்களுக்கு, சிறியவர்களுக்கு, குழந்தைக்கு
• ஹார்ட் • மீடியம் • ஸாப்ட்

# கால்கேட்

## நைலான் டூத் பிரஷ்

## மலிவு—நீடித்த உழைப்பு

---

# விபரம் தெரிந்து வியாபாரம் செய்பவன்



விஷயம் தெரிந்து வியாபாரம் செய்பவனுடன் பழகுவது மிகவும் எளிது. இந்த ரகத்தைச் சேர்ந்த பிலிப்ஸ் வியாபாரிகளால் உங்கள் கேள்விகளுக்கெல்லாம் சரியான விடை கொடுக்க முடியும். ஏனெனில் ரேடியோ சம்பந்தப்பட்ட பிரச்னைகள் எல்லாம் அவர்களுக்கு நன்கு தெரியும். உங்கள் ரேடியோ இடையூற்ற சேவை தர, ஒவ்வொரு வியாபாரியிடமும் பயிற்சி பெற்ற தொழில் நிபுணர்களும் பழுது பார்ப்பதற்குரிய சரியான சாதனங்களும் சிறந்த சேவை இணக்கமும் உண்டு. ஆண்டுதோறும் பாரதத்திலுள்ள பிலிப்ஸ் வியாபாரிகள் யாவரும் ஒருங்கே கூடி, முக்கியமாக வாடிக்கைகாரர்கள் தேவைகள் யாவையும் விவாதித்து ஆலோசனைக் கூட்டம் கூட்டுகிறார்கள். பிலிப்ஸில் விற்பனையும், சேவையும் ஒருங்கே கைக்கோர்த்தாப்போல், இணைக்கப்பட்டுள்ளன. ஆகவே, உங்களுடைய ரேடியோவுக்கு மேற்பார்வை தேவைப்பட்டால் .....

. . . அதை உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம் ஒப்படைத்துவிடுங்கள்



பிலிப்ஸ் இந்தியா பிரைவேட் லிமிடெட்.



நாதத்தில் ஒரு புதிய உலகம்

# பிலிப்ஸ் நோவோஸோனிக் ரேடியோ

சமீபத்திலுள்ள பிலிப்ஸ் வியாபாரியை பார்த்து விபரங்கள் கேட்பதுடனின்றி, பிலிப்ஸ் ரேடியோவின் ஒலிபரப்பும் நாதத்தையும் அனுபவித்துப் பாருங்கள்.

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 37. சேற்றுப் புண்

“இந்த மழையும் காற்றும்...தண்ணியும் சகதியும்.”—இது ‘பத்து’வின் பாட்டி.

“இன்னும் மழையே பெய்யவில்லையே! ஏதோ வானத்துக்கு மழை பெய்வது மறந்து போகவில்லை என்று தெரியப்படுத்திடும் அளவுக்கு இரண்டொரு நாள்...”—இது அடியேன்.

“இரண்டு நாள் தூற்றலோ...மூன்று நாள் மழையோ ஊரெல்லாம் சேறு......சகதி. வீடெல்லாம் ஈரம் ஓதம்...” என்றாள் பாட்டி.

இதற்குள் பாட்டியை இடைமறித்துப் பேத்தி “காலெல்லாம் சேத்துப்புண்...” என்றாள்......

பாட்டி, பேத்தி, அடியேன் எல்லோரும் ஒரே சிரிப்பு. குழந்தைகளின் பேச்சில் அப்படியொரு விசேஷ சக்தி இருப்பது உண்மையல்லவா?

மழைகாலம் சேறு, சகதி, ஈரம், ஓதம் என்று மட்டுமல்ல; சாதாரணக் காலங்களிலும் குழாயடியில் தீராத வேலைகளைச் செய்து கொண்டிருப்பது, வேலை தீர்ந்த பிறகு கால் கைகளையும் முக்கியமாக விரல்களினிடையே நகங்களைச் சுற்றிய பாகங்களைச் சரிவரச் சுத்தஞ் செய்து கொள்ளாமை என்னுங் காரணங்களால் அவ்விடங்களில் அழுக்கு சேரவும் அதனாலும், அவ்வழுக்குகளின் மூலம் பெருகும் கிருமிகளாலும் மேற்சொன்ன இடங்களில் விரணம்—புண்—உண்டாகிறது. இதைத்தான் சேத்துப் புண்—சேற்றுப்புண்—என்பர்.

கால்விரல்கள் மிகவும் நெருக்கமாயுள்ளவர்கள் விஷயத்திலோ இது அதிகம். கைவிரல்களின் இடையில் இப்புண் வந்து விட்டாலோ-அடங்காத நமைச்சலால் சொறிந்தபடியே இருக்க வேண்டி வரும். சொறியச் சொறிய உபாதை அதிகரிக்குமே தவிரச் சிறிதும் குறையாது.

மேலும், இவ்விதப் புண்களைக் கையில் வைத்துக் கொண்டிருப்பவர் இன்னொருவருக்கு ஆகாராதிகளை எப்படிப் பரிமாறிக் கொடுப்பது? அல்லது தானே சாப்பிடும்போதும் ஒருவித அருவருப்புத் தோன்றுமல்லவா? ஆகவே இது ஒரு நச்சரிப்புமிக்க நோய்.

இதற்கு இலகுவான சில மருந்துகளுண்டு. ஆயினும் மருந்தையும் விட முக்கியமானது, (1) சேற்றுப் புண் உண்டாகுமிடத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வது. ஈரம், சேறு சகதிகளில் நடமாடினாலும், கரையேறிய உடனே கால் கை விரல்களின் இண்டு இடுக்குகளை நன்றாய்க் கழுவி, ஈரமில்லாமல் துடைத்து விட்டுச் சிறிது எண்ணெய்ப் பசையுள்ள விதம் ஒரு பூச்சு—அல்லது களிம்பைத் தடவிக் கொள்வது.

(2) ஏன்? ஜலத்திடையே-சேறு சகதி இறங்கி வேலை செய்யப்போகும் முன்பே, இவ்வித பசையுள்ள பூச்சைத் தடவிக் கொண்டு பிறகு ஈரம்-ஜலம், சேறு சகதிகளில் இறங்கி வேலை செய்வது. இதனால் ஜலம், அழுக்கு முதலியவை இவ்விடங்களில் ஒட்டாது; சேற்றுப்புண் உண்டாகும் வாய்ப்பு குறைவுபடும்.

இவ்விதத் தற்காப்புக்களையும் மீறி, எப்படியோ சேற்றுப்புண் வந்து விட்டால் - (1) அப்புண்கள் எளிதில் உலர்ந்து குணமாவதற்கும் (2) மேலும் வராமலிருப்பதற்கும், இரண்டு வகையில் பயன் தரவல்ல மருந்துகளை உபயோகிக்க வேண்டும்.

(1) கடுக்காயைச் சிறிது ஜலம் விட்டுச் சந்தனக் கல்லில் உரசி எடுத்த விழுதை விரல்களின் இடையில் பூசிக்கொண்டு இரவில் படுக்கவும்.

(2) அவ்வாறே மஞ்சள் (3) மருதாணி ஆகியவற்றையும் அவ்விதமே உபயோகிக்கலாம்.

(4) காசுக்கட்டி [இதைச் சிலர் கத்தைக் காம்பு என்பர்] என்னும் மருந்தைத் தண்ணீரில் ஊறவைத்துப் பூசும் அளவுக்குக் குழம்பாக உள்ளபோது மேற்சொன்ன விதம் இரவில் பூசிக் கொண்டு படுத்து உறங்கவும்.

(5) இலுப்பை எண்ணெயை இவ்விதம் தடவிக் கொண்டு இரவில் படுத்து உறங்குவதும் நல்லது.

(6) மதார்சிங்குக் களிம்பு:—‘மதார்சிங்கு’ என்று ஒரு கடைச் சரக்கு. இதைத் தூளாக்கித் தேங்காய் எண்ணெய் விட்டுக் காய்ச்சவும். 5 பலம் தேங்காயெண்ணெய்க்கு ½ பலம் மதார்சிங்கு எடுத்துக் கொண்டால் போதும். எண்ணெய் மருந்து இரண்டையும் காய்ச்சிக் கொண்டே வந்தால், ஓரளவு எண்ணெய் வற்றிச் சுண்டும். இறக்கி வைத்து ஆறினால் இது ஒரு களிம்பு போலாகும். இதையும் மேற்சொன்ன விதத்தில் பூசி வருவது நல்லது.

(7) மெழுகுவர்த்திக் களிம்பு:— தேங்காய் எண்ணெய் 5 பலம் எடுத்துக் கொண்டு அதில் ஒரு மெழுகுவர்த்தியை [திரியைக் களைந்த பிறகு] இட்டுச் சூடாக்கவும். மெழுகுவர்த்தி உருகித் தேங்காயெண்ணெயுடன் கலந்திருக்கும் போது அதில் நன்றாய்ப் பொடித்த வெள்ளைக் குங்குலியம், ஷீல் அரக்கு இரண்டும் வகைக்கு ½ தோலா வீதம் இட்டுக் கலக்கி இறக்கி வைத்துக் கொள்ளவும். ஆறின பிறகு இது ஒரு களிம்பு போலிருக்கும். இதையும் மேற்சொன்ன விதத்தில் உபயோகித்து வரலாம்.

(8) குங்கிலியக் களிம்பு:— வெள்ளைக் குங்கிலியம் 3 பலம். தேன்மெழுகு 3 பலம். இரண்டையும் சிறு தீயில் காய்ச்சி உருக்கி, இத்துடன் 10 பலம் நல்லெண்ணெயும் கூட்டிக் கொண்டு, புகையும் சூடாக உள்ள போது ஜடுதியாக வடி கட்டி எடுத்துக் கொள்ளவும். ஆறின பிறகு இது ஒரு களிம்புபோலிருக்கும். இதையும் மேற்சொன்ன விதம் உபயோகிக்கலாம்.



மேலும், புழுவெட்டு என்று சாமானியபாஷையில் அழைக்கப்படும் ஒரு உபாதை உண்டு அல்லவா? விரல்களின் நகத்தைச் சுற்றி ஒரு வரம்பு கட்டிக் கொண்டு, அதில் சீழ் நிறைந்து கொண்டு அமுக்கினால் வெளிப்படுவதும் இல்லாவிடில் உள்ளிருந்தவாறே குத்தல், எரிச்சல் வலிகளை உண்டுபண்ணிக் கொண்டிருக்கும் ஒரு வியாதி: நகமும் சொத்தை பிடித்திருக்கும். உப்பு, புளி முதலியவை பட்டால் சகிக்க முடியாத எரிச்சல் உண்டாகும். அனேகமாக இது ஸ்திரீகளில் தான் வருவதைக் காண்கிறோம். இதனால் இவர்கள் படும் கஷ்டம் பரிதாபகரமானது. மேற்சொன்ன களிம்பைச் சிறியதொரு சீலையில் தடவி, இவ்விதம் பாதிக்கப்பட்ட விரல் நுனியில் சுற்றி விடவும். தினந்தோறும் இரவில் மட்டும் இதைச் செய்து வந்தால் போதும். சில தினங்களில் குணமாகி விடும்.

(9) ஸிந்தூராதி லேபம்:— இதுவும் மேற்சொன்னதுபோல் உபயோகிக்கக் கூடிய ஒரு களிம்பு. இதை ஒரு வைத்தியன் கையாளுவது விரும்பத் தக்கது. ஆனால் இதன் உபயோகத்தால் குணம் கண்ட நேயர்கள் இதைச் செய்யும் முறையைத் தெரிவிக்கும்படி அடிக்கடி நச்சரித்து வருகின்றனர். [சைதாப்பேட்டை அன்பர் கவனிக்கவும்.]

“இப்படித்தான் ஸார்! நல்ல மருந்துகளை ரகசியம் ரகசியம் என்று மறைத்து மறைத்து வைத்து நமது வைத்தியமே இன்று தேய்வுற்று விட்டது” என்னுமளவுக்குச் சொல்லி விட்டார் ஒரு வாசகர். [401]

வடிவேலனறிய வஞ்சனையின்றித் தெரிந்ததைச் சொல்வதில் எனக்கு நிகர் நான்தான் அன்பரே! இது உண்மை. ஆனால் இந்த ஸிந்தூராதி லேபத்தில் சில விஷப் பொருள்கள் சேர்வதால், பொதுமக்கள் கையாளுமளவுக்குப் பிரசுரித்தல் நியாயமா என்ற தயக்கத்தால் தான் இதுகாறும் வெளியிடவில்லை. நிர்ப்பந்தமாகவும் நிஷ்டூரமாகவும்கேட்பதால் சொல்லி விடுகிறேன்.

கிரிஸிந்தூரம் [ஜயசெந்தூரம்] 2 தோலா, ரஸஸிந்தூரம் 1தோலா, ரஸகற்பூரம் 1 தோலா, மதார்சிங்கு 2 தோலா - இவற்றைத் தனித்தனி பொடித்து எடுத்துக் கொள்ளவும். தேங்காய் எண்ணெய் 40 தோலாவை எடுத்துப் புகையும் அளவுக்குச் சூடாக்கி அடுப்பிலிருந்து இறக்கி வைத்துக் கொண்டு, தேன்மெழுகு 10 தோலாவை அதில் இட்டுக் கரைந்தவுடன் மேலே சொன்ன நான்கு சூரணங்களையும் இதில் கூட்டிக் கலக்கவும். முழுவதும் ஆறி ஒரு களிம்பு நிலைக்கு வரும் வரையில் கைவிடாமல் கிளறிக் கொண்டே இருக்க வேண்டும். இல்லாவிட்டால் சூர்ணங்கள் மட்டும் அடியில் தங்கிவிடும். தேங்காயெண்ணெயும் மெழுகும் மட்டும் மேலே உறைந்து தனியாக நின்றுவிடும். எல்லாமுமே நன்றாய்க் கலந்து கிடைக்கவே மேற்சொன்னவிதம் கிளறிக் கொண்டே இருத்தல் அவசியம்.

இதையும் முந்தின மருந்துகளைப்போல் பூச்சாக உபயோகிக்கலாம். 6, 7, 8, 9 மருந்துகளைக் காலையில் எழுந்ததும் பூசிக் கொண்டு வேலைகளைக் கவனிக்கச் சென்றால், ஜலம், சேறு, சகதி முதலியவை விரல் இடுக்கில் ஒட்டாது. ஆகவே சேற்றுப் புண் வரவும் வசதி இராது; வந்ததும் ஆறிப் போகும்.

# வாழ்வின் விளக்கு

"என்ன சொல்கிறாய் ?" என்று கேட்டு விட்டுக் குருசாமி மனைவியைப் பார்த்தார். அவள் முகத்தில் கெஞ்சும் பாவனையோ, அல்லது மிரட்டும் முறையோ தென்படவில்லை. ஒரு விஷயத்தைத் தீர ஆலோசனை செய்து விட்டு முடிவை எதிர்நோக்கும் குதிக்கோள் ஒன்றுதான் புலப்பட்டது.

"நான் கேட்டதற்குப் பதிலே வரவில்லையே, பானு ?" என்று மீண்டும் கேட்டார் குருசாமி.

"இருபது ஆண்டுகள் முற்றிவிட்ட விஷயம் இருபது நிமிஷங்களில் தீர்ந்துவிடலாம் என்று எதிர்பார்க்கிறீர்களா ?" அவள் இலேசாகச் சிரித்தாள்.

இப்பொழுதுதான் ஒரு நிழல், ஒரு சாயை குருசாமியின் முகத்தை மூட யத்தனித்தது. அதைக் கண்டதும் காண விரும்பாது போல் முகத்தைத் திருப்பிக் கொண்டாள் பானுமதி.

"நான் தீர, ஆற, அமர யோசித்துத்தான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். அதனால் தான் நான் உன்னை அழைக்க வந்தேன்."

"உங்கள் முடிவினால் உங்களுக்கோ, உங்கள் இரண்டாம் மனைவிக்கோ, எனக்கோ அல்லது நம் குழந்தைகளுக்கோ நிம்மதி இருக்கும் என்று எண்ணுகிறீர்களா ? அது வீண் பிரமை. அப்படி உங்களுக்கு உண்மையில் மனசுக்குத் தெம்பு வரும் என்ற நம்பிக்கை எனக்குத் தினையளவேனும் இருக்குமாயின் உங்களுடன் வரத் தயங்க மாட்டேன்."

"உண்மையாகவா, பானு ?" என்று கேட்கும்போது குருசாமியின் குரலிலே ஒரு புத்துயிர் பளிச்சிட்டது. ஆர்வம் மிகுந்த பார்வையுடன் அவள் அருகில் போய் நின்றார்.

பானுமதி தியானம் செய்வதுபோல் இரு கண்களையும் இறுக மூடிக்கொண்டு தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

"நீ கூறுவது உண்மையானால் உனக்கு என் மீது அன்பு குறையவில்லை, பானு! நாம் மீண்டும் ஒன்றாக வாழ இயலும் என்பதற்கு வேறு என்ன வேண்டும் ?"




"வாழ முடியாது என்பதற்கு வேறு என்ன வேண்டுமென்று கேளுங்கள். சற்றுப் பொறுத்த மாக இருக்கும்" என்று கூறினாள் பானு.

"நீ சொல்வதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்......"

"உண்மையைக் காண மறுப்பதில் யாருக்கு என்ன பயன், சொல்லுங்கள்." பானுமதியின் குரலில் திடம் குறைய ஆரம்பித்து விட்டது. கெஞ்சுவது போல் இருந்தது அது! "இடையே இன்று இத்தனை நாட்கள் இல்லாமல் இப்பொழுது ஏன் இந்தத் தீர்மானம் ?" என்று கேட்கும்போதே வேதனையில் அவள் நெஞ்சம் விண்டு விடுமோ என்று தோன்றியது.

"இதைத் திடீர்த் தீர்மானம் என்றா சொல்கிறாய் ? உன் இதயத்தைத் தொட்டுப் பார்... நான் என்றைக்கும் உன்னை விட்டுப் பிரிந்திருக்க விரும்பவில்லை......நீதான்......"

"நான் தவறு செய்ததாகவே இருக்கட்டும். பெண்ணின் மனம் உங்களுக்குத் தெரிய வழியில்லை."

"நீ பெரிய தியாகி, பானு. சந்தேகமில்லை. சீதாவை உன் தங்கைபோல் பாவித்து அவளுக்காக உன் இன்பத்தைத் தியாகம் செய்து விட்டாய். மறுபடியும் நீதான்......"

"சரி !"

"என்ன சொன்னாய் ? 'சரி' என்ற சொல் உன் வாயிலிருந்து வந்ததா ?"

"முன்பு இருபது வருடங்களுக்கு முன் ஒரு முறை உங்களுக்காக அங்கே வந்து இருக்கச் சம்மதித்தேன். அன்று அவளுக்கும் குழந்தையில்லை, எனக்கும் இல்லை. இன்று விஷயமே வேறு விதமாக இருக்கிறது. ஆனால் உங்களுக்காக நான் மீண்டும் ஒரு முறை இணங்க விரும்புகிறேன்" என்றாள் பானுமதி.

"எப்பொழுது வர முடியும் ? ரவியிடம் சொல்லிக் கொள்ள வேண்டுமா ?"

பானுமதி சிரித்தாள். பிறகு மெதுவாக, "வேண்டாமா ?" என்று கேட்டாள்.

குருசாமி தம் தவற்றை உணர்ந்து மீண்டும் சங்கடப்பட்டார்.

"நீங்கள் போங்கள். ரவியும், அவன் மனைவியும் சினிமாவிலிருந்து வரட்டும். வந்தவுடன் சொல்லி விட்டு வருகிறேன்."

"எப்பொழுது ?"

"நாளைக்கு மறுநாள் காலை ரயிலில் அங்கு இருப்பேன்."

"நானும் ரயிலடியில் உனக்காகக் காத்துக் கொண்டிருப்பேன்."

குருசாமி போய் விட்டார். பானுமதி தன் மேஜையடியில் அமர்ந்து தலையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். தெறித்துப் போட்டு தெறித்துவிடுமோ என்றுதான் அவள் அஞ்சினாள். அவள் நரம்புகள் துடிக்கும் ஒவ்வொரு சம்மட்டி அடிக்கும் தீயைப் பொறிகள் பளிச்சிட்டன.

குருசாமி பானுமதியின் அத்தை மகன்தான். அவர்கள் இருவரும் சிறு பிராயம்முதல் பழகி மணந்து இன்ப வாழ்க்கை நடத்தியவர்களே. ஆயினும் விதி என்பது எப்படியோ தன் மாயக் கரங்களினால் விசித்திர வலை விரித்து அவர்களைச் சிக்க வைத்து வேடிக்கை பார்த்துவிட்டது. மணம் ஆகி ஐந்து ஆறு வருடங்கள் மக்கட்பேறு இல்லாமலே இருந்தது. அவள் தகப்பனுடன் பிறந்தவர்களுக்கும் ஒரு ஆண் குழந்தை இருக்கவில்லை. குருசாமியையே நம்பி இருந்தது அந்தக் குடியின் வளர்ச்சி. பெரியவர்கள் கூடிக் கூடிப்



பேசினர்கள். மணி, மந்திர ஔஷதங்களெல்லாம் கையாளப்பட்டன. யாரோ ஒரு ஜோசியன் பானுமதிக்குப் புத்திரப் பேறே கிடைக்காது என்று கூறி விட்டான். அந்த ஒரு சொல் நன்றாகவே ஊன்றி விட்டது.

குருசாமிக்கு வேறு ஒரு பெண் பார்த்துத் திருமணம் செய்து வைப்பது என்று தீர்மானமாகிவிட்டது. இதைக் கேள்வியுற்றுப் பானுமதியின் தகப்பனார் தங்கையிடமும் தங்கை புருஷனிடமும் மனஸ்தாபம் கொண்டார். ஆயினும் ஒன்றும் பயனளிக்கவில்லை.




பானுமதி பிறந்தகம் வந்த சமயம் குருசாமி சீதாவுக்குத் தாலியைக் கட்டிவிட்டார். ஆனால் பானுமதியை மறக்கவோ, அவள் இல்லாமல் இருக்கவோ முடியாமல் தவித்தார் அவர். பிறகு, அவருடைய பிடிவாதத்தைக் கண்டு பெற்றோர் அவளையும் அழைத்து வந்து வைத்துக் கொள்ள அனுமதி தந்தனர். பானுமதியும் சீதாவும் ஒரே வீட்டில் வாழ்ந்தார்கள். அவர்கள் இருவர் மனத்திலும் என்ன இருந்திருக்குமோ, யாருக்குமே தெரியாது. இருவரும் எப்பொழுதும் புன்சிரிப்பு வாடாமல், ஒருவித மன உளைச்சலையும் வெளிக் காட்டாமல் வாழ்ந்தனர். பெரியவர்கள் செய்கையைக் கடவுளே பாராட்டியது போல் சீதா வந்து சில மாதங்களுக்குள் கருவுற்றாள். அந்த வீட்டில் அது ஒரு மகோத்ஸவமாகக் கொண்டாடப்பட்டது. குழந்தையும் ஆண் குழந்தையாகப் பிறந்ததும் வீட்டில் மகிழ்ச்சிக் கோலாகலத்துக்கு அளவே இல்லை.

இப்பொழுது அந்தச் சமயத்தை நினைத்துப் பார்க்கும்போது கூட, பானுமதிக்கு வேதனை விடவில்லை. ஒரு பெருமூச்சு உள்ளத்திலிருந்து எழுந்தது.

அதுவரையில் ஒரு நிறுசாக மனசைப் பக்குவப்படுத்திக் கொண்டு இருந்த பானுமதியின் மனம் பாகம் கெட ஆரம்பித்தது. சின்ன வயது முதல் அன்பு பூண்டு, மணந்துகொண்ட தன் அத்தானுக்கும் தனக்கும் பரிசுத்தமான காதலின் அடையாளமாக ஒரு குழந்தையில்லாமல் போய்விட்டதே என்ற எண்ணம் சீதாவின் மகன் சேகரின் கூடவே பிறந்து வளர ஆரம்பித்தது. அதற்கு முன், குருசாமி, மறுமணம் செய்துகொண்டபோது கூட அவ

ளுக்கு அவ்வளவு வேதனை இல்லை போலும். அவள் தன் அத்தான்மீது அவ்வளவு அன்பு கொண்டிருந்தாள். அவர் வாழ்வு தன் வாழ்வு என்று எண்ணினாள். தனக்கு மகன் பிறக்காவிட்டால் என்ன, அத்தானுக்கு வேறு ஒரு பெண்ணின் மூலமாக மக்கட்பேறு கிடைத்தால் அதுவும் தன் மகவுதானே என்று மனசைத் திருப்தி செய்துகொண்டாள்?

இதற்கெல்லாம் உறுதுணையாக இருந்தாள் இரண்டாம்தாரமாக வந்த சீதா. முதல் தாரம் இறந்தபிறகு இரண்டாம் தாரமாக வந்தால் அந்தப் பெண்ணின் நிலை அநேக விஷயங்களில் இரண்டாம் இடம் பற்ற வேண்டியிருக்கும். முதல் மனைவி இருக்கும்போதே அவளைப் புறக்கணித்து விட்டு இரண்டாந்தாரமாக வரும் பெண்ணின் நிலையே வேறு. எல்லாவற்றிலும் முதல் இடம் அவளுக்குத்தான். சலுகைகளுக்கு அளவே கிடையாது. தனக்குக் கிட்டவேண்டிய ஒப்பற்ற உயர்வான முதல் பீடத்தை இழந்தது மல்லாமல், அதை வேறு ஒரு பெண் தன் எதிரிலேயே அனுபவிப்பதையும் காண முற்பட்டது, பானுமதியின் உள்ளம். குருசாமியின் அருகில் இருந்தால் போதும் என்றே நினைத்தாள் அவள். மேலும் அவளுடைய அடிமனத்தில் ஓர் உறுதி இருந்தது. குருசாமியின் இதய பீடத்தில் தனக்குப் பிறகுதான் சீதா என்ற எண்ணம் இருந்தது. அதன் காரணமாக அவள் எதையும் பொருட்படுத்தவில்லை.

பானுமதி இப்பொழுது நிமிர்ந்து நோக்கினாள். பழைய படம் ஒன்று அவள் கண்ணில் பட்டது. அவளும் குருசாமியும் ஒரு முறை பெங்களூருக்குப் போனபோது எடுத்த படம் அது. அப்பொழுது சீதா முதல் பிரசவத்துக்காகப் பிறந்தகம் போயிருந்தாள். பானுமதி பழைய நாட்களையெல்லாம் மீண்டும் அசை போட்டாள்.

சீதா சேகரைக் கொண்டு வந்த பிறகுதான் உண்மையில் பானுமதியின் மனத்தில் போராட்டம் மூண்டது. தான் இதுவரை எண்ணியதெல்லாம் எங்கோ ஓடி ஒளிந்து கொண்டன. சீதாவிடம் பொறுமையோ, குழந்தை சேகரிடம் துவேஷமோ அவளைப் பீடிக்கவில்லை. ஆனால் குழந்தை சேகர் கையில் பிடிபடாமல் அழும் போது குருசாமி அவளை அழைத்து, "பானு! இந்தப் பயலை அவன் அம்மாவிடம் கொடு. ஒரே ரகளை செய்கிறான், பார்!" என்று கூறும்போது அவள் போலி முறுவல் ஒன்றைத் தருவித்துக் கொண்டு போய் மகவை வாங்குவாள்.

'பானு, இந்தப் பயல் படுத்துகிற பாட்டைப் பார்! அம்மாதான் வேணுமாம். அப்பா வேண்டாமாம்' என்று அவர் கரிசனமும், பெருமையும் தொனிக்கும் குரலில் தன்னிடம் பேசும் வாய்ப்பு இல்லையே என்ற ஏக்கம் கரையானைப் போல் அவளையறியாமல் அவள் உள்ளத்தில் புகுந்து அரிக்க ஆரம்பித்தது.

அவள் மனம் பாடுபட்டது போலவே சீதாவின் மனம் அலைபத் தொடங்கியது. பானுமதியிடம் முதல் நாள் முதல் விலகி, வெறுப்புற்றுப் பழகியிருந்தால் இப்பொழுது தன் தாய்மையை ஒரு வெற்றியாகக் கருதி இருக்கலாம். பானுமதியின் புன்முறுவலும், அன்பான குணமும் அவளை மிகவும் வேதனைக்கு ஆளாக்கின. பானுமதியின் உரிமைச் சொத்தைத் தான் அபகரித்து விட்டதுபோல் அவள் எண்ணினாள். அதனால் பானுமதியிடம் பேசக்கூட அவளுக்குக் கூச்சம் தோன்ற ஆரம்பித்து விட்டது. இதுவரையில் தங்கு தடையின்றி ஓரளவு அமைதியாக இருந்த வாழ்வு சிறிது கலக்கமுற ஆரம்பித்து விட்டது.

சீதாவின் அச்சத்தை வேறு விதமாக எண்ணினாள் பானுமதி. 'எவ்வளவுதான் நல்ல பெண்ணாக இருந்தாலும் தன்னுடைய பிள்ளை என்று ஆன பிறகு, கணவன், வீடு, வாசல் மற்றுமெல்லாமே தன் உரிமைச் சொத்து என்று தோன்றாதா? வீட்டில் முக்கிய மனுஷியாகிவிட்டாள். வெறும் மருமகளாக இருந்தவள், தாயாகி விட்டாள். நம்மிடம் பழையபடி அவள் பேச வேண்டும் என்று உண்டா என்ன?'

கணவனின் நிலைமை சங்கடத்துக்கு இலக்காகக் கூடாது என்ற ஓர் எண்ணம் மட்டுமே அவளை ஒரு கட்டுப்பாட்டில் வைத்திருந்தது. நிராசையினால் பிய்ந்து போயிருந்த அவளுடைய மனத்தை வெளியிலே காட்டாமல் இருந்தது அதிசயம்தான்.

பானுமதியின் மனம் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டது. தான் இனி அங்கு இருக்கக் கூடாது என்ற அளவுக்கு அவள் மனம் தீர்மானத்தை எட்டி விட்டது. ஆனால் எப்படி எங்கே போவது? பிறந்தகத்துக்குச் சென்றால் அவர்கள் கேலி செய்வார்கள். தங்கள் பேச்சைத் தட்டிக் கொண்டு கணவனிடம் போனாளே என்று சுட்டிச் சுட்டிக் காட்டுவார்கள். அன்று முதல் பானுமதிக்கு உள்ளத்தில் வேதனையும் யோசனையுமாக இருந்தது. அவள் இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருந்த நேரத்தில்தான் சீதாவும் குருசாமியும் மிகவும் நெருங்கி அன்பைப் பொழிந்தனர்.

இரண்டு மாதங்கள் இப்படியே சென்றன. பானுமதிக்கு அன்றாட ஊண் உறக்கம்கூடப் பாரமாக இருந்தது. இப்படியே இருக்கையில்தான் விதி ஒரு முடிச்சைப் போட்டு விட்டுச்



சிரித்தது. எத்தனை நாட்களாக ஏங்கியும் கிடைக்காததும், எந்தக் குறையினால் அவள் வாழ்வே மாறி வேதனைக்கு இலக்காகியதோ அந்தப் பேறு இப்பொழுது கிட்டியது. பானுமதியின் மனம் முன்னிலும் பாடுபட்டது.

பிரசவத்துக்கு அவளைப் பிறந்தகத்தினர் அழைத்துச் சென்றனர். ரவி பிறந்தான். குருசாமி ஆனந்தமே உருவாக ஓடோடியும் வந்தார், மகனையும் மனைவியையும்அழைத்துச் செல்ல. ஆனால் பானுமதி அவருடன் செல்ல மறுத்து விட்டாள். ஒரே பிடிவாதமாகத் தன் பிள்ளையுடன் பிறந்தகத்திலேயே தங்கி விட்டாள். ரவி பெரியவனானன். தன் தகப்பனார் குருசாமி என்பவர் வேறு மனைவியுடன் குடித்தனம் செய்கிறார்; அவ்வப்போது வரும் போது தன்னிடம் அன்பாக இருப்பார் என்ற வரையில்தான் அவன் அறிவான். அப்படியே அவன் தன் தாயாரின் அன்போடும் தாத்தா வீட்டினரின் பராமரிப்பிலும் கவலையற்று வாழ்ந்து வந்தான். ரவிக்கு வயது இருபது ஆகியது. மாமன் மகள் ராதாவிடம் அவனுக்கு இருந்த நட்பு காதலாக மாறியது. பெரியவர்களும் அதை ஆதரித்து அவர்கள் திருமணத்தைச் செய்வித்தார்கள்.

பழைய நினைவுகளைத் தள்ளி விட்டுப் பானுமதி நிமிர்ந்தாள். ஒரே நிலையில் இருந்து யோசித்ததில் அவள் கால்களும் கைகளும் மரத்துப் போய் விட்டன.

ரவி உள்ளே வந்தபோது பானுமதி மேஜையின்மீது தலையை வைத்துத் தன் இரு கைகளாலும் புதைத்துக் கொண்டிருந்தாள். ராதா புடவை மாற்ற உள்ளே போய் விட்டாள் போலும்! ரவி ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அமர்ந்து தன் அன்னையை மெதுவாகத் தொட்டான்.

பானுமதி திடுக்கிட்டுத் திரும்பினள். "என்னடா, ரவி! எப்பொழுது வந்தீர்கள்? கண் அயர்ந்து விட்டேனே?" என்று தடுமாறி விட்டாள்.

"வாசற் கதவெல்லாம் திறந்து கிடந்தது. அம்மா! உனக்கு உடம்புக்கு என்ன?"

"ஒன்றுமில்லையே, அப்பா! எனக்கும் வயசாகிறது அல்லவா? களைப்பாக இருக்கிறது. மேலும்......"

"மேலும் என்ன அம்மா?"

"யாரோ வந்திருந்தார்கள். என் சிநேகிதி ஒருத்திக்குப் பிரசவ சமயம். ஒத்தாசைக்குக் கூப்பிட்டார்கள்......"

"நீ என்ன கூலி ஆளா?"

"கூலிக்கு ஆள் கிடைப்பார்கள், ரவி. ஆனால் சொந்தமாக மனிதர்கள் கிடைப்பது தான் அரிது. ஒரு மாதம் போயிருப்பேன். பிறகு வந்து விடுகிறேன்."

"சீதா சித்திக்குப் பேறு காலமா?"

"எந்தச் சீதா? என்னடா சொல்கிறாய், ரவி?" என்றாள் பானுமதி ஒன்றும் தெரியாதவளைப் போல.

"அம்மா!! இதுவரை நான் உன்னிடம் அப்பாவைப் பற்றிப் பேசியதேயில்லை. இன்று அப்பா வந்திருக்கிறார். என்ன சொன்னார்? என்னிடம் சொல்லக் கூடாதா, அம்மா? எனக்கு வயசாக வில்லையா? என்னிடம் உனக்கு நம்பிக்கையில்லையா?"

"என்னடா, நான் ஒன்று பேசும் முன்னேயே நீ ஏதேதோ பேசிக் கொண்டே போகிறாயே?"

"அப்பா வந்தாரா, இல்லையா? நீ கூறும் சிநேகிதி சீதா சித்திதானே?"

"யார் சொன்னார்கள் அப்பா வந்தார் என்று......?"

"உன் முகம் சொல்கிறது, அம்மா. அப்பா வந்தார் என்பதை நீ கூறுமலே நான் உணர்ந்து விடுவேன். உனக்குத் தெரியாதோ என்னவோ? சின்ன வயது முதல் யாரும் சொல்லும் முன்னே உன்னைக் கண்ட மாத்திரத்தில் நான் உணர்ந்து கொள்வேன்."

"ரவி!"

"என்ன, அம்மா?"

"நான் உன்னுடைய அப்பாவிடம் போகப் போகிறேன்."

"உடனே போகத் தீர்மானித்து விட்டாயா?" என்று வியப்புடன் கேட்டான் ரவி.

## உத்தமரின் மறைவு

புதுதில்லி வட்டாரங்களில் திரு எஸ். எஸ். ராமச்சந்திரனை அறியாதவர்கள் இருக்க முடியாது. பொதுக் காரியங்களில் அவருடைய சளியா உழைப்பு பல ஸ்தாபனங்களுக்கு நன்மை செய்துள்ளது. பொதுஸ்தாபனங்களின் நிதி இலாகாவைப் பொறுப்பேற்று நடத்துவதில் அவருக்கு ஈடு இணையே கிடையாது. தென்னிந்திய சமாஜத்துக்கு அவர் செய்துள்ள சேவை ஏட்டில் அடங்காது. அப்பேர்ப்பட்ட உத்தமர் சென்ற மாதம் எட்டாம் தேதியன்று இறைவனடி சேர்ந்தார். ஹிருதய நோய் இந்தப் பிரபலஸ்தரை ஆட்கொண்டு விட்டது. தமிழ் இலக்கியத்தில் மிகுந்த ஈடுபாடுடைய திரு எஸ்.எஸ். ராமச்சந்திரன் அவர்களுடைய இளம் மனைவியாருக்கும் சிறு பாலகருக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்கள். ● ● ●



''ஆமாம், அப்பனே!''

ரவி பேசாமல் எழுந்து போய் விட்டான். மறு நாள் அவன் கிளம்பும்வரை அவன் பேசவே யில்லை. பானுமதி தன் சாமான்களைக் கட்டிக் கொண்டு கிளம்பினாள். அப்பொழுதுதான் ரவி ராதாவுடன் அருகில் வந்து நின்றான்.

''ரவி! ராதா! நான் வருகிறேன்'' என்றாள் பானுமதி.

பானுமதி ராதாவின் குனிந்த தலையை நிமிர்த்தினாள். ராதாவின் கண்களில் நீர் மல்கியிருந்தது.

''அத்தை! நீங்கள் திரும்பும்வரையில் நான் தூங்கவே மாட்டேன்'' என்றாள் ராதா நாத் தழுதழுக்க.

பானுமதி உறுதியாகக் கிளம்பி விட்டாளே தவிர, அவள் உள்ளத்தில் எத்தனையோ யோசனைகள் மோதின. அவளை எதிர்கொண்டழைக்கக் குருசாமி தயாராக ரயிலடிக்கு வந்திருந்தார். அவளைப் பரிவோடு வரவேற்றுக் கொண்டாள் சீதா. இப்பொழுது சீதா எட்டுக் குழந்தைகளுக்குத் தாயாகி விட்டிருந்தாள். சேகருக்கு இன்னமும் கல்யாணமாகவில்லை. அவனுக்கு அடுத்த பெண் லலிதாவுக்கு மணமாகி ஒரு குழந்தைகூட இருந்தது. எல்லாக் குழந்தைகளும் வாயார, ''பெரியம்மா'' என்று அழைத்தனர். பானுமதி சீதாவைத் தொடர்ந்து சமையலறைப் பக்கம் சென்றாள். சீதா தன் வீட்டு வேலையில் மூழ்கி விட்டாள். சற்றுக் கழித்து, சீதா உரத்த குரலில் தன் பெண்ணிடம், ''கமலி! அப்பாவை வந்து எண்ணெய் தேய்த்துக் கொள்ளச் சொல். என்னால் இனிமேல் வெந்நீர் காய்ச்ச முடியாது. சின்னக் குழந்தை மாதிரி......'' என்று பேச ஆரம்பித்தவள் பானுமதியைப் பார்த்து விட்டுச் சட்டென்று நாக்கைக் கடித்துக் கொண்டாள். பானுமதி சீதாவைக் கவனியாதவள் போல் கூடத்துப் பக்கம் சென்றாள்.

அப்பொழுது குருசாமி ஒரு கையில் பத்திரிகை நகங்க, ஒரு கையை மூன்று வயது ரமணி இழுக்க இறங்கி வந்து கொண்டிருந்தார். கமலி வந்து, ''அப்பா, அம்மா வந்து இனிமேல்......'' என்று உரக்கப் பேச ஆரம்பிப்பதற்குள் சேகர் அவள் செவியை நிமிண்டி விட்டான். இரு குழந்தைகளும் பானுமதியைக் கவலையுடன் பார்த்தன. இதனிடையே குருசாமியை இழுத்து வந்த குழந்தை மிட்டாய்க்குப் பிடிவாதம் பிடித்தது. பானுமதி அங்கிருப்பதைக் கண்டதும் அவர் முகத்தில் இலேசாக அசடு வழிய ஆரம்பித்தது.

அப்பொழுது பானுமதி தன் கணவனை நிதானமாக நோக்கினாள். ''பார்த்தீர்களா? நான் செய்த தீர்மானம் எவ்வளவு பொருத்தம் என்று?'' என்று கேட்டாள்.

''அன்று முதல் இங்கேயே இருந்திருந்தால் இந்தப் புதுமையே தோன்றியிராது.''

''உண்மையைக் காணாமல் கண்ணை இறுக மூடிக்கொள்வதில் ஒன்றும் பயனில்லை. நான் இங்கேயே இருந்திருந்தால் சீதாவும் இந்தச் சலுகையைப் பெற்றிருக்கமாட்டாள். நானும் நிம்மதியாக இருந்திருக்க மாட்டேன். ஒருவர் இருக்கையை மற்றவர் உணர்ந்தபடியே உணர்ச்சிகளுக்குக் கடிவாளம் போட்டபடி இருந்திருப்போம். இருவரும் மனம் விட்டுப் பழகியிருக்க முடியாது. நான் நாளைக்கே திரும்பிப் போகிறேன்.''

''பானு, உன் தியாகம்......''

''அன்பு இருக்கும் இடத்தில் தியாகம் பெரியதல்ல. உங்கள் மீதும் சீதா மீதும் உள்ள அன்புதான் என்னை இந்தத் தீர்மானத்துக்கு வரச் செய்தது. என்னை நம்புங்கள்.''

''அக்கா! அன்று ஒரு பொய்யைச் சொல்லி என்னை ஏமாற்றி விட்டாய். இன்று உன்னை நான் விடமாட்டேன்'' என்றாள் சீதா எங்கிருந்தோ வந்து.

''நம் மூவர் விஷயம் மட்டுமல்ல இது: நம் குழந்தைகளை எவ்வளவுதான் கட்டுப்பாட்டுடன் வளர்த்தாலும் அவர்களுக்குள்ள மூளை ஒவ்வொரு விதமாக வேலை செய்யும். இந்த மன ஒற்றுமை அப்பொழுது இராது. சீதா! அக்காவுக்காக இந்தச் சேவை செய். என்னை அனுப்பி விடு.''

''பானு......!''

''அக்கா சொல்வது சரிதான். அவள் போகட்டும். ரவி என்னை அன்புச் சித்தியாகவே நினைக்கட்டும்'' என்று தீர்மானமாகக் கூறினாள் சீதாவும்.

பானுமதி சீதாவைத் தழுவிக் கொண்டாள்.

குருசாமி தம் வேதனை தோய்ந்த முகத்தைத் திருப்பிக் கொண்டார். பானுமதி மறுநாள் கிளம்பிவிட்டாள். குருசாமி சீதாவிடம் கோபம் கொண்டார். ''கடைசியில் நீ என்னை மோசம் செய்து விட்டாய். நயவஞ்சகமாகப் பானுவை நீக்கி விட்டாய்'' என்று குற்றம் சாட்டினார்.

''அன்பு கொண்டுள்ள பெண்ணுள்ளம் உங்களுக்குத் தெரியாது. அது எத்தகைய தியாகமும் செய்யும். அக்கா இடத்தில் நான் இருந்திருந்தாலும் நானும் அதைத்தான் செய்திருப்பேன்.''

''நீயும் செய்திருக்கலாமே?''

''செய்திருக்கலாம். ஆனால் அவள் முந்திக் கொண்டு விட்டாள். அவ்வளவுதான். அக்காளுக்கு என் மீதோ தங்கள் மீதோ அணுவளவேனும் துவேஷம் இல்லை. அவள் அன்பு மகத்தானது!'' என்று கூறிய சீதாவின் கண்களில் கண்ணீர் பெருகியது.

அதே வாக்கியத்தை ரவி தன் தாயிடம் சொல்லிவிட்டு நின்றான். ''அம்மா! எனக்காக எவ்வளவு தியாகம் செய்கிறாய்? உனக்கு ஏற்ற மகனாக நான் இருப்பேனா?''

''ரவி! மனிதனுடைய குறைகளிலிருந்து தான் மேன்மை பிறக்கிறது. என் மனம் எண்ணி எண்ணித்தான் இந்த நிலையை எட்டியது. அன்பைக் கை விடாதே. அதுவேதான் உன் வாழ்வுக்கு விளக்கு.''

''அத்தை! உங்களுக்கு ஏற்ற மருமகளாகக் கடவுள் என்னை வைக்க வேண்டும் என்று ஆசீர்வதியுங்கள்'' என்று கூறி விட்டு ராதா வணங்கினாள்.

''நீ என் மருமகள்தானே? அத்தை போல் இல்லாமல் வேறு எப்படி இருப்பாய்? கடவுள் அத்தைக்கு அளித்த சோதனையை உங்களுக்கு அளிக்காமல் இருக்கட்டும்'' என்றாள் பானுமதி. அவள் முகத்தில் என்றுமில்லாத சாந்தமும் உவகையும் பளிச்சிட்டன.

# சக்தியற்றவர்களுக்கும், உடல்நிலை தேறிவருபவர்களுக்கும், ஏன், மேன்மேலும், ப்யூரிடி பார்லி கொடுக்கப்படுகிறது?




## ஏனெனில் ப்யூரிடி பார்லி

1. வியாதியால் சக்தியற்றவர்களுக்கும், உடல் நிலை தேறிவருபவர்களுக்கும், எளிதில் ஜீரணமாகும் தன்மையில் போஷாக்கை அளிக்கிறது.
2. சுத்தமாக அரைக்கப்பட்டு, நவீன விஞ்ஞான முறைப்படி தயார் செய்யப்படுகிறது. அதனால் அசல் உயர்ந்த ரக தானியத்தின் புஷ்டி தரும் சிறந்த சத்தைக் காப்பாற்றுகிறது.
3. காற்று உள்ளே புகாவண்ணம், சுகாதார முறைப்படி, டின்களில் அடைக்கப்படுவதால், சுத்தமாகவும் புதியதாகவும், பத்திரமாகவும் இருக்கிறது.




# ப்யூரிடி

இந்தியாவில் மிக அதிக அளவில் விற்பனையாகும் பார்லி

PTY 223

**இலவசம்**

'ஒவ்வொரு தாய்மார்களுக்கும் தெரிய வேண்டியது' என்ற புத்தகத்தை இலவசமாகப் பெற அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது) இலாகா F. B. P2. தபால் பெட்டி நெ. 9009 கல்கத்தா - 16 என்ற விலாசத்திற்கு எழுதவும்.

---

# கவலையற்ற
# சைகிள்
# சவாரிக்கு

# ராலே
# ராபின் ஹூட்



ஒவ்வொரு ஸென்–ராலே உற்பத்தியும் மிக்க உயர்ந்த சாமான்களைக் கொண்டு மிகுந்த நவீன விஞ்ஞான முறையில் தயாரித்தது; ஒவ்வொரு அங்கமும் தனித்தனியே பரிசோதிக்கப்பட்டது. இதன் பலன்–குறைந்த செலவில் கவலையற்ற சைகிள் சவாரி!

# ஸென்-ராலே



# ரத்தின ஹாரம்

வி. எஸ். சுப்பையா

"இதை உங்கள் பெட்டியில் வைத்துக் கொள்ளுங்கள். என்னிடம் இருந்தால் இந்தத் தடவை நிச்சயம் அடம் பிடித்து வாங்கிக் கொண்டு போய் விடுவாள்" என்று கூறியவண்ணம் தலையணைக்கு அடியில் வைத்திருந்த ரத்னஹாரத்தை எடுத்துக் கணவரிடம் கொடுத்தாள் சங்கரி அம்மாள்.

பரமேசுவரன் அதை வாங்கும்போது இலேசாகச் சிரித்துக் கொண்டார். "இதைப் பற்றி யெல்லாம் கவலைப்பட்டுக் கொண்டு இருக்காதே" என்று கூறினார்.



சங்கரி அம்மாளின் அழகிய கரங்கள் மிகவும் மெலிந்து போயிருந்தன. பெருக்காகப் போட்டிருந்த வளையல்கள் கீழே நழுவி விழுந்து விடாவண்ணம் அடிக்கடி அவைகளைப் பின்னுக்குத் தள்ளவேண்டி இருந்தது.

"நர்ஸிங் ஹோமுக்குப் போனால்தான் சரி, சங்கரி! டாக்டர் சொல்லி விட்டார்."

"இங்கில்லாத சௌகரியம் அங்கு ஏது?"

"அப்படி இல்லை. டாக்டர், நர்ஸ் இவர்கள் நேர் பார்வையில் இருப்பது போல் இருக்குமா, என்ன?"

"எனக்கு அங்கெல்லாம் போனால் கொஞ்சமும் பிடிக்காது" என்றாள் சங்கரி.

"ஒரு மாதம்தானே! பல்லைக் கடித்துக்கொண்டு அங்கே இருக்கணும்" என்று தன் மனைவிக்குச் சமாதானம் கூறினார் பரமேசுவரன்.

சங்கரி அம்மாளின் கண்களில் ஈரம் தோய்ந்தது; அவர் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

பரமேசுவரன் மத்திய சர்க்காரில் ஒரு பெரிய உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றவர். நகரத்தில் ஒரு நல்ல இடமாகப் பார்த்து வீடு கட்டிக் கொண்டு குடிபுகுந்தார். மூத்த மகள் உமாமகேஸ்வரிக்கு ஒரு பெரிய இடத்தில் செழிப்பாகக் கல்யாணம் நடத்தி விட்டார். இளையவள் திரிபுரசுந்தரி காலேஜில் படித்துக் கொண்டிருந்தாள்.

இதைத் தவிர, அவர்கள் வாழ்க்கையில் வேறு எவ்விதக் குறைவும் இல்லை. ஆனால் இளைய மகள் கல்யாணத்தைப் பற்றிய கவலை தானோ என்னவோ, அந்த அம்மாளைப் பலவீனப்படுத்திப் படுக்கையில் தள்ளிவிட்டது. நாளுக்கு நாள் உடம்பு மெலிந்து வந்தது. எல்லாம் சரியாகப் போய் விடும் என்று எண்ணியது போக இப்போது பெரிய வைத்தியம் பார்க்க வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. மூத்த பெண் உமாமகேசுவரிக்குச் சங்கரியின் உடல் நிலையைப் பற்றிப் பரமேசுவரன் விவரமாகக் கடிதம் எழுதினார்.

உமாமகேசுவரி திரிபுரசுந்தரியைப் போலச் சாது இல்லை. அப்பாவுக்கு மிகக் கோபமாக ஒரு பதில் எழுதினாள், தனக்கு முன்னமேயே ஏன் எழுதவில்லை என்று. தான் உடனே புறப்பட்டு வருவதாகத் தெரிவித்திருந்தாள்.

பரமேசுவரன் கலங்காத நெஞ்சம் படைத்தவர். மனைவியின் உடல் நிலைதான் அவரை மிகவும் கவலைக்குள்ளாக்கி விட்டது.

மத்திய சர்க்காரில் ராஜப்பிரதிநிதி காரியாலயத்தில் அவர் உத்தியோகம் வகித்தார். அவருடைய வேலைகளில் அப்போதுக்கப்போது சமஸ்தானங்களுக்கு விஜயம் செய்து கண்காணித்துவிட்டு வருவதும் ஒன்று.

ஒரு சமயம் கிழக்குப் பஞ்சாப் பிரதேசத்தில் உள்ள ஒரு சமஸ்தானத்துக்குப் போயிருந்தார். அந்தச் சமஸ்தானத்து மகாராஜா ஒரு வேட்டைப் பிரியர். இமயமலைச் சரிவிலுள்ள அவருடைய விஸ்தாரமான காடுகளில் அடிக்கடி வேட்டைக்குச்செல்வார்.

பரமேசுவரன் போன சமயம் அவர் வேட்டைக்குக் குறிப்பிட்டிருந்த நாள் வந்தது.

''வருகிறீர்களா, எங்களோடு வேட்டைக்கு?'' என்று அழைத்தார் மகாராஜா.

''எனக்குத் துப்பாக்கி ஒன்றும் சுடத் தெரியாதே!'' என்றார் பரமேசுவரன்.

''அதெல்லாம் பிரமாதமில்லை. ரொம்பவும் சுலபம். நான் சொல்லித் தருகிறேன். என்னுடன் கொஞ்சம் இந்தப் பக்கம் வாருங்கள்'' என்று சொல்லித் துப்பாக்கி பழகும் இடத்துக்கு அழைத்துச் சென்று துப்பாக்கியை எப்படிப் பிடிப்பது, எப்படிக் குறி பார்க்க வேண்டும், எப்படிச் சுடவேண்டும் என்பதெல்லாம் காட்டினார். அதன் நுட்பங்களைக் கவனித்துக் கொண்டார் பரமேசுவரன்.

மறு நாள் மகாராஜாவோடு அவரும் வேட்டைக்குச் சென்றார்.

வானளாவிய மரங்களுக்கு இடையில் செடி, கொடி, புதர்களை விலக்கிக் கொண்டு செல்வது ஒருவித சந்தோஷத்தைக் கொடுத்தது. மகாராஜா அடிக்கடி அந்தப் பிராந்தியங்களில் உலாவியவர். ஆகையால் விடு விடு என்று வேகமாகச் சென்றார். அவரைத் தொடர்ந்து சென்றார் பரமேசுவரன்.

ஒரு இடத்தில் ஒரு நீர்த் தடாகம்; தடாகத்தைச் சுற்றிக் கொஞ்சம் வெளி.

''இந்த இடம் வேட்டைக்குச் சரியான இடம். மிருகங்கள் தண்ணீர் குடிக்க இங்கு வரும்'' என்றார் மகாராஜா.

அந்தச் சமயம் தள்ளியிருந்த புதர் அருகே ஒரு புலி பதுங்குவது தெரிந்தது. இருவரும் மேலே நடக்காமல் அப்படியே நின்றார்கள்.

அது முரட்டுப் புலி. பதினாறு அடி வேங்கை என்று சொல்வார்களே, அந்த வர்க்கம். மகாராஜா துப்பாக்கியைப் பிடித்துக் குறி பார்த்தார். புலி திரும்பி ஓட ஆரம்பித்தது.

மகாராஜா சுட்டார். துப்பாக்கிச் சத்தம் பயங்கரமாக எதிரொலித்ததே தவிரக் குறி தவறி விட்டது.

ஆனால் புலி திரும்பி, அவர்களை நோக்கி ஆக்ரோஷமாய்ப் பாய்ந்துவந்தது. மகாராஜா அதை எதிர்பார்க்கவில்லை. நொடிப் பொழுதில் அவர்களை நெருங்கி விட்டது. மகாராஜா மீண்டும் சுட்டார். ஆனால் அதற்குள் புலி அவர்மீது பாய்ந்தது. மகாராஜா துப்பாக்கியோடு கீழே விழுந்து புரண்டார்.



ஆனால் பரமேசுவரன் கொஞ்சமும் தயங்காமல் தம் துப்பாக்கியால் சுட்டார். புலி சுருண்டு கீழே விழுந்தது. பின்பு எழுந்து ஓட ஆரம்பித்தது. அதற்குள் பரமேசுவரனின் இன்னொரு குண்டு அதை வீழ்த்தியது. கொஞ்சம் தயக்கம் ஏற்பட்டிருந்தால் புலி மகாராஜாவைக் கிழித்துப் போட்டிருக்கும்.

மகாராஜா அவரைத் தழுவிக் கொண்டு நன்றி தெரிவித்தார்.

அன்று அரண்மனையில் ஒரு பெரிய பாராட்டு விருந்து ஏற்பாடாயிற்று.

விருந்து முடிந்த பின்னர் மகாராஜா தம்முடைய குடும்ப ஆபரணங்களில் சிறந்த ஒன்றை-ரத்ன ஹாரத்தை-ஒரு பெரிய வெள்ளித் தாம்பாளத்தில் வைத்துப் பணிவுடன் அவருக்குப் பரிசாகச் சமர்ப்பித்தார்.

அதற்குத் தக்க முறையில் நன்றி தெரிவித்து விட்டுப் பரிசை ஏற்க மறுத்து விட்டார் பரமேசுவரன். 'நான் ஒரு சர்க்கார் உத்தி

யோகஸ்தன். இதை ஏற்பது முறையல்ல'' என்று அழுத்தமாகச் சொல்லி விட்டார். ஆனால் மகாராஜா அதோடு விடவில்லை. அதை நேரே ராஜப்பிரதிநிதிக்கு அனுப்பி அதன் காரணத்தையும் விவரமாகத் தெரிவித் திருந்தார். தம்முடைய நன்றி அறிதலாகப் பரமேசுவரன் ஏற்றுக் கொள்ளாவிடில் தமக்கு மனச் சமாதானம் ஏற்படாது என்றும், ஆகையால் அந்த ரத்தின ஹாரத்தை அவர் ஏற்றுக் கொள்ள உத்தரவு வழங்குமாறும் கேட்டுக் கொண்டார்.

ராஜப்பிரதிநிதியின் அந்தரங்கக் காரியதரிசி யிடமிருந்து கடிதத்தோடு ரத்தின ஹாரமும் வந்து சேர்ந்தால் அதை எப்படிப் பரமேசு வரன் மறுக்க முடியும்?

பின்னொரு சமயம் அவர் மகாராஜாவைச் சந்தித்தபோது அதன் சிறப்பை மகாராஜா ஆவலோடு எடுத்துரைத்தார். எந்தக் கார ணத்தைக் கொண்டும் அதை அழித்து வேறு ஆபரணமாக மாற்றக்கூடாதென்றும் அதில் பதித்திருந்த ரத்னங்கள் பல ஆயிரம் ரூபாய்கள் மதிப்புபெறும்என்றும் சொன்னார்.

எத்தனையோ ரத்தின வியாபாரிகளிடம் அதற்கு விலை மதிப் பிடக் கொடுத்தார்கள். நாளுக்கு நாள் அதன் மதிப்பு உயர்ந்ததே தவிரக் குறையவில்லை. வேலைப்பாடோ மிக நுட்பம் வாய்ந்ததாக இருந்தது. கைதேர்ந்த ரத்தினக் கலைஞன் ஒருவன் செய்த தலை சிறந்த ரத்தின ஹாரம் அது.

நான் முதலில் பிறந்தவள். ஆகையால் அதைத் தனக்குத் தந்து விடவேண்டுமென்று கேட்டுக் கொண்டிருந்தாள் உமாமகேசுவரி.



'குழந்தைக்குக் கழுத்தில் போட்டு அனுப்பு' என்று பரமேசுவரனும் சொல் லிப் பார்த்தார். சங்கரி அம்மாளுக்கு மனசு வர வில்லை. அது திரிபுரசுந்த ரிக்குத்தான் என்று அவள் முடிவு செய்திருந்தாள்.

சங்கரிஅம்மாள்மீது பர மேசுவரனுக்குக் கோபம் வரவில்லை. இரக்கம் ஏற் பட்டது. இருந்தாலும் தன்னைப் போல் அவளும் ஏன் கருத்து ஒருமிக்க வில்லை என்பது அவருக்கு விளங்க வில்லை.

ஒரு சந்தர்ப்பத்தில், ''சங்கரி! நம்முடைய வீடு குழந்தை இல்லாமல் வெறிச்சென்று இருந்தபோது நம் பிள்ளைக் கலியைத் தீர்த்து வைத்து நம்மை மகிழ் வித்தது, உமா இல்லையா?'' என்றார்.

சங்கரி பதில் பேசவில்லை. அந்தக் காலத் தைச் சங்கரி அம்மாள் மறந்து விட்டாளோ என்னவோ! ஆனால் பரமேசுவரனால் எப்படி மறக்க முடியும்!

'அப்பா எப்போ வருவார்?' என்று கேட்டு அருகிலேயே நின்று வழிமேல் விழிவைத்துப் பார்த்துக் கொண்டிருப்பாளே உமா! அந்த நாட்களைத்தான் மறக்க முடியுமா?

உமா பேசப் போவது தமிழ்தானா என்று சங்கரி அம்மாள் ஆவலோடு காத்துக்கொண் டிருந்த நாட்களும் அவள் ஏக்கத்தைக் கண்டு பரமேசுவரன் 'கிரி கிரி' என்று சிரித்த நாட்களும் இன்னும் அவருடைய மனத்தில் பசுமையாக இருந்தன.

அவர்களுக்குக் கலியாணமாகிப் பத்து வரு ஷங்கள் கழிந்து விட்டன. எல்லோரும் பொறாமைப்படும்படியாகப் பரமேசுவரனின் உத்தியோகம் மளமள வென்று உயர்ந்தது. ஆனால் அவர்கள் எதற்குத் தவம் கிடந்தார் களோ, அது கிட்டவில்லை.

தான் மலடியாகவே போய்விட நேருமோ என்று பயந்தாள் சங்கரி அம்மாள். கொஞ்ச நாட்கள் போன பின்னர் கணவரிடம்கூட அதைப்பற்றிப் பேச விருப்பம் இல்லாதவள் ஆனாள் சங்கரி அம்மாள்.

நீண்ட லீவு பெற்றுக் கொண்டு பரமேசு வரன் தம் மனைவியுடன் தென்னாட்டிலுள்ள முக்கிய ஸ்தலங்களைத் தரிசித்தார். தான தருமங்களைப் பல வழிகளில் செய்தார்.

ஸ்தல யாத்திரைக்குப் பிறகு இருவர் மனத் திலும் தங்கள் குறை நீங்கும் என்ற நம் பிக்கை பிறந்தது.

புதுடில்லியில் பரமேசுவரன் குடியிருந்த வீடு ஒரு பெரிய விஸ்தாரமான தோட்டத் தின் மத்தியில் அமைந்த ஒரு சிங்கார வீடு. வீட்டைச் சேர்ந்த வேலைக்காரர் தங்கும் விடுதிகளில் பஞ்சாப் நாட்டைச் சேர்ந்த ஒரு ஏழை தன் குடும்பத்துடன் வசித்து வந் தான். யாரோ இன்னொரு சர்க்கார் அதிகாரி சிபாரிசு செய்ததின் பேரில் விடுதிகளில் ஒன்றை அவனுக்குக் கொடுத்திருந்தார்.

ஏற்கனவே அவனுக்கு நான்கு குழந்தைகள். மேலும் மனைவி கர்ப்ப வதி ஆனாள். சங்கரி அம் மாள் பார்த்தும் பாரா மலும் அந்த ஏழைக்குப் பொருள்களைக் கொடுத்து ஆதரித்து வந்தாள்.

தோட்டக்காரன் மனை விக்கு உரிய காலத்தில் பெண் பிறந்தது.

இந்தக் குழந்தையிடத் தில்தான் சங்கரி அம்மா ளுக்கு அலாதி வாத் ஸல்யம். வேலைக்காரி குழந்தை என்று கூடப் பாராமல் அதை எடுத் துச் சீராட்டினாள்; விதம் விதமான ஆடை அணி வித்து மகிழ்ந்தாள். செல்லமாக உணவு ஊட் டினாள். எப்போதும் சங்கரி அம்மாள் மடியி லேயேதவழ்ந்துகொண்டிருந்தது அக்குழந்தை.

சங்கரி அம்மாள் இடுப்பிலுள்ள குழந்தை பரமேசுவரனை நோக்கித் தாவ ஆரம்பித் தது. அப்போதுதான் சங்கரி அம்மாள் மனம் விட்டுக் கலகலவென்று சிரித்தாள்.

''பார்த்தீர்களா, வேடிக்கையை? நான் இதைத் தூக்கிச் சுமந்து கொண்டிருப்பது போதாதென்று உங்களிடம் வேறு வர எத்த னிக்கிறதை?'' என்று சொன்னாள்.

பரமேசுவரன் ஆபீஸ் உடையைக் கூடக் கழற்றாமல் குழந்தையை வாங்கிக் கொண்டார். சமையல் அறைக்குச் சென்று காப்பி கலந்து கொண்டு வந்து மேஜையின்மீது வைத்து விட்டுக் குழந்தையை மீண்டும் வாங்கப் போகும் சமயத்தில் அது சங்கரி அம்மாளிடம் வர மறுத்து விட்டது. அந்தச் சமயத்தில்தான் பரமேசுவரனுக்கு அதன் மீது பற்று ஏற்பட்டது.



'இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ்' ஸ்தாபனத்தின் மானேஜிங் டைரக்டராகத் திரு ஜே. எம். லால் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார். திரு லால் பிரிட்டனில் சிறந்த முறையில் படித்துப் பரிசுகளுடன் இந்தியாவுக்குத் திரும்பியதுமே மேற்படி கம்பெனியில் சேர்ந்தார். தம்முடைய திறமையின்பயனாகஇப்பொழுது இந்தஉயரியபதவியை அடைந்திருக்கிறார். இவர் பதவிக் காலத்தில் ஐ. ஸி. ஐ. மேலும்மேலும் புகழ் அடையும் என்று எதிர்பார்க்கிறோம்!

"இந்தக்குழந்தையை நாமே வைத்துக் கொள்ளலாமா? அவர்களுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்தால் போதும். ஒரு வார்த்தையும் சொல்லாமல் சரி என்று சொல்லி விடுவார்கள்" என்று சொன்னாள் சங்கரி.

"அதெல்லாம் கொடுக்க மாட்டார்கள். குழந்தையைத் தானம் கொடுக்க எந்தப் பெற்றோரும் சம்மதிக்க மாட்டார்கள், சங்கரி!"

"இல்லை, இல்லை. நான் அவளிடம் இலேசாய்க் கேட்டுப் பார்த்தேன். 'உங்களுக்குப் பிடித்திருந்தால் வைத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்கிறாள். கொஞ்சம் அழுத்திக் கேட்டால் சரி என்று சொல்லி விடுவாள்."

பரமேசுவரனுக்கு அதைத் தடுத்து மறுக்க இஷ்டமில்லை. "உனக்குப் பிடித்திருந்தால் சரி. ஆனால் இந்தக் குழந்தையை நாம் இன்னொருவரிடமிருந்து வாங்கி வைத்திருக்கிறோம் என்று பிறருக்குத் தெரியக் கூடாது."

"இதுதானா பிரமாதம்! நான் வேண்டுமானால் குழந்தையோடு ஒரு வருஷம் பங்களூரில் போய் இருந்து விட்டு வருகிறேன்."

குழந்தை மீது தம் மனைவிக்கு எத்தனை பிரியம் என்று கண்டுகொண்டார்.

குழந்தையின் தாயிடம் சங்கரி அம்மாள் அதைப் பற்றிப் பிரஸ்தாபித்தபோது, அவள் எவ்வித மறுதளிப்பும் சொல்லவில்லை. 'அவள் சௌக்கியமாக வாழப் போகிறாள்' என்றுதான் சந்தோஷமடைந்தாள். சந்தோஷத்துடன் குழந்தையைக் கொடுத்து விட்டாள்.

ஆனால் பரமேசுவரன் அதை யாரிடமும் தெரிவிக்கக் கூடாதென்று சொல்லிப் பெற்றோர்களிடம் ஐயாயிரம் ரூபாயைக் கொடுத்தபோது அந்தப் பணத்தை வாங்க மிகவும் சஞ்சலம் அடைந்தார்கள். 'குழந்தையை விற்ற மாதிரி ஆகுமே' என்று தாய் கண்ணீர் உகுத்து விட்டாள்.

"இல்லை. உங்களுக்கு ஐந்து குழந்தைகள். இந்த ஒரு குழந்தை மட்டும் சௌக்கியமாக இருந்தால் மற்றக் குழந்தைகள் ஏன் கஷ்டப்பட வேண்டும்? அந்தக் குழந்தையின் நன்மையை உத்தேசித்து இதைப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றார்.

அதைக் கேட்டுப் பெற்றோர் மனத்தில் சமாதானம் ஏற்பட்டது.

உமாமகேசுவரியின்பெற்றோர்கள் சொந்தக் கிராமத்துக்குப் போன அன்றே பரமேசுவரன் மனைவி குழந்தையுடன் லீவில் பங்களூரில் போய் ஒரு மாதம் தங்கி இருந்தார். உற்றார் உறவினர்களுக்குச் சங்கரி அம்மாள் கர்ப்பவதியாக இருப்பதாகவும் டாக்டர் யோசனைப்படி பங்களூரில் கொஞ்ச காலம் தங்கப் போவதாகவும் தகவல் கொடுத்தார்கள்.

இவ்வாறாக, உமாமகேசுவரி அவர்கள் குறையைத் தீர்த்தாள்.

இருவரும் குழந்தையைச் சீராட்டும் போது வேடிக்கையாக ஒன்றைச் சொல்லிச் சங்கரி அம்மாளை அவர் பரிகசிப்பது வழக்கம். "எல்லாம் சரிதான், சங்கரி! உமா பேச ஆரம்பிக்கும்போது பஞ்சாபி பாஷை பேசுமே! அப்போது உன் குட்டு வெளியாகி விடுமே!"

சங்கரி அம்மாளுக்கு அது பரிகாசம் என்று படவே இல்லை, பாவம்!

அதிலிருந்து அவள் எப்போது வாய் திறந்து பேசப் போகிறாள் என்று சங்கரிக்கு ஏக்கம்.

அன்று ஒருநாள் பரமேசுவரன் ஆபீஸிலிருந்து வந்ததும், "இன்று உமா பேசியதை நீங்கள் கேட்கவில்லையே! 'அம்மா' என்று சொன்னாள்" என்றாள்.

"அப்படியா?" என்று ஆச்சரியப்படுபவர் போல் நடித்தார்.

இன்னொரு நாள்:

"நீங்கள் சொன்னது சரியில்லை. நான் ஒரு பஞ்சாபி குழந்தையைக் கூப்பிட்டு உமாவோடு என்னவெல்லாமோ பஞ்சாபி பாஷையில் பேசச் சொன்னேன். உமாவுக்கு அந்தக் குழந்தை சொன்னது ஒன்றுகூடப் புரியவில்லை, போங்கள்" என்றாள் சங்கரி.

இவ்வாறாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள் உமா.

அன்று அவளுடைய பிறந்த தினம். இப்போதுதான் சங்கரி அம்மாள் அந்த ரத்தின ஹாரத்தை எடுத்து அணிவித்தாள். அப்போது எடுத்த புகைப்படம்தான் இன்றும் நடு ஹாலை அலங்கரித்துக் கொண்டிருப்பது.

உமாவுக்கு ஐந்து வயது நிறைந்தபோது திரிபுர சுந்தரி பிறந்தாள். உமாவுக்குத் தனக்கு ஒரு தங்கை கிடைத்ததைப் பற்றி அளவு கடந்த சந்தோஷம். அவள் தொட்டிலை விட்டு அகலாமல் அதன் அருகேதான் அவள் விளையாட்டெல்லாம்.

ஓய்வு பெற்றுக்கொண்ட பின்னர் சென்னையில் வந்து வீடு கட்டிக் கொண்டு குடி புகுந்தார் பரமேசுவரன். உமாமகேசுவரியின்

ஒப்பற்ற அழகைக் கண்டு பல இடங்களிலிருந்து பெண் கேட்டு வந்தார்கள்.

பரமேசுவரன் மதுரையிலிருந்து வந்த ஒரு பெரிய இடத்து வரனுக்கு உமாவை நிச்சயம் செய்து, கல்யாணம் நகரமே பிரமிக்கும்படியாக நடந்தது.

அவளைப் பற்றி நினைக்கும் போதே பரமேசுவரனுக்கு ஆனந்தம் பொங்கும். 'எங்கு பிறந்தவள், எப்படி வந்து எங்கு போய் வாழ்கிறாள். இது என்ன மாயமோ!' என்று ஆச்சரியப்படுவார்.

ஆனால் சங்கரிக்கு மட்டும் அந்த வாத்ஸல்யம் ஏன் குறைந்து போயிற்று? தன்னைவிட உமா மீது உயிரையே வைத்தவள் சங்கரி அல்லவா? அதை எப்படி மறந்தாள் சங்கரி?

★

'பாம் பாம்' என்று இரைந்துகொண்டு கார் வாசல் முன் வந்து நின்றது. அதிலிருந்து மான் போல் துள்ளிக் கொண்டு இறங்கி ஓடி வந்தாள் உமா.

அவளைக் கண்ட திரிபுரசுந்தரி 'அக்கா' என்று ஓடி வந்து கட்டிக்கொண்டாள்.

ஆனால் ஒன்றையும் கவனிக்காமல் 'அம்மா! அம்மா!' என்று இரைந்து கொண்டு சங்கரி அம்மாள் படுத்துக் கொண்டிருந்த அறைக்கு ஓடினாள் உமா.

சங்கரி அம்மாள் இருந்த நிலையைக் கண்டதும் 'ஓ'வென்று அழுது விட்டாள்.

"உமா! நல்லவேளையாக நீ வந்து விட்டாய். உங்க அம்மா பிடிவாதம் உனக்குத்தான் தெரியுமே. நர்ஸிங்ஹோமுக்குப் போக மாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறாள். இனிமேல் நீயாச்சு உங்க அம்மாவாச்சு."

"அம்மாவிடம் கேட்டுக் கொண்டுதான் அவளை நர்ஸிங் ஹோமுக்கு அனுப்புவதோ? நன்றாக இருக்கிறது. இன்று சாயந்திரமே போகிறாளா இல்லையா என்று பாருங்கள், அப்பா!" என்றாள் உமா.

அன்று மாலையே சங்கரி அம்மாள் நர்ஸிங் ஹோமுக்குப் போனாள். "அம்மாவோடு நான் இருக்கிறேன், சுந்தரி; நீ கவலைப்படாதே" என்று தங்கைக்கும் அப்பாவுக்கும் தைரியம் கூறினாள் உமா.

வைத்தியம் ஒழுங்காக நடந்தது. இருந்தாலும் சங்கரிக்கு ஏனோ உடம்பு தேறவில்லை.

டாக்டர் இறுதியாகச் சொன்னார்: "இரத்தம் கட்டினால்தான் சரிப்படும். வேறு எந்த மருந்தாலும் பலத்தைக் கொண்டு வர முடியாது" என்று.

பலருடைய இரத்தத்தைச் சோதித்தார் டாக்டர். யாருடையதும் பொருந்த வில்லை. உமாமகேசுவரியின் இரத்தம்தான் பொருந்தியிருந்தது. உமாவுக்குச் சந்தோஷம்.

இரத்த ஊட்டம் ஆனபிறகு சங்கரி அம்மாள் முகத்தில் தெளிவு பிறந்தது. இரண்டு மாதங்களுக்குள் பழைய சங்கரி ஆனாள். அவளை வீட்டுக்கு அழைத்து வந்தாயிற்று.

நோயில் கிடந்து தேறிய மாமியாரைப் பார்ப்பதற்கும், உமாவை அழைத்துச் செல்வதற்கும் உமாவின் கணவன் மதுரையிலிருந்து வந்திருந்தான்.

அன்று எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

"அம்மா! என் மைத்துனர் எம். ஏ. முதல் வகுப்பில் தேறியிருக்கிறாராம்."

சங்கரி அம்மாள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் உமா பேச ஆரம்பித்தாள்:

"அப்பா! உங்களுக்கு ஆட்சேபனை இல்லை என்றால் திரிபுரசுந்தரியை அவருக்கு மணம் முடித்துக் கொள்ளத் தயாராம். இவர் சொல்கிறார்" என்றாள் கணவனைச் சுட்டிக் காட்டிக்கொண்டு.

மாப்பிள்ளை பேச ஆரம்பித்தார்: "மாமா! தம்பிக்குப் பெண் பார்க்கும் பொறுப்பை அம்மாவும் அப்பாவும் உமாவிடம் விட்டிருக்கிறார்கள். யார் சம்மதமும் வேண்டாம்; உமாதான் ஒப்புக் கொள்ள வேண்டும்."

"பிள்ளை வீட்டுக்காரியும் நான், பெண் வீட்டுக்காரியும் நான். இது வேடிக்கையாக இல்லையா அப்பா?" என்று இன்னொரு கேள்வியைப் போட்டாள் உமா.

"உன் இஷ்டப்படியே செய், அம்மா! உன் தங்கையின் கல்யாணப் பொறுப்பை நீ ஏற்றுக் கொண்டுவிட்டால் அதைவிட வேறு என்ன வேண்டும் எங்களுக்கு?" என்றார் பரமேசுவரன்.

சங்கரி அம்மாள் கண்களில் நீர் துளித்தது.

மறுநாள் மாலை ரயிலில் உமாவும் அவள் கணவனும் புறப்பட ஏற்பாடு. கார் வந்து வாசல் முன் நின்றது.

"அம்மா! போய் வருகிறேன்; அப்பா போய் வருகிறேன்" என்று நமஸ்கரித்தாள் உமா. "சுந்தரி! அம்மாவை அப்பா சரியாகக் கவனிக்க மாட்டார். நீதான் பார்த்துக் கொள்ள வேணும். தெரிந்ததா?"

"சரி, அக்கா!"

காரில் போய் ஏறிக் கொண்டாள் உமா.

சங்கரி அம்மாள் பரமேசுவரனைக் குறிப்போடு பார்த்தாள்.

"என்ன?" என்று கேட்டார் பரமேசுவரன்.

"நான் உங்களிடம் கொடுத்த ரத்ன ஹாரம் எங்கே?"

"அது ஏன் இப்போது?"

"அதை என்னிடம் கொடுங்கள்."

அதை எடுத்து வருவதற்கு உள்ளே சென்றார் பரமேசுவரன்.

"உமா, இங்கே இறங்கி வா கொஞ்சம்."

"ஏன் அம்மா?" என்று கேட்டவாறே இறங்கி வந்தாள் உமா.

இதற்குள் அந்த ரத்னஹாரத்தை எடுத்துக் கொண்டு வந்து சங்கரியின் கையில் கொடுத்தார் பரமேசுவரன்.

அதை வாங்கி உமாவின்கழுத்தில் அணிந்து, "பத்திரம்! ஜாக்கிரதையாகப் போட்டுக் கொள்" என்றாள் சங்கரி அம்மாள்.

"அம்மா! தங்கைக்கு இது நன்றாக இருக்குமே?" என்றாள். உண்மையில் அதைப் பற்றியே அவளுக்கு ஞாபகம் இல்லை.

"அதெல்லாம் அவளுக்கு வேறு இருக்கிறது, உமா. நீ முதலில் பிறந்தவள். இது உன் சொத்து. உனக்குத்தான்" என்றாள் கனிவுடன் சங்கரி அம்மாள்.

மான் போல் துள்ளி ஓடிப் போய்க் காரில் ஏறிக் கணவன் அருகில் அமர்ந்தாள் உமா.

கார் புறப்பட்டது.

பெற்றோர்கள் கார் மறையும் வரையில் அதையே பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

# முனிசாமியின் டாக்ஸியும்

# மோபில்காஸும்

முனிசாமியின் டாக்ஸிக்கு மலைப்பாதையென்றால் பிடிக்கவே பிடிக்காது. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க இளைத்துக் கொண்டு மிகுந்த சிரமத்துடன்தான் ஏறிச் செல்லும். ஆனால் ஒருநாள் இரண்டு 'புள்ளிகளை' ஏற்றிக்கொண்டு அது வேகமாக மலைப்பாதையில் சென்றது. டாக்ஸியை விட்டு இறங்கிய பிரயாணிகள் 'பரவாயில்லையேப்பா உன் வண்டி!' என்று முனிசாமியைப் பார்த்து சொன்னார். 'வண்டியா ஓடுது சாமி! அதில் போட்ட மோபில்காஸின் வேலையிது!' என்று பதிலளித்தான் முனிசாமி.




மோபில்காஸ்... சுகமாக ஓடுவதற்கு மோட்டாருக்கு அவசியமான ஒரு **ஸ்டான்வாக்** தயாரிப்பு

**ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி**

(யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது. கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 5779

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon